# சங்க இலக்கியங்களில் விருந்தோம்பல்

மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழக

முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக

அளிக்கப்பெறும் ஆய்வேடு


## மு.வசந்தி

பதிவு எண் : 9169






வெ.ப.சு. தமிழியல் ஆய்வு மையம்

ம.தி.தா.இந்துக் கல்லூரி, பேட்டை,

திருநெல்வேலி - 627 010



மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம்

திருநெல்வேலி - 627 012

ஜனவரி - 2019

# சான்றிதழ்

**'சங்க இலக்கியத்தில் விருந்தோம்பல்'** என்னும் தலைப்பில் **திருமதி.ஆ.வசந்தி (பதிவு எண் : 9169)** என்பவர் தன்னிச்சையாக செய்துள்ள இவ்வாய்வு ம.தி.தா.இந்துக்கல்லூரி, வெ.ப.சு.தமிழியல் ஆய்வு மையத்தில் மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகத்திற்காக என் நெறியாளுகையின் கீழ் ஆய்வு செய்யப்பட்டது என்றும் இவ்வாய்விற்காக வேறு எந்தப் பட்டமும் வேறு எந்த ஆய்வாளருக்கும் அளிக்கப்படவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

**மு. வசந்தி,**
**பதிவு எண்: 9169**
**முழுநேர முனைவர் பட்ட ஆய்வாளர்,**
**வெ.ப.சு. தமிழியல் ஆய்வு மையம்,**
**ம.தி.தா.இந்துக்கல்லூரி,**
**திருநெல்வேலி - 627010.**

**ஆ.ரந்திர்குமார்,**
**M.A., M.Phil., C.G.T., D.N.C.C., Ph.D.,**
**உதவிப் பேராசிரியர்,**
**வெ.ப.சு.தமிழியல் ஆய்வு மையம்**
**ம.தி.தா.இந்துக்கல்லூரி,**
**திருநெல்வேலி - 627010.**

# நன்றியுரை

**“சங்க இலக்கியங்களில் விருந்தோம்பல்”** என்னும் தலைப்பில் ஆய்வு செய்ய வாய்ப்பளித்த திருநெல்வேலி மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகத்திற்கும் ம.தி.தா.இந்துக்கல்லூரி ஆட்சிக்குழுவினருக்கும், முதல்வா் அவா்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்விற்கு ஊக்கமும், உற்சாகமும் அளித்த தமிழ்த்துறைத் தலைவா் பேராசிரியா் முனைவா் ஆ.செல்லப்பா அவா்களுக்கும், ஆய்விற்கு தேவையான ஆலோசனைகளை வழங்கி ஊக்கப்படுத்திய மனோன்மணியம் சுந்தரனாா் பல்கலைக்கழக தமிழ்த்துறை பேராசிரியா்களுக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

இவ்வாய்வில் எனக்கு நெறியாளராக இருந்து ஆய்வு முயற்சிகளை ஊக்குவித்து உற்சாகப்படுத்திய, ஆய்விற்கு தேவையான அனைத்து உதவிகளையும் அன்புடன் நல்கிய தமிழ்த்துறை உதவிப் பேராசிரியா் ஆ.ரந்திா்குமாா் அவா்களுக்கு என் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுப்பணிக்கு ஊக்கமளித்து ஒவ்வொரு நாளும் உற்சாகப்படுத்தி ஆலோசனைகள் வழங்கிய ம.தி.தா.இந்துக்கல்லூரியின் இணைப்பேராசிரியா்கள் மற்றும் உதவிப்பேராசிரியா்கள் அனைவருக்கும் என் மனமாா்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கல்விப் பணியில் என்னை முழுமையாக ஈடுபடுத்திய என் தந்தை வ.முருகேசன் அவா்களுக்கும் பேருதவி புரிந்த என் குடும்பத்தினருக்கும் என் நெஞ்சாா்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

குறுகிய காலத்தில் கணிப்பொறி மூலம் தட்டச்சுப் பணிகளைச் செவ்வனே முடித்து இவ்வாய்வேட்டின் புறவடிவங்கள் அமைய உதவிய எக்சலெண்ட் மற்றும் ருத்ரா கணினி நிறுவனத்துக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தங்கள் உண்மையுள்ள

மு.வசந்தி

## ஆய்வு சுருக்கம்

### சங்க இலக்கியங்களில் விருந்தோம்பல்

இலக்கியங்களில் வாழ்வியல் சார்ந்த நிகழ்வுகளைப் பதிவு செய்துள்ளனர். காலத்திற்கு ஏற்ப உணவு வகைகளும் மாறுகின்றன. திணைகள் அடிப்படையில் சங்க இலக்கியங்களில் இரண்டு பிரிவாக பிரித்து ஒன்று அகம். மற்றொன்று புறம் என பிரித்தனர். விருந்தோம்பல் தமிழரின் தலையாய கடமையாக விளங்குகிறது. சங்க இலக்கியங்களில் விருந்தோம்பல் எங்ஙனம் பதிவு செய்யப்பட்டுள்ளது என்பதைக் குறித்தும் அதற்கான உணவு பொருட்கள் அவற்றின் பின்புலம் ஆகியவற்றை ஆராய்வதே இவ்வாய்வேட்டின் நோக்கமாகும்.

### ஆய்வின் கருதுகோள்

சங்க இலக்கியங்களில் விருந்தோம்பல் பண்பு இன்றியமையாத பணியில் போற்றப்பட்டுள்ளது என்பதே இவ்வாய்வின் கருதுகோளாகும்.

### ஆய்வின் எல்லை

சங்க இலக்கியங்கள் என பெயர் பெற்ற எட்டுத்தொகை நூல்களும், பத்துப்பாட்டு நூல்களும் இவ்வாய்வின் எல்லையாகும். பரிபாடல் என்னும் நூல் இவ்வாய்வுக்கு உட்படுத்தப்படவில்லை.

### ஆய்வின் அணுகுமுறை

இவ்வாய்வில் பகுப்பாய்வு முறை, சமூகவியல் ஆய்வு முறை, விளக்கவியல் முறை என மூன்று விதமான ஆய்வு அணுகுமுறைகள் பின்பற்றப்பட்டுள்ளன.

### ஆய்வு பகுப்புகள்

இவ்வாய்வில் முன்னுரை, முடிவுரை நீங்கலாக 7 இயல்கள் இடம் பெற்றுள்ளன.

ஆய்வு முன்னுரை

1. விருந்தோம்பல் விளக்கம்
2. குறிஞ்சி நிலத்தில் விருந்தோம்பல் கூறுகள்
3. முல்லை நிலத்தில் விருந்தோம்பல் கூறுகள்
4. மருத நிலத்தில் விருந்தோம்பல் கூறுகள்
5. நெய்தல் நிலத்தில் விருந்தோம்பல் கூறுகள்
6. பாலை நிலத்தில் விருந்தோம்பல் கூறுகள்
7. புறத்திணையில் விருந்தோம்பல் கூறுகள்

முடிவுரை

என்பனவாகும். தொடர்ந்து துணை நூற்பட்டியல் பின்னிணைப்புகள் இணைக்கப்பட்டுள்ளது.

ஆய்வாளர் நெறியாளர்

# பொருளடக்கம்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம் | - | அகநானூறு |
| அகத் | - | அகத்திணை |
| ஐங் | - | ஐங்குறுநூறு |
| கலி | - | கலித்தொகை |
| குறிஞ்சி | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறு | - | குறுந்தொகை |
| சிலம்பு | - | சிலப்பதிகாரம் |
| சிறும்பாண் | - | சிறுபாணாற்றுப்படை |
| தொல், அகத், சூத் | - | தொல்காப்பியம் அகத்திணையியல் சூத்திரம் |
| தொல் புறத் சூத் | - | தொல்காப்பியம் புறத்திணையியல் சூத்திரம் |
| ப | - | பக்கம் |
| பக் | - | பக்கங்கள் |
| பட், பட்டின | - | பட்டினப்பாலை |
| ப.ஆ | - | பதிப்பாசிரியா |
| பதி | - | பதிற்றுப்பத்து |
| புறம் | - | புறநானூறு |
| பெரும் | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருநர் | - | பொருநர் ஆற்றுப்படை |
| மது, மதுரை | - | மதுரைக்காஞ்சி |
| மலை | - | மலைபடுகடாம் |
| மு.கூ.நூ | - | முன்னர் கூறப்பட்ட நூல் |
| முல்லை | - | முல்லைப்பாட்டு |
| மேலது | - | மேலே கூறப்பட்ட நூல் |
| வே.வ. | - | வேட்டுவ வரி |

# ஆய்வு முன்னுரை

## முன்னுரை

இலக்கியங்கள் வாழ்வியல் சார்ந்த அனுபவங்களைப் பதிவு செய்கின்றன. படைப்பாளி தன் படைப்பில் கண்டு அனுபவித்த நிகழ்வுகளை மொழிப்படுத்துகிறான். தமிழ் இலக்கிய வரலாற்றில் பழமையான இலக்கியங்கள் என்று அழைக்கப்படுவன சங்க இலக்கியங்கள். தமிழின் கவிதை மரபு இங்கிருந்துதான் தொடங்குகிறது. சங்க கால சமூகத்தை அறிய சங்க இலக்கியங்கள் துணைச் செய்கின்றன. சங்ககால மக்களின் பழக்க வழக்கங்களையும் அறிந்து கொள்ள முடிகின்றன. மனிதனின் வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருட்களில் ஒன்று உணவு ஆகும். உணவின்றி உயிர் வாழ்வது கடினம். காலத்திற்கு ஏற்ப உணவு வகைகளும் மாறுகின்றன. சங்க கால மக்களின் உணவு பழக்கத்தை அறிந்துகொள்ள பயன்படும் கருவி சங்க இலக்கியங்கள் ஆகும்.

திணைகள் அடிப்படையில் தோன்றிய சங்க இலக்கியங்கள் இரண்டு பிரிவாக பிரிக்கப்பட்டுள்ளன. ஒன்று அகம், மற்றொன்று புறம். அகம் ஐந்திணைகளின் பொருட்களை வைத்து கவிதை ஆக்குகிறது. ஐந்திணைகளும் முப்பொருட்களைக் கொண்டமைகின்றன. கருப்பொருள் என்பது முப்பொருளில் ஒன்றாகும். அக்கருப்பொருளில் உணவு என்பது ஒன்றாகும். ஐந்திணைகளிலும் உணவு குறித்தான செய்திகள் இடம்பெற்றுள்ளன. இவ்உணவுப் பொருட்களை உண்பதற்காக அக்கால மக்கள் செய்த விதம், மரக்கரி, இறைச்சி உணவு வகைகள், நீர்ம உணவுகள் போன்றவை சங்க இலக்கியங்களில் தெளிவாக பயின்று வந்துள்ளன.

புறத்திணை இலக்கியங்களில் மன்னர்களின் ஈகை தன்மை, உணவளிக்கும் கொடைத் தன்மை ஆகியவற்றைப் பதிவு செய்யும் போது உணவு அரசியல் ஆக்கப்படுகிறது. உணவு என்பது நாட்டு வளம், நகர்வளம், வீட்டின் செல்வம்

என்னும் பொருளை உள்ளடக்கியுள்ளதாகக் காட்சி அளிக்கப்படுகிறது. உணவைக் கொடையாக கொடுக்கும் போது உணவின் வலிமையை உணர்த்துவதோடு கொடுத்து உண்ணும் பண்பையும் காட்டுகிறது. இதிலிருந்துதான் விருந்து என்னும் சொல் தோன்றியிருக்க வேண்டும். அகத்திணை இலக்கியங்களும் புறத்திணை இலக்கியங்களும் உணவைப் பற்றி கூறும் போது தனி மனித உணவாக இருந்தாலும் அதனை வறியவருக்கும், சுற்றத்தாருக்கும் கொடுத்து உண்ணும் முறையைச் செய்தனர்.

இந்நிகழ்வைப் பல சங்க கவிதைகள் படம்பிடித்து காட்டுகின்றன. இங்கிருந்து விருந்தோம்பல் மரபு தொடங்குகிறது. உலக நீதி நூல் என்று வருணிக்கப்படுகின்ற திருக்குறளில் கூட விருந்தோம்பல் என்னும் அதிகாரத்தை வள்ளுவர் படைத்துள்ளார். இதிலிருந்து விருந்தோம்பும் பண்பு முக்கியத்துவப்படுகிறது. இப்பண்பு தான் தமிழரின் தலையாய பண்பாடான விருந்தோம்பலாக வளரலாயிற்று. இத்தகைய விருந்தோம்பல் சங்க இலக்கியத்தில் எங்ஙனம் பதிவு செய்யப்பட்டுள்ளது என்பதைக் குறித்தும் அதற்கான உணவு பொருட்கள் அவற்றின் பின்புலம் ஆகியவற்றை ஆராய்வது தேவையாக அமைகின்றது. இத்தேவையை பூர்த்தி செய்யும் வண்ணம் இவ்வாய்வேடு முயற்சி செய்கிறது.

**ஆய்வு தலைப்பு :**

“சங்க இலக்கியங்களில் விருந்தோம்பல்” என்பது இந்த ஆய்வின் தலைப்பாகும்.

**ஆய்வு நோக்கம் :**

தமிழர் தம் வாழ்வின் பண்பாட்டு கூறுகளில் முக்கியத்துவம் பெற்ற விருந்தோம்பல் என்னும் பண்பு சங்க இலக்கியத்தில் எவ்வாறெல்லாம் பயின்று வந்துள்ளன. திணைகளின் அடிப்படையில் விருந்தோம்பல் நடைபெற்றதா, திணை மயக்க நிலையில் உணவு பொருட்கள் எங்ஙனம் சமைக்கப்பட்டு

விருந்தோம்பப்பட்டது. பண்டமாற்று முறையில் உணவுப் பொருட்கள் வாங்கப் பெற்றதா, விளைப் பொருட்கள் மூலம் உற்பத்திச் செய்யப்பட்டதா? என்னும் பொருண்மைகளில் சங்க இலக்கியத்தை அடிப்படையாக்கி விளக்குவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

**ஆய்வு எல்லை :**

சங்க இலக்கியங்கள் என பெயர் பெற்ற எட்டுத் தொகை நூல்களும், பத்துப் பாட்டு நூல்களும் இவ்வாய்வின் எல்லையாகும். பரிபாடல் என்னும் நூல் ஆய்வு எல்லைக்கு உட்படுத்தப்படவில்லை.

**ஆய்வின் கருதுகோள் :**

சங்க இலங்கியங்களில் விருந்தோம்பல் பண்பு இன்றியமையாத பண்பாகப் போற்றப்பட்டுள்ளது என்பதே இவ்வாய்வின் கருதுகோளாகும்.

**ஆய்வு அணுகுமுறை**

இவ்வாய்வில் பகுப்பாய்வு முறை, சமூகவியல் ஆய்வு முறை, விளக்கவியல் முறை என மூன்று விதமான ஆய்வு அணுகுமுறைகள் பின்பற்றப்பட்டுள்ளன.

**ஆய்வின் ஆதாரங்கள்**

ஆய்வு நிகழ்த்த அடிப்படையாக அமையும் ஆதாரங்களை முதன்மை ஆதாரங்கள் என்றும் அதற்கு துணையாக எடுத்துக் கொள்ளப்படும் ஆதாரங்கள் துணைமை ஆதாரங்கள் என்றும் அழைக்கப்படும்.

**முதன்மை ஆதாரம்**

இவ்வாய்வின் முதன்மை ஆதாரங்களை எட்டுத் தொகையில் காணும் எட்டு நூல்களும், பத்துப்பாட்டில் காணும் பத்து நூல்களும் முதன்மை ஆதாரங்களாகும்.

**துணைமை ஆதாரம்**

இந்த ஆய்வேட்டு உருவாக்கத்திற்குத் துணைமைப் புரிந்த நூல்கள் என்பவை சங்க இலக்கியங்கள் குறித்து வெளிவந்த கட்டுரைகள், இதழ்களில்

வெளிவந்த ஆய்வுகள், அகராதிகள், ஆய்வேடுகள், இலக்கண நூல்கள், திறனாய்வு நூல்கள் ஆகியவை துணைமை ஆதாரங்கள் ஆகும்.

**ஆய்வு முன்னோடிகள்**

சங்க இலக்கியங்கள் தொடர்பான ஆய்வுகள் அன்று முதல் இன்று வரை தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. இதற்கு முன்பு செய்யப்பட்ட ஆய்வேடுகள் ஆய்வின் முன்னோடியாக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

ஆய்வுகள்

1. அ.மு.பரமசிவானந்தம், சமுதாயமும் பண்பாடும் - 1972
2. சே.நமசிவாயம், தமிழர் உணவு - 1981
3. டாக்டர்.அ.கிருட்டிணன், தமிழர் பண்பாட்டியல் - 1992
4. இரா. புகழேந்தி, நாட்டுப்புற மக்களின் உணவும், பழக்கவழக்கங்கள் - 2002
5. தங்கமாரி விருந்தோம்பல் பண்பும் தமிழரின் மாண்பும் - 2008

**ஆய்வேட்டின் நடை**

இவ்வாய்வேட்டில் முடிந்த வரை தமிழ் ஆய்வு நடை பின்பற்றப்பட்டுள்ளது. கலை சொல் விளக்கத்திற்கு வேண்டி ஆங்கில நடையும் பின்பற்றப்பட்டுள்ளது.

**ஆய்வு பகுப்புகள்**

இவ்வாய்வில் முன்னுரை, முடிவுரை நீங்கலாக 7 இயல்கள் இடம் பெற்றுள்ளன.

ஆய்வு முன்னுரை

1. விருந்தோம்பல் விளக்கம்
2. குறிஞ்சி நிலத்தில் விருந்தோம்பல் கூறுகள்
3. முல்லை நிலத்தில் விருந்தோம்பல் கூறுகள்
4. மருத நிலத்தில் விருந்தோம்பல் கூறுகள்
5. நெய்தல் நிலத்தில் விருந்தோம்பல் கூறுகள்

6. பாலை நிலத்தில் விருந்தோம்பல் கூறுகள்
7. புறத்திணையில் விருந்தோம்பல் கூறுகள்

முடிவுரை

என்பனவாகும்.

**இயல் விளக்கங்கள்**

முன்னுரையில் ஆய்வுத் தலைப்பு, ஆய்வின் நோக்கம், ஆய்வின் கருதுகோள், ஆய்வு எல்லை, ஆய்வு அணுகுமுறை, ஆய்விற்கான முதன்மை ஆதாரங்கள், துணைமை ஆதாரங்கள், ஆய்வின் மொழிநடை, ஆய்வின் முன்னோடிகள், இயல் பகுப்புகள், இயல் விளக்கங்கள் ஆகியன எடுத்துரைக்கப்படுகின்றன.

"விருந்தோம்பல் விளக்கம்" என்னும் முதல் இயலில் விருந்தோம்பல் சொல்லின் விளக்கம், விருந்து குறித்து அகராதி தரும் பொருள் விளக்கம் ஓம்பல், ஓம்புநர் விளக்கங்களும், விருந்து பற்றிய செய்திகள், அகத்திணையில், புறத்திணையில் விருந்து செய்திகளும், நாட்டுப்புற வழக்காறுகள், விடுகதைகள், விருந்து குறித்த பழமொழிகளும், 'குடும்பம்', குடும்பம் என்பதற்கு அகராதி தரும் விளக்கம், வேளாண் சமூகத்தையும் விருந்தோம்பல் பண்பையும் சங்க இலக்கியங்கள் குறித்த அறிமுகங்கள் என இவ்வியலில் ஆய்வு செய்யப்படுகின்றது.

'குறிஞ்சி நிலத்தில் விருந்தோம்பல் கூறுகள்' என்னும் இரண்டாம் இயலில் குறிஞ்சித் திணைக்கான முதல், கரு, உரி என்னும் முப்பொருள் விளக்கங்களும் உரையாசிரியர்களின் விளக்கங்களும் தரப்படுகின்றன. மக்களின் பிரிவு தன்மைகளும், குறிஞ்சித் திணையின் உணவு பொருட்கள், வேடர்களின் வேட்டையாடும் திறன்கள், வேட்டையாடி கிடைத்த இறைச்சிப் பொருட்களைத் தம் சுற்றத்தாருக்கும் விருந்தோம்பும் திறன்களையும் விளக்கப்படுகின்றது. ஆடுபலி நிகழ்ச்சி, வழிபடும் முறையும், கானவரின் விருந்துத் தன்மையும், அசைவ உணவு,

தலைவனின் உணவுகள், குறுநில மன்னர்களின் ஈகையும், விருந்தோம்பல் செய்தியும் ஆய்வு செய்யப்பட்டு விளக்கப்படுகிறது. குறிஞ்சி நில மக்களின் உணவாகத் தேன், கிழங்கு வகைகள், இறைச்சி ஆகியவற்றை குறிப்பிடுகின்றன. இம்மூன்றும் குறிஞ்சி நிலத்தில் இயற்கையாக கிடைப்பவை. குறிஞ்சி நிலத்தில் இனக் குழுவை வாழ்க்கையை சுட்டுகிறது. அவர்கள் இயற்கை உணவை உண்ட செய்தியை அறிய முடிகிறது. மன்னர்களின் நிலம் பற்றிய செய்திகள் அங்கு விளையும் உணவுப்பொருட்கள், தலைவியின் பண்பு நலன்களும் அவள் விருந்து செய்ததையும், அறிய முடிகின்றது. விளைப்பொருட்களில் நீர் உணவான தேன், பால், கள் பற்றிய செய்திகளும், கடவுளுக்கு விருந்து படைத்தல் தொடர்பான நிகழ்ச்சிகளும் சான்றுகளுடன் விளக்கப்படுகின்றன.

ஓரி தன்னை பாடிவரும் பாணர் முதலியவர்களுக்கு விருந்தளிக்கும் உள்ளம் உடையவன் என்றும், பாரியின் பறம்புமலை சிறப்பும், அவன் படை வீரர்களுக்கு உணவு அளித்த விதமும் அதியனின் ஈகைத் திறமும் தலைவியின் பண்பு நலனும் விருந்து செய்யும் தன்மையையும் அறியலாம். கள்ளின் சிறப்புகள் குறித்த செய்திகள் சான்றுடன் விளக்கப்படுகின்றன.

'முல்லை நிலத்தில் விருந்தோம்பல் கூறுகள்' என்ற மூன்றாம் இயலில் முல்லைத் திணைக்கான முப்பொருள்கள், உரையாசிரியர்களின் விளக்கங்களும் தரப்படுகின்றன. சங்க இலக்கியத்தில் முல்லை நிலம் உணவு உற்பத்தி முறைகளில் காடுகளை அழித்து வேளாண் தொழில் செய்யத் தொடங்குதலும், காடுகளில் உலவும் விலங்குகளை வேட்டையாடுதலும், வேட்டையாடும் போது கிடைக்கப் பெற்ற இறைச்சி உணவுகளை இடையர்கள் சுற்றத்தாருடன் உண்ட முறைகளும் குறுநில மன்னர்களின் ஈகை தன்மைகள், பண்டமாற்று முறையில் விருந்து படைத்தலும் முல்லை நில மக்களின் வாயிலாக புலப்படுத்துகின்றன. மக்கள் குறித்த பதிவுகள் ஆயர் இடையர், கோவலர் மற்றும் அகராதி பதிவுகளும் குறிப்பிடப்படுகின்றது. மகளிர் பங்கும் தலைவியின் விருந்தோம்பல் பண்புகள்

முல்லை நிலம் குறித்து விளக்கப்படுகின்றது. முல்லை நிலத்தில் பிற மக்கள், உணவுப்பொருட்கள், அரிசி உணவுகள், தானிய உணவுகள், தன்னை இறைச்சி உணவுகள் பயிர்செய்தல் நிலையையும் ஆய்வு செய்யப்படுகின்றது. விருந்து படைத்தலும் நீர் உணவுகளும், விருந்து கொடுப்பதில் ‘கள்’ குறிப்பிடத்தக்க ஒன்றாக அமைவதையும் அறிய முடிகின்றது. அரிசி உணவுகளில் பால், வெண்ணை, தயிர், கள், மோர்க்குழம்பு, பால், கூழ், நெய் ஆகிய உணவுப் பொருட்களையும் அரிசி சோறும் முக்கிய இடம் பெறுதலை சான்றுடன் விளக்கப்பட்டுள்ளன. பத்துப்பாட்டு முல்லை நிலத்தில் தானியம், நீர்நிலைகள், கள்ளுணவு, பற்றிய செய்திகள் விளக்கப்படுகின்றன.

‘மருத நிலத்தில் விருந்தோம்பல் கூறுகள்’ என்னும் நான்காம் இயலில் மருதத்திணையின் முப்பொருட்கள், உரையாசிரியரின் விளக்கங்கள் கூறப்படுகின்றது. வேளாண் பொருட்கள் உணவு, அரிசி உணவுகள் வேளாண் செய்தொழிலின் சிறப்புகள், அரிசி உணவுகள் உணவு சமைக்கப் பயன்படுத்தும் பாத்திரங்கள் தன்மைகளும் விளக்கப்படுகின்றன. அசைவ உணவுகள், மருத நிலத்தில் பாணர் இன மக்களின் விருந்தும் மீன்கலம், உழவர்களின் உணவு சமைப்பதையும் பண்டமாற்று முறையில் உணவு சேமித்தலும் ஆற்றுவளமும், நாட்டு வளமும் மீன் பிடி தொழிலில் உழவர்களின் நிலைகளையும் காண முடிகிறது. நீருணவும் கள் தன்மையும் அதன் சிறப்பு பெயர்களின் கள் உண்ட நிகழ்ச்சியும், கள் விருந்தில் இடம் பெற்ற செய்திகளும் வழிபாட்டில் கள், அசைவ உணவுகள் முக்கியப் பங்கு பெறுவதும், திருமண விருந்தில் உளுந்தம் பருப்பு சோற்றை வழங்கும் நிகழ்வை அறியலாம். கள் உழவர்களுக்கு மட்டுமல்லாமல் வீட்டிற்கு வரும் விருந்தினருக்கு விருந்து அளித்ததையும், கள் உழவர்களுக்கும் மட்டுமல்லாமல் வீட்டிற்கு வரும் விருந்தினர்க்கு அளித்ததை பற்றியும், உணவு வகைகளின் செய்திகளும் சான்றுகளுடன் விளக்கப்பட்டுள்ளன.

‘நெய்தல் நிலத்தில் விருந்தோம்பல் கூறுகள்’ என்னும் ஐந்தாம் இயலில் நெய்தல் திணையின் முப்பொருட்கள், உரையாசிரியர்களின் விளக்கங்கள், நெய்தல் நிலம் சுட்டும் மக்கள் பிரிவினர்கள், பரதவர்களின் வாழ்வியல் பொருளாதாரமும், உப்பு வணிகர்களின் உணவு முறையும் அவர்களின் விருந்தோம்பும் முறைகள், பண்டமாற்று முறையில் கிடைத்த உணவுப் பொருட்களை உணவு சமைத்து தமக்கும் சுற்றத்தாருக்கும் கொடுக்கும் நெய்தல் நில தலைவியின் விருந்தோம்பல் பண்பும், விருந்தில் இடம் பெற்ற உணவுகளும், அரிசி உணவுகளும், வேட்டையாடி கிடைத்த உணவுப் பொருட்களை சுற்றத்தார்க்கு பங்கீட்டு கொடுக்கும் நிலையும் அறிய முடிகிறது. பலி உணவு செய்திகள், மன்னனின் ஈகை சிறப்பும், உப்பு விற்று விருந்து படைத்தல் நிகழ்ச்சிகள் நடைபெறுவதையும் காணமுடிகிறது. மீன் வேட்டை நிகழ்ச்சியும், மீன் உணக்கல் மீன் விற்று பொருள் சேர்த்தல் செய்தியும் , நெய்தல் திணையில் நெல் முக்கிய உணவாக கருதப்பட்டது அரிசிச் சோற்றோடு மீன் கலந்து உண்ணும் முறையும், வறியவர்களுக்கு மீனை பங்கிட்டு கொடுக்கும் நிலையும், இறைச்சி உணவாக மீன் இடம் பெறுதலையும், நெய்தல் நில மக்களின் விருந்தோம்பல் பண்பும் குறிப்பிடப்பட்டுள்ளன.

‘பாலை நிலத்தில் விருந்தோம்பல் கூறுகள்’ என்னும் ஆறாம் இயலில் பாலைத் திணைக்கான முப்பொருள் விளக்கங்கள், பாலை நிலம் நடுவு நிலைமையும், குறிஞ்சி மலைப்பகுதி, முல்லை காட்டுப்பகுதி பாலைநில மக்களின் வாழ்வியலும் காண முடிகின்றது. மழவர்கள், உழவன், மறவர்கள் வாழ்க்கை நிலையையும் உப்பு வணிகர் உப்பு விற்று உணவு சேகரித்தல், மக்கள் இயல்பு வேட்டையாடப்பட்ட விலங்கின் தசையை உமணர்கள் சமைத்து உண்ணும் நிலை, அரிவு உணவுகளை தசை உணவோடு சேர்த்து பொங்கிய உணவினை கூட்டமாக சேர்ந்து உண்ணும் நிலையும், அறிய முடிகின்றது. பாலை நிலத்தில் உணவு வகைகள் அரிசி உணவும் மீன்பொறியல் சேர்த்து உண்டமையும், புல்லரிசி, செந்நெற்சோறும் இறைச்சி கறி வைத்து விருந்து படைத்தலும், பலியிடும் குயவன்,

குயவனின் சிறப்பும், பலிச் சோற்றைக் காக்கை உண்ணுதல் முறையும் வழக்கில் உள்ளதையும் அறிய முடிகின்றது. பலிகொடுக்கும் நிகழ்வில் இடம்பெறும் செய்திகள், வீரர்களுக்கு நல்கல் வழிபாட்டு நிகழ்வும், மறவர் இனத்தைச் சார்ந்த வீரர்களுக்கு விருந்தோம்பல் முறையும், மழவர்களின் உணவு, உணவு உண்ணும் முறையும், எயின மக்களின் விருந்தோம்பல் பண்பையும் காணமுடிகிறது. ஆறலை கள்வர்களின் உணவு, மானின் உணவும் விருந்தோம்பல் பண்பும், நீர் உணவு உண்ணும் தன்மையும், பாணர்களுக்கு விருந்து அறியமுடிகின்றது. தொல்காப்பியத்தில் இடம்பெறும் எயினர் உணவின் முள்ளம் பன்றி இறைச்சி உண்டதையும், கள்வரின் உணவு கனிகளும் மரப்பட்டையும் இடம் பெறுவதை அறிய முடியும் ஆறலைக் கள்வர்கள் பாலைநிலம் வழியாக செல்பவர்களை கொன்று தனக்கு உணவாக பயன்படுத்தியதை அறிய முடிகிறது. நீர் உணவில் கலங்கிய நீர் உண்டு வாழும் முறையும் தலைவனைப் பிரிந்து தலைவி பால் உணவு அருந்துவதையும் பாலை நிலத்தில் அறிய முடிகிறது. கரும்புச்சாறும் முக்கிய உணவுப் பொருளாக விளங்குவதை அறிய முடிகிறது. பட்டினப்பாலையில் சோறு உணவு வடித்த செய்தியையும், மீன் உணவை குறித்து செய்திகள் இடம்பெறும். புறநூலில் அரிசி உணவு முக்கிய உணவாக கருதப்படுகிறது. மண்ணும் மக்களும் விருந்தோம்பலில் இடம்பெறும்.மீன்களின் வகைகளையும் அவற்றை சுட்டு தின்பதையும் ஊன் இறைச்சியை விற்கும் நிலையையும், உண்ணும் நிலை ஆகியவற்றைத் தெளிவாக விளக்கப்பட்டுள்ளன.

புறத்திணை இலக்கியத்துள் விருந்தோம்பல் கூறுகள் என்னும் ஏழாம் இயலில் புறத்திணைகள் அறிமுகம் உரையாசிர்களின் விளக்கம் புறத்திணை இலக்கியத்தில் சோறு உணவின் முக்கியத்துவம் மக்களின் விருந்தோம்பும் முறைகளும் விளக்கப்படுகின்றன. ஊண் இறைச்சி அதிகமாக பயன்படுத்துவதை அறியலாம். தொன்ம உத்தியில் சோறு தன்மையும், சோற்றுணவு புலவனுக்கு அளித்தல் நிகழ்ச்சிகளையும், மன்னர்களின் ஈகை, அசை உணவுகள் இடம் பெறும் இடங்கள்,

அரிசி உணவுகள் மட்டுமின்றி தானிய உணவுகள் பயிரிட்டு பொருட்களைக் கொண்டு விருந்து படைத்தலையும் காணமுடிகிறது. திணை உணவுகள் புறப்பாடல் கூறும் தன்மையும், அசை உணவுகள், புலவர்களுக்கு வேந்தர்கள் கொடுக்கும் உணவு முறைகள், மீனை உண்ணும் நாரை, குருகுகள், கொக்கு, நீர்நாய் விலங்குகளின் உணவு விருந்தும், அசைவ உணவில் இடம்பெற்ற உணவு பொருட்களும், நீர் நிலைகள் தன்மையும் வரலாற்று செய்தியும், நீர்நிலைகள் தன்மையும் வரலாற்று செய்தியும், நீர் உணவுகளில் கள்ளும், கரும்புச்சாறு அதிக இடங்களில் பயின்று வந்துள்ளதையும் அறிய முடிகின்றது. ஆற்றுப்படை நூல்களில் விருந்தோம்பும் பண்பும், அரசனின் ஈகை திறனும் விருந்துயளித்தலும் நெல், திணை உணவுகளும், இறைச்சி உணவுகள் வீரர்களுக்கு விருந்து அளித்த செய்தியும், எயின மகளிர் விருந்தோம்பும் பண்பும், இறைச்சி உணவுகள், மீனும் விருந்தோம்புகின்ற உணவாகத் கருதலாம் என சான்றுகளுடன் விளக்கப் பட்டுள்ளன.

புறத்திணை நூலில் அரிசி உணவு முக்கிய உணவாக இடம் பெறுதலையும், மன்னனும் மக்களும் தங்கள் அன்பினை வெளிப்படுத்தும் விதமாக விருந்தோம்பல் நடைபெற்றதையும், புறத்திணை மக்களின் விளை நிலங்களில் விளையும் பொருட்களை கொடுத்து கள்ளை பெறும் விதமும், முகம் தெரியாத பாணருக்கு விருந்து அளித்தலும், புறத்திணைகளில் விருந்து உபசரிப்பும், ஆற்றுப்படை நூல்களின் மூலம் அறியலாம். விருந்து உபசரிப்பு புற இலக்கியங்களின் வாயிலாக தெள்ளத்தெளிவாகிறது.

புற இலக்கியங்களில் தானிய உணவு வகைகளில் வரகு, கொள்ளு, அவல், கரும்பு, அவரை, புல்லரிசி, திணை ஆகிய உணவுகளை பயன்படுத்தும் முறையும், பழங்களும், காய்களும் விருந்தோம்பலில் முக்கிய இடத்தை பிடித்தன. நீர்நிலைகளில், நீர் உணவுகளும், தேன், கள், கரும்புச்சாறு முக்கிய இடம்

பெறுகிறது. கள் விருந்தோம்பலில் முதல் விருந்தாக இடம் பெறுவதை அறியலாம்.

முடிவுரையில் ஒவ்வொரு இயலின் இறுதியிலும் ஆய்வின் போது கிடைக்கப் பெற்ற ஆய்வு முடிவை எடுத்துரைக்கிறது. மேலாய்வு களங்களையும் சுட்டுகிறது. பின்னிணைப்பாக ஆய்வில் பயன்படுத்தப்பட்ட நூல்களை அகர வரிசையில் தொகுத்து தரப்பட்டுள்ளன.

# இயல் - 1

# விருந்தோம்பல் விளக்கம்

## 1.0 முன்னுரை

மனிதர்களின் வாழ்வு ஆதாரங்களில் ஒன்று உணவு ஆகும். உலக உயிர்கள் அனைத்து நீரின்றி வாழ்வதில்லை. உணவு என்பது உண்பது என்பதோடு நிற்காமல் ஒரு சமுதாயத்தின் அடையாளமாக மாறுகிறது. இதற்கு விருந்தோம்பல் முறையே காரணம் என்றால் அது மிகையல்ல. இம்முறை அந்தந்த நிலத்தின் இனத்தின் பண்பாட்டை அடியொற்றி அமைகிறது. வாழ்வுச் சூழல் என்பது முக்கியமான வாழ்வு ஆதாரங்களுள் ஒன்று. இவ்வியலில் உணவு, விருந்து, விருந்தோம்பல் என்ற சொல்லாட்சிகளின் விளக்கத்தைக் காண்பதே நோக்கம் ஆகும்.

## 1.1 விருந்தோம்பல் விளக்கம்

விருந்தோம்பல் என்ற சொல்லின் விளக்கத்தை ஐந்து தலைப்புகளின் கீழ் விளக்கப்படுகின்றன அவை

1. விருந்தோம்பல் அகராதி விளக்கம்
2. விருந்தோம்பல் குறித்த தொல்காப்பியத்தின் விளக்கம்
3. நாட்டுப்புற வழக்காறுகள்
4. உணவு உற்பத்தியும் விருந்தோம்பலும்
5. சங்க இலக்கியங்கள் ஓர் அறிமுகம் என்பனவாகும்.

### 1.1.1 விருந்தோம்பல் அகராதி விளக்கம்

விருந்தோம்பல் என்னும் சொல் இரண்டு சொற்களால் ஆன இணைப்புச் சொல் ஆகும். விருந்து + ஓம்பல் என்பதே விருந்தோம்பல் ஆகும். எனவே இவ்விரண்டு சொற்கள் அகராதிகளில் பின்வருமாறு விளக்கப்படுகின்றன.

### 1.1.1.1 விருந்து

கழகத் தமிழ் அகராதி 'விருந்து' என்னும் சொல்லிற்குக் கீழ்காணுமாறு பொருள் தருகிறது.

"விருந்து புதுமை; உணவளித்துப் போற்றுதல்; விருந்துண்போம்"[1] என்ற பொருளை கொடுக்கின்றது.

'விருந்து' என்னும் சொல்லிற்கு க்ரியாவின் தற்கால தமிழகராதி.

'விருந்து பெ.∴1:1 (ஒருவரை அல்லது பலரை அழைத்து) உபசரித்து வழங்கும் சிறப்பான உணவு : Feat, dinner 2. புலன்களை மகிழ்விக்க கூடியதாக அமைவது entertainment''[2] என்று பொருள் தருகின்றது.

லிப்கோவின் ஆங்கிலம், ஆங்கிலம் தமிழ் அகராதி 'guest' என்று குறிப்பிடுவதை, guest : arisitor (tobe) entertained

"விருந்தாளி, விருந்தினர், அதிதி"[3]

என்ற பொருளைக் கொடுக்கிறது.

வின்சுலோவின் தமிழ்-ஆங்கில அகராதி 'விருந்து' என்ற சொல்லிற்கு நான்கு விதமான பொருளை நவில்கின்றது'

1. "விருந்து S.A.Feast, a banquet, அதிதியர்க்கு இடும ஊன்
2. A guest அதிதி
3. Anovelty புதுமை
4. One of the eight beauties of composition see வனப்பு"[4]

என்று பொருள் தருகின்றது.

வி.விசுவநாத பிள்ளையின் தமிழ் - ஆங்கில அகராதி.

1. விருந்து, புதுமை anovlty
2. எண் வனப்பில் ஒன்று. One of the eight beauties composition.
3. அதிதியாக்கிகுஉண்டி a feast a banact[5]

என்று பொருளைக் கொடுக்கிறது.

நா.கதிரைவேற் பிள்ளையின் தமிழ் மொழி அகராதி

"விருந்து புதிதாய் வந்தோர்க்கு உணவு கொடுத்தல் புதுமை"[6] என்று பொருள் விளம்புகிறது.

### 1.1.1.2 ஓம்பல்

'ஓம்பல்' என்னும் சொல் அல்ஈற்று தொழில் சொல். 'ஓம்பல்' என்னும் சொல்லை அகராதி எங்ஙனம் கையாண்டுள்ளது என்பதை காணலாம்

க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி 'ஓம்பு' என்னும் சொல்லைக் கையாண்டுள்ளது.

"ஓம்பு பேணுதல், "Project"[7] என்று விளக்கம் தருகிறது.

நா.கதிரைவேற் பிள்ளையின் தமிழ் - தமிழ் அகராதி 'ஓம்பல், ஓம்புதல்' என இரண்டு சொற்களை விளம்புகிறது.

"ஓம்பல் - ஓம்புதல் உண்டாக்கல், பாதுகாத்தல் வளர்த்தல்"[8] என பொருள் தருகிறது.

வி.விசுவநாத பிள்ளையின் தமிழ் ஆங்கில அகராதி ஓம்பல் என்னும் சொல்லிற்குப் பின்வருமாறு பொருள் கூறுகின்றது.

1. “ஓம்பல் - பாதுகாத்தல் taking care it protecting preserving

2. வளர்த்தல் Cherishing”[9]

கழகத் தமிழ் அகராதி ஓம்பல் என்னும் சொல்லிற்கு விரிவான விளக்கத்தை இரத்தின சுருக்கமாக விளம்புவதை

“ஓம்பல் - பாதுகாத்தல், விலக்கல், நீக்கல்

ஓம்புதல் - தவிர்த்தல், விடுதல், போற்றுதல் வராமல் காத்தல், காவல் செய்தல், வளர்த்தல், பரிகரித்தல்” என்றும்

ஓம்ப - கா “பேணு”[10]

என்று பொருள் கூறுகின்றது. விருந்தாளி, விருந்தினர், அதிதி என்ற பெயர்களில் விருந்து பெறுபவர்கள் அறியப்படுகிறார்கள்.

### 1.1.1.3 ஓம்புநர்

விருந்து செய்பவரை ‘ஓம்புநர்’ என்று கூறுவதைச் சங்க இலக்கிய பொருட்களஞ்சியம் தொகுதி ஒன்றில் பதிவுச் செய்துள்ளதை ஓம்புநர் : காப்போர் “பரிசில் பெற்ற கூத்தன் பரிசில் பெறவரும் கூத்தனிடம் நீ செல்லும் வழியில் எதிர்ப்படுபவரையும் நாடு காக்கும் வீரரிடம் யாம் நன்னனைக் காணச் செல்கின்றோம் என்று கூறினால் தசைகளையும், கிழங்குகளையும் மிகுதியாகத் தந்து உண்ணச் செய்து உம்மை ஓம்புநர் காப்பார் அல்லது வருந்தமாட்டார் எனக் கூறினான். பாண்டிய நாட்டில் உள்ள பிசிராந்தை என்னுயிர் ஓம்புநர் ஆவான். அவன் யான் செல்வமுடைய காலத்து வாரானாயினும் துன்புறுங் காலத்துத் தவறாமல் வருவான் என்று வடக்கிருந்த கோப்பெருஞ்சோழன் சான்றோர்க்குக் கூறினான்.”[11] என்று புறப்பாடல் விளக்கம் கூறுகிறது. இங்கு ‘விருந்தோம்பல்’ என்ற சொல்லின் விளக்கமும், “விருந்தினர்'', “ஓம்புநர்” முதலிய சொல்லின் பொருளும்

ஒன்றுபட பொதிந்துள்ளது ‘விருந்தோம்பல்’ என்ற சொல்லையும் அகராதிகள் எடுத்தாண்டுள்ளன.

“க்ரியாவின் தற்கால தமிழகராதி”

பின்வருமாறு விளக்கம் கூறுகிறது.

“விருந்தோம்பல் - விருந்து தந்து உபசரித்தல் entertaining guests.”[12]

நா.கதிரைவேற் பிள்ளையின் தமிழ் மொழி அகராதி,

“விருந்தோம்பல் - வேளாண்மை மாந்தர் இயலால் ஒன்று”[13]

என்று பதிவுச் செய்கிறது. ஆங்கில அகராதியும் விருந்தோம்பல் என்னும் சொல்லை கையாள்வதை

“விருந்தோம்பல் - வேளாண் மாந்தரியல்பில் ஒன்று hospitality”[14]

என்ற தொடர் வி.விசுவநாத பிள்ளையின் தமிழ்-ஆங்கில அகராதியில் பதிவுச் செய்யப்பட்டுள்ளது. இங்கு வேளாண் மாந்தர் என்ற சொல்லாட்சி பயின்று வந்துள்ளது. இவை வேளாண்மையைத் தொழிலாக செய்தவர்களைக் குறிப்பிடுகின்றது. மேலும் ‘hospitality’ என்னும் ஆங்கில சொல்லுக்கு ‘விருந்தோம்பல்’ என்னும் தமிழ் சொல் நிகரான சொல்லாக குறிக்கப்படுகின்றது. இங்ஙனம் ‘விருந்து’ ‘ஓம்பல்’ ‘விருந்தோம்பல்’ ஆகிய சொல்லின் பொருளை அறிய முடிகிறது.

### 1.1.2 விருந்து குறித்த தொல்காப்பிய விளக்கம்

தமிழில் கிடைத்த முதல் நூல் தொல்காப்பியம் ஆகும். தமிழ் மொழியின் எழுத்து, சொல், பொருள் என மூன்று வகையாக இலக்கணத்தை விளக்குகிறது. இது பொருள் அதிகாரம் இலக்கியத்தின் இலக்கணங்களை உரைக்கிறது. அதன்

பின் தொகுத்த சங்க இலக்கியங்கள் நூல்களுக்கு கருவி நூலாகவும் தொல்காப்பியம் உதவுகிறது. இச்சூழலில் விருந்து குறித்து தொல்காப்பியத்தில் காணப்படும் கூறுகள் பதிவு செய்யப்படுகின்றன. இரண்டு நிலைகளில் விளக்கப்படுகிறது. ஒன்று தொல்காப்பிய சூத்திரம் பற்றியும், இரண்டு உரையாசிரியரின் பொருள் விளக்கம் என்ற இரண்டு நிலைகளில் ஆராயப்படுகிறது.

தொல்காப்பியம் இலக்கியத்தின் பாடுபொருளை இரண்டு பெரும் பிரிவாக பிரிக்கிறது. ஒன்று அகம் என்றும் மற்றொன்று புறம் என்றும் அறியப்படுகிறது.

### 1.1.2.1 தொல்காப்பிய அகத்திணையில் விருந்தோம்பல் குறிப்புகள்:

தொல்காப்பியத்தில் அகம் குறித்தான இயல்பகுப்புகளே அதிகம் காணப்படுவது வெள்ளிமலை. முதல் இயலான அகத்திணையியலில் கருப்பொருளை உரைக்கும் நூற்பா பற்றிய செய்தியை அறியலாம்.

“தெய்வம் உணர்வே மாமரம் புட்பறை
செய்தி யாழின் பகுதியொரு தொகை
அவ்வகை பிறவும் கருவென மொழிய”[15] தொல். பொருள். அகத்.4

என்பது நூற்பா. அக இலக்கியங்கள் பெரும்பாலும் பாத்திரங்களின் உரையாடல் மூலம் புனையப் பெற்றுள்ளன. அகத்திணை இரு பிரிவாக பிரிக்கப்பட்டுள்ளது. ஒன்று களவு, மற்றொன்று கற்பு ஆகும். இதில் கற்பியலில் வாயில் கூற்று நிகழும் இடங்களில் ‘விருந்து’ என்ற சொல் கையாளுவதை

“கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும்
மெல்லியல் பொறையும் நிறையும் வல்லிதின்
விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும்
பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்”[16] தொல். பொருள். கற்பு.11

என்னும் நூற்பாவில் விருந்து என்னும் சொல் மூன்றாம் அடியின் முதல் சொல்லாக பயின்று வந்துள்ளது. தலைவிக்குரிய பண்பாகவே தொல்காப்பியர் இந்நூற்பாவை அமைத்துள்ளார். இவ்வாறு தொல்காப்பியத்தில் அகத்திணைப் பகுதியில் ‘விருந்து’ குறித்தான குறிப்புகள் காணக் கிடக்கின்றன.

### 1.1.2.2 தொல்காப்பிய புறத்திணையியல் விருந்தோம்பல் குறிப்புகள்

தொல்காப்பியம் புறத்திணைக் கருத்துக்களை ஓரியலில் முடித்துக் கொள்கிறது. இது வரலாற்று அரசியல் சார்ந்து புனையப்படுவதாக சங்க இலக்கியங்கள் வழி புலனாகின்றன. புறத்திணை என்பது புற ஒழுக்கம் ஆகும். அவை, போர், போரின் வெற்றி, புகழ், நிலையாமை போன்ற நிகழ்வுகள் ஆகும். புறத்திணையின் ஒவ்வொரு திணையும் போர் நடைமுறைகளையும், அக்கால அரசியல் பின்னணியில் உரைப்பதாக எண்ணலாம். சான்றாக வஞ்சித் திணையின் நூற்பாவில்

“ஒருவன் தாங்கிய பெருமை யானும்
பிண்டம் மேய பெருஞ்சோற்று நிலையும்[17] தொல்.பொருள்.புறத்.7

என்ற நூற்பாவின் இரண்டாம் அடியில் ‘பெருஞ்சோற்று’ என்ற சொல் சோற்றைப் பகிர்ந்து உண்ணுதல் என்றும் பொருளை கொண்டதாகும்.

### 1.1.2.3 தொல்காப்பிய உரையும், விருந்தோம்பல் கூறுகளும்

தொல்காப்பியத்திற்கு காலம் தோறும் உரைகள் வெளிவந்த வண்ணம் உள்ளன. இந்நூல் முழுமைக்கும் உரைகண்டவருள் இளம்பூரணரின் உரை மிகச் சிறந்ததாக போற்றப்படுகிறது. வஞ்சித் திணையின் துறையை விளக்கும்போது மன்னன் படைவீரருக்கு சோறு கொடுப்பதை உரையாசிரியர் ச.வே.சுப்பிரமணியன் பின்வருமாறு உரை எழுதுகிறார்.

“படை வீரர்க்குக் கொடுத்த பெருஞ்சோற்று நிலையும்”[18] என்று பதிவுச் செய்கிறார். இளம்பூரணர் பின்வருமாறு விளக்கம் அளிக்கிறார்.

“பிண்டம்மேய பெருஞ்சோற்று நிலையும்

திரட்சி பொருந்தின பெருஞ்சோற்று நிலையும்”[19] தொல் பொருள்.1009

என்று உரைக்கிறார். இளம்பூரணர் உரையை பின்பற்றி மாணவர்க்கான எளிய உரை பின்வருமாறு,

“தனது போர் வீரர்களோடு சோற்றை ஒருங்கு இருந்து உண்டு பெருமை செய்யும் பெருஞ்சோற்று நிலையும்”[20]

என்று உரைக்கிறார். இங்கு உணவு பரிமாற்றம் நடப்பதை தொல்காப்பியத்தின் இந்நூற்பா மூலம் அறியலாம். இதற்கு உரையாசிரியர்களின் உரையும் துணைச் செய்வதாக அமைந்துள்ளன.

### 1.1.2.4 கற்பியல் நூற்பாவின் உரை விளக்கம்

இரண்டு கைகோளில் இரண்டாவதான கைகோள் கற்பு ஆகும். இப்பகுதியில் வாயில் கூற்று நிகழும் நிலைகள் குறித்து விளக்கப்படும் பகுதியில் ‘விருந்து’ குறித்தான செய்திகள் பதிவு செய்யப்படுகின்றன.

“விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும்”[21] தொல் பொருள். கற்பு. 3

என்ற நூற்பா தொடருக்கு ச.வே.சுப்பிரமணியம் பின்வருமாறு உரை எழுதுகிறார்.

“சமையல் தொழில் வல்லமையில் விருந்தினரைப் பாதுகாத்தலும், சுற்றத்தாரைக் காத்தலும் இவை போன்றன தலைவியின் பண்புகள்”[22]

என்று உரையெழுதுகிறார். இங்கு தான் ‘விருந்தோம்பல்’ என்றச் சொல்லின் அகராதி பொருளைப் பதிவுச் செய்வதாக அமைகிறது. விருந்து என்பது உணவு அளிப்பதோடு, பாதுகாக்கவும் வேண்டும் என்பதாகும்.

இந்த தொடருக்கு புலவர் நா.கருணாநிதி பின்வருமாறு உரை வருகிறது.

“இல்லறத்தில் ஏற்றத் தாழ்வுகள் நேரினும் தவறாமல் விருந்து போற்றலும், சுற்றத்தாரைக் காத்தலும் இவை போன்ற பிற பண்புகளும் தலைவி அமைந்துள்ள மாட்சியே குணங்களாகும்”.[23]

என்று கூறுகிறார். இங்கு தலைவி குறித்த பண்புகள் வெளிப்படுத்தப் படுகின்றன. விருந்தோம்பல் என்ற செயல் தலைவிக்கு மையப்படுத்துவதாக அமைந்துள்ளது. இங்ஙனம் உரையாசிரியர்களின் உரையும் அகராதி பொருள் விளக்கமும் ஒன்றாக அமையக் காண முடிகிறது.

உணவு தேவை குறித்து அதன் தன்மை குறித்து நம் முன்னோர்கள் நன்கு அறிந்துள்ளனர். ஆகவே பசிப்பிணி போக்குவதற்கான நோக்கமே முதன்மை நோக்கமாக கொண்டு வாழந்த பெருமைக்குரிய சமூகம் நம் தமிழ் சமூகம் ஆகும். மேலும் தமிழர்கள் பசிபிணியை போக்குக்கும் சொல்லான விருந்தோம்பல் என்னும் சொல்லை சிறப்பிற்குரிய சொல்லாகும் எந்த சொல்லிற்கும் காரணம் கருதியே பெயர் வைத்தனர். விருந்து + ஓம்பல் = விருந்தோம்பல் ஆகும்.

### 1.1.3 நாட்டுப்புற வழக்காறுகள்

உணவு குறித்தும், விருந்து குறித்ததுமான நாட்டுப்புற வழக்காறுகளைக் காணலாம். நாட்டுப்புற வழக்காறுகள் குறித்த விளக்கத்தைப் பின்வருமாறு பதிவுச் செய்யப்படுகிறது. நாட்டுப்புற இயல் என்னும் நூலில் சு.சண்முகசுந்தரம் நாட்டுப்புற வழக்காறுகள் குறித்து விளக்கம் அளிப்பதை,

“டாக்டர்.ச.அகத்தியலிங்கம் அவர்கள் நாட்டுபுற இயல் என்னும் இச்சொல் ஆராய்ச்சிக்குரிய கதை, பாடல், விடுகதை பழக்க வழக்கங்கள் போன்றவற்றை குறிப்பிடுகிறது. அவற்றை ஆராயும் இயலையும் குறிக்கும். நாட்டுப்புற வழக்காறுகளைப் பற்றிய ஆய்வுதான் அவற்றை ஆராயும் இயலையும் குறிக்கும். நாட்டுப்புற வழக்காறுகளைப் பற்றிய ஆய்வு தான் நாட்டுப்புற இயல்”.[24]

என்று டாக்டர் அகத்தியலிங்கம் விளக்கத்தைக் காவியா சு.சண்முகசுந்தரம் தம் நூலில் எடுத்தாள்கிறார். “பசி வந்திடப் பத்தும் பறந்து போகும்”[25] என சு.ஆனந்தன் கூறியுள்ளார். இங்கு உணவு குறித்தும், விருந்து குறித்ததுமான பழமொழி, விடுகதை ஆகியவற்றைக் காணலாம்.

### 1.1.3.1 பழமொழி

பழமொழி என்பது முன்னோர்களின் வாக்கு. பழமொழிக் குறித்து தொல்காப்பியத்தில் குறிப்புகள் காணக் கிடக்கின்றன. தொல்காப்பியர் இதனை ‘முதுமொழி’ என்று குறிப்பிடுகிறார் என்பதை

“நுண்மையும் சுருக்கமும் ஒளியுடைமையும்
மென்மையும் என்று இவை விளங்கத் தோன்றில்
குறித்த பொருளை முடித்தற்கு உரூஉம்
ஏது நுதலிய முதுமொழி என்ப”[26] தொல் - 1433

என்னும் நூற்பாவால் பதிவுச் செய்துள்ளார்.

தொல்காப்பியத்திற்குப் பின் பழமொழியை இலக்கியமாக ஆக்கிய முறை மூன்றுரையனாரையே சேரும். ‘பழமொழி நானூறு’ என்ற நூலில் நானூறு பழமொழிகளைத் தொகுத்துள்ளார். அதன் பின் பலர் அறிஞர்கள் பழமொழிகளைத் தொகுத்துள்ளனர். தொகுத்தும் வருகின்றனர். ‘பழமொழி’ என்னும் சொல்லின் வேறு

பெயர்களை 'நாட்டுப்புற இயல்' என்னும் நூலில் சு.சண்முகசுந்தரம் பின்வருமாறு குறிக்கிறார்.

"தமிழில் பழமொழி, பழஞ்சொல், முதுமொழி, முதுசொல், வசனம், சொலவம், சொலவடை என்றும், மலையாளத்தில் 'பழஞ்சொல்' என்றும் கன்னடத்தில் 'நாண்நொடி' என்றும் தெலுங்கில், 'மக்கள் குரல்' என்றும் ஆங்கிலத்தில் 'Proverbs' என்றும் அழைப்பர்".[27]

### 1.1.3.2 உணவு மற்றும் விருந்து குறித்த பழமொழிகள்

எஸ்கே.சாமி என்பவர் 'தமிழ் நாட்டு பழமொழிகள்' என்ற நூலில் பத்தாயிரத்திற்கும் மேற்பட்ட பழமொழிகளைத் தொகுத்துள்ளார். இவை அகரவரிசைப்படி நூலில் காணப்படுகின்றது. உணவு குறித்தான பழமொழிகளை 'உ' கரம் என்னும் பகுதியிலிருந்தும் விருந்து தொடர்பான பழமொழிகளை 'வ'கரம் என்னும் பகுதியிலிருந்தும் எடுத்தாளப்பட்டுள்ளன.

"உண்ட சோற்றிலே நஞ்சைக் கலந்தாற் போல்"

"உண்ட வீட்டுக்கு இரண்டகம் பண்ணலாமா?

"உண்டி சுருங்குதல் பெண்டிர்க் அழகு"

"உண்டு கொடுத்தால் நண்டு வளையில் இருக்குமா?

"உண்டு ருசி கண்டவனும பெண்டு ருசி கண்டவனும் விடான்"

"உண்ணப் படையுண்டு வெல்லப் படையிலில்"

"உண்உண் என்று உபசரிப்பான் இல்லாத
வாசலிலே உண்ணாமை கோடிபெறும்"

"உண்ட உடம்பு உருளும், தின்ற பாக்கு சிவக்கும்"

"உண்ணாமல் திண்ணாமல் உறமுறைக்கியாமல்"

“உண்பது நாழி உடுப்பது நான்கு முழம்,

என்பது கோடி நினைந்தென்னும் மனம்”

“உண்பாரைப் பார்த்தாலும் உழுவாரைப் பார்த்தல் ஆகாது”

“உப்பிட்டவரை உள்ளளவும் நினை”

‘வி’

“விருந்து கூறிவந்து செடியிலே நுழைவது போல”

“விருதுக்காகவா வோட்டையாடுவது?”

“விருந்து இட்டால் பகைமை விளைகிறது”

“விருந்திலோச் சோறு மருந்தோடொக்கும்”

“விருந்து இல்லோர்க்கில்லை பொருந்திய ஒழுக்கம்”

“விருந்தும் மருந்தும் மூன்று பொழுது”[28]

ஆகியன உணவைத் தொடர்புப்படுத்தியும் விருந்தைத் தொடர்புபடுத்தியும் குறித்த பழமொழிகளாகும். மேலும் மென்பொருள் (Software) மூலம் பதிவிறக்கம் செய்யப்பட்ட பழமொழிகளிலிருந்து குறித்தான பதிவை முன்வைத்துள்ளன. அவை

“நல்வரவை நலிவடையச் செய்யாதே”

“முகமலர்ந்து உபசரிப்பதே நல்விருந்து”

“வரவேற்புக்கு உரியவன் நல்விருந்தாளியாவான்”

“நல்விருந்து ஓம்புவனின் விருந்தாளி, விருந்

தோம்பலைக் கற்றுக் கொள்வான்.

“சிறிதளவு கணப்பும் சிறதளவு உணவும்

பேரளவு அமைதியுமே நல்விருந்தாகும்.”

“உண்டிக்கு அழகு விருந்தோடு உண்டல்”

ஆகிய பழமொழிகள் விருந்தோடு தொடர்புடையவனவாக அமைகின்றன.

### 1.1.4 உணவு உற்பத்தியும் விருந்தோம்பலும்

விருந்தோம்பல் நடைபெறுவதற்கு இரண்டு முக்கிய படி நிலைகள் தேவைப்படுகின்றன. ஒன்று குடும்பம் (Family) மற்றொன்று உணவு உற்பத்தி (Food Cultivation or production) இவைகள் குறித்த விளக்கங்களைக் காண்போம்.

#### 1.1.4.1 குடும்பம்

குடும்பமே சமூகத்தின் அச்சாணியகும். குடும்பம் இல்லையேல் சமூகம் இல்லை என்று கூறலாம். மனித இனம் தோன்றிய போது குடும்பங்களாக வாழவில்லை. உணவு உற்பத்தி தொடங்கிய பின்னரே குடும்பங்கள் தோன்றின என்று கூறலாம். எனவே குடும்பம் குறித்தான விளக்கம் முக்கியத்துவம் பெறுகிறது.

“குடும்பம் என்னும் அமைப்பானது ஓர் ஆணும், பெண்ணும் அவர்களுடைய சமுதாய மரபுப்படி மணவாழ்வில் ஈடுபடும் நிலையால் மட்டுமே தோன்ற முடியும். அவ்வாறு இணைந்தால் தான் அச்சமுதாயத்தில் அவர்கள் ஒரு குடும்பமாக ஏற்றுக் கொள்ளப்படுவர்”[29] என்ற பக்தவத்சல பாரதி கூறுகிறார். இந்த நிலையைத் தான் சங்க அக இலக்கியங்கள் (களவு) காட்சிப்படுத்துகின்றன.

“தமிழர்களின் பண்பாட்டில் விருந்தோம்பலுக்கு ஒரு சிறப்பான இடமுண்டு. இல்லறத்தைப் போற்றும் தமிழர்கள், அதற்குரிய பயன் விருந்து பரித்தலிலே உண்டு”[30] என்று ஜோதிமணி குறிப்பிடுகிறார். “விருந்தோம்பலில் தமிழர்கள் தலை சிறந்தவர்கள். ஏழை மக்களும் தம்மிடம் வந்த விருந்தினர்க்குத் தாம் உண்ணும் உணவை தந்து உபசரிப்பார்கள்”[31] என்று சாமி. சிதம்பரனார் குறிப்பிடுவதனை அறியலாம்.

### 1.1.4.2 குடும்ப அகராதி விளக்கம்

குடும்பம் என்னும் சொல்லிற்குக் கழகத் தமிழ் அகராதி விளக்கம் கூறும் போது, "குடும்பம் - உறவு; ஒரு குடியில் உள்ளார்; மனைவி; வீடு; சமுசாரம்; உறவினர்; குலம்; குடி; இனத்தார்; ஒரு குடிமையிலுள்ளோர்"

என்றும்

"குடும்பன் - குடும்பத் தலைவன், பள்ளர், தலைவன், சமுசாரி

என்றும்

"குடும்பி - சமுசாரி, பள்ளிகளின் தலைவி, குடும்ப தலைவி" என்றும்

"குடும்பினி - மனைவி"[32] என்றும் பொருள் கொடுக்கிறது.

க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி

1. "குடும்பம் பெ-1, கணவனும், மனைவியும், தம் குழந்தையோடு (மற்றும் நெருங்கி உறவினரோடு) கூடி வாழும் சமூக அமைப்பு : Family
2. குடும்பத்தில் எல்லா உறுப்பினர்களும் (Members of a family)
3. குடித்தனம் வாழ்க்கை (Family life)
4. உயிரினங்கள் செடி, கொடிகள் முதலியவற்றுள் ஒத்த பொதுவாக கூறுகளை அடிப்படையாகக் கொண்டு பிரிக்கும் பிரிவு என்றும் "குடும்பி.பெ (பெரிய குடும்பத்தை நிர்வகிக்கும் பொறுப்பு உள்ளவன்"[33] என்று சற்று விளக்கமாகப் பொருள் கொள்கிறது. இங்ஙனம் குடும்பங்களாக இயங்கத் தொடங்குவதற்கு முன்பு வேட்டையாடும் சமூகமாக வாழ்ந்து வந்தனர். பல குறிஞ்சி திணை பாடல்கள் வேட்டையாடுதலை கருப்பொருளாகப் பாடப் பெற்றுள்ளது. வேட்டையாடுதல் சமூகத்தில் இருந்து உணவு உற்பத்தி சமூகமாக மாறியுள்ளது. இதனையும் குறிஞ்சி திணை பாடல்களில் காணலாம். இதன்

விளக்கத்தைக் குறித்து திணையில் விருந்தோம்பல் என்னும் பகுதியில் காணலாம்.

### 1.1.4.3 வேளாண் சமூகம் தோற்றம்

குறிஞ்சி நிலத்திலும், முல்லை நிலத்திலும் வேளாண் தொழில் சிறிதளவே காணப்பட்டது. முழு வேளாண் தொழிலாக மாறிய நிலமாக மருதநிலம் காட்சியளிக்கிறது. மருத திணையின் நிலமே வயலும் வயல் சார்ந்த இடமும், இதனால் இங்கு அரிசி, திணை, பயிர் வகைகள் போன்ற தானிய உணவுகளைப் பயிரிட்டனர். இது குறித்து பெ.மாதையின் பின்வருமாறு கூறுகிறார்.

“செந்நெல், வெண்ணெல் உணவு இம்மக்களின் அடிப்படை உணவாய் உள்ளது. வாளைமீன், விரால், நண்டு, வெண்சோறு எனும் இவைகளும் உழவர் சமுதாய உணவுகளாய்க் காட்டப்பட்டுள்ளன”[34] என்று குறிப்பிடுகிறார். வேளாண் சமூகத்தில் தான் முறையான குடும்ப அமைப்பு வளரலாயிற்று. வேளாண் தொழிலால் பொருளாதாரத்தை உழவர்கள் விரிவாக்கினர். மேலும் வேளாண்மையில் முக்கிய உணவு பொருளாகப் பயிரிட்டது நெல் வகையே ஆகும். நெல் அக்கால வழிபாட்டு பொருட்களுள் முக்கியமானதாகவும் கருத்தப்பட்டது. மேலும் கரும்பு, விறகு போன்றவையும் முக்கிய வேளாண் பொருட்களாகும்.

வேளாண்மை செய்த பொருட்களை கடவுளுக்கு படையலாக்கி சுற்றத்தார்க்கும் உறவினர்க்கும் விருந்தாக கொடுத்தனர். இங்ஙனம் விருந்தோம்பல் பண்புகளின் உச்ச கட்டமாய் மருதநிலம் திகழ்ந்தது.

“விருந்தினர் என்றால் உறவினர் என்று இக்காலத்தினர் நிலைக்கின்றனர் உறவினர் வேறு, விருந்தினர் வேறு, முன்பின் அறியாத புதியவர்கட்கே விருந்தினர் என்று பெயர் புதியவர்கள் எவராயினும் சரி, எந்த நாடனராயினும்

சரி, எம்மொழியனராயினும் சரி. அவர்களை வரவேற்று உபசரிப்பு தமிழர் பண்பு"[35] என்று சாமி சிதம்பரனார் கூறுகிறார்.

உழவுக் கருவிகளாக ஏர், கலப்பை, நுகத்தடி, காளை போன்றப் பொருட்கள் காணப்பட்டன. சங்க இலக்கியத்தில் உழவு தொழிலை மையப்படுத்தியப் பாடல்களே அதிகம் காணப்படுகின்றன. அந்த அளவிற்கு உழவு தொழிலுக்கும், உழவர்களுக்கும் புலவர்கள் முக்கியத்துவம் கொடுத்தனர்.

### 1.1.5 சங்க இலக்கியங்கள் ஓர் அறிமுகம்

தமிழ் மொழியில் கிடைத்த முதல் இலக்கியங்கள் சங்க இலக்கியங்கள் என அறியப்படுகின்றன. சங்க இலக்கியங்களை பதிணென் மேற்கணக்கு நூல்கள் என்று தமிழ் இலக்கிய வரலாறு வருணிக்கின்றது. சங்கங்களில் இருந்து கிடைத்த இலக்கியங்களைத் தொகுத்து அதனைப் பதிப்பித்தவர்கள் பலர்.

பதிணென் மேற்கணக்கு நூல்கள் இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. ஒன்று எட்டுத்தொகை மற்றொன்று பத்துப்பாட்டு என்பதாகும். இவ்விலக்கியங்களைக் கற்கும் கருவிநூலாக தொல்காப்பியம் என்ற நூல் அமைகின்றது.

#### 1.1.5.1 எட்டுத்தொகை

நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநாநூறு என்பன எட்டுத்தொகை நூல்களாகும். இவ்விலக்கியங்களை வெளிப்படுத்தும் நூற்பாவை வகையை நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு என்றும் நூலில் காணப்படுகிறது.

"நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு
ஒத்த பதிற்றுப்பத்து ஓங்குபரிபாடல் - கற்றறிந்தார்

ஏத்தும் கலியொடு அகம்புறம் என்று

இத்திறந்த எட்டுத் தொகை"[36]

என்னும் பழம் வெண்பா பாடல் உரைக்கிறது. இந்த எட்டு நூற்களை மூன்று பிரிவாக பிரித்தனர்.

அவை

1. அகம்
2. புறம்
3. அகம்புறம்

தொடர்ந்து வரும் இயல்களில் காணலாம்.

### 1.1.5.1.1 அக இலக்கியங்கள்

எட்டுத்தொகை நூற்களில் ஐந்து அக இலக்கியங்கள் காணப்படுகின்றன. நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு என்னும் ஐந்து நூற்களும் அக இலக்கியங்களாகும்.

#### 1.1.5.1.1.1 நற்றிணை

ஏறத்தாழ 187 புலவர் பெருமக்கள் பாடியுள்ள நானூறு பாடல்களின் தொகுப்பே. இந்நூல் அகப்பொருள் செய்திகள் தெளிவாகவும், நுட்பமாகவும், இந்நூலில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது. இந்நூலை தொகுப்பித்தோன் பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதி என்னும் பாண்டிய மன்னன் ஆவான். இந்நூலின் கவிதைகள் ஆசிரியப்பாவால் பாடபெற்றவை ஆகும். அடியெல்லை என்பது ஒன்பது அடிசிற்றெல்லையும், பன்னிரண்டு அடி பேரெல்லையும் உடையது.

அதியமான் அஞ்சி, நன்னன், உதியன், வல்வில் ஓரி, ஆய் அண்டிரன், காரி, குட்டுவன், சேந்தன் ஆகிய மன்னர்களைக் குறித்த குறிப்புகளையும் ஆங்காங்கே காணப்படுகிறது. இந்நூலில் அதிகமான பாடல்களைப் பாடியவர் கபிலரும் உலோச்சனாரும் ஆவர். தலா இருபது பாடல்கள் ஆகும். சில புலவர்கள் பாடலால்

பெயர் பெற்றவர்கள். அவற்றுள் ஒருவரே 'தேய்புரிப் பழங்கயிற்றனர்' என்னும் புலவர் மடல் பாடிய 'மாதங்கிரனர்', 'விழிக்கண் பேதைப் பெருங்கண்ணனார்' ஆகியோர் குறிப்பிட்டிருந்தவர்கள்.

நற்றிணைப் பாடல்கள் பெரும்பாலும் நாடக அமைப்பினைக் கொண்டதாக திகழ்கின்றன. நற்றிணையில் நூற்றி முப்பத்தி ஒன்று குறிஞ்சிப்பாடல்களும், முப்பது முல்லைநில பாடல்களும், முப்பத்திரண்டு மருதநில பாடல்களும், நூற்றிரெண்டு நெய்தல், திணை பாடல்களம் நூற்றி நான்கு பாலைத் திணை பாடல்களும் விரவி கிடக்கின்றது.

நற்றிணையில் விருந்தோம்பல் குறித்த செய்திகள் நற்.135, 160, 168, 258, 372 போன்ற பாடல்களில் இடம் பெறுகின்றது. இவற்றை விரிவாக தொடர்ந்து வரும் இயல்களில் காணலாம்.

### 1.1.5.1.1.2 குறுந்தொகை

எட்டுத் தொகை நூற்களில் சிறந்த அகநூல் குறுந்தொகை ஆகும். 'நல்ல' என்னும் அடைமொழியே இதற்கு சான்றாக அமைகின்றது. குறுகிய அடிகளைக் கொண்டதால் இது குறுந்தொகை ஆயிற்று. இதன் சிற்றெல்லை என்பது நான்கு அடிகளும் பேரெல்லை என்பது எட்டடியும் ஆகும். இதனைத் தொகுப்பித்தவன் பூரிக்கோ தொகுத்தவா் உப்பூரிக்குடிக் கிழார்.

இந்நூல் இருநூற்றி ஐந்து புலவர்கள் பாடியுள்ளனர். இரண்டு பாடல்கள் ஒன்பது அடிகளைக் கொண்டு அமைகின்றன. இந்நூலில் அதிகமான பாடல்களை பாடிய புலவர் கபிலர் ஆவார். இவர் இருபத்தியெட்டு பாடல்களைப் பாடியுள்ளார். உரையாசிரியர்களால் அதிகமாக எடுத்தாண்ட பாடல்நூல் குறுந்தொகை ஆகும். அறக்கருத்துக்கள், வரலாற்று குறிப்புகள், ஓசைநயம், அக உணர்வு போன்ற பண்புகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளன.

சொல்குற்றம், பொருள் குற்றம் என்னும் தர்க்கத்திற்கு இடமான ‘கொங்குதேர் வாழ்க்கை’ என்னும் பாடல் தொகுக்கப்பட்ட நூல் இதுவாகும். இந்நூலில் பெண்பால் புலவர்களும் பாடியுள்ளனர். ஆதிமந்தி, ஔவையார், வெள்ளி வீதியார், ஊண்பித்தை, வெண்பூதியார் ஆகியோர் குறிப்பிடத்தக்க பெண்பாற் புலவர்கள்.

இந்நூலில் குறிஞ்சித்திணை சார்ந்து நூற்றி நாற்பத்தியெழு பாடல்களும், முல்லைத் திணை சார்ந்து நாற்பதைந்து பாடல்களும், மருதத் திணை சார்ந்து நாற்பத்தியெட்டு பாடல்களும், நெய்தல் திணை சார்ந்து எழுபத்தி ஒன்று பாடல்களும், பாலைத்திணை சார்ந்து தொன்னூறு பாடல்களும் விரவி கலந்துள்ளன.

குறிஞ்சி திணையில் விருந்தோம்பல் குறித்த செய்திகள் குறு.3, 18, 25, 100, 168, 209 போன்ற பலப்பாடல்களில் இடம் பெறுகின்றன. விருந்தோம்பலில் அசைவ உணவு, கல் உண்ணல் தலைவியின் விருந்து, குறிஞ்சி நிலத்திலுள்ள விளை பொருட்கள் மன்னனின் விருந்து குறித்து செய்திகள் குறுந்தொகையில் இடம் பெறுகின்றன.

### 1.1.5.1.1.3 ஐங்குறுநூறு

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந்து திணையையும் பற்றிய ஐந்நூறு அகப்பாடல்களைக் கொண்ட நூல் ஐங்குறுநூறு ஆகும். ஒவ்வொரு திணைக்கும் நூறு நூறாக ஐந்து புலவரால் ஆக்கப் பெற்றவை. இந்நூல் ஆசிரியப்பாவால் இயற்றப் பெற்றது. இந்நூலின் சிற்றெல்லை மூன்றடி, பேரெல்லை ஐந்து அடி. இந்நூலைத் தொகுத்தவர் கூடலூர்கிழார் தொகுப்பித்தவர் யானைகட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை.

இந்நூலின் உட்பிரிவு பத்து பத்து பாடல்களால் ஆனவை பதிற்றுப்பத்து, திருக்குறள் ஆகிய நூற்களின் முன்னோடி நூல் ஐங்குறுநூறு ஆகும். மருதத்

திணையை போகியாரும், நெய்தல் திணையை அம்மூவனாரும், குறிஞ்சித் திணையை கபிலரும், பாலைத் திணையை ஓதலாந்தையாரும், முல்லைத் திணையை பேயனாரும் பாடியுள்ளனர்.

இதன் சிறப்பம்சம் என்பது மூன்று வரிப் பாடலாயினும் இயற்கை வருணனையும் உரிப்பொருள் நயமும் முதற்பொருளோ, கருப்பொருளோ இல்லாத பாடல்களைக் காண்பது அரிது. நெய்தல் திணையில் 'தொண்டிப்பத்து' அந்தாதி அமைப்பில் காணப்படுகிறது. திணைக்கு ஒரு புலவர் பாடும் மரபில் வந்த முதல் நூல். இந்நூலின் பண்டைய தமிழ் மக்களின் பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள், வாழ்வியல் கூறுகள் போன்றவை நயமாகக் காணப்படுகின்றன. குறைந்த அடிகளில் சிறந்த திணை இலக்கியமாக திகழ்கின்றது. ஐங்குறுநூற்றில் உள்ள ஐந்து நிலங்களின் விளைப்பொருட்கள், உணவு குறித்த செய்திகள் விருந்து நடைபெறும் இடம், மக்களின் செயல்பாடு குறித்து அறியலாம்.

### 1.1.5.1.1.4 கலித்தொகை

பாவகையால் பெயர் பெற்ற நூல்களுள் ஒன்று கலித்தொகை. இந்நூல் கலிப்பாக்களால் தொகுக்கப் பெற்றமையால் கலித்தொகை என்னும் பெயர் பெற்றது. 'கற்றறிந்தார் ஏத்தும்' என்று சிறப்பிக்கப்படுகிறது. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்து திணைகளைக் குறித்த நூற்றைம்பது பாடல்களைக் கொண்ட நூலாகும். ஐங்குறுநூற்றைப் போலவே ஒவ்வொரு திணைக்கும் ஒவ்வொரு புலவர்கள் பாடியுள்ளனர்.

இதனை பாலைத்திணை - பாலை பாடிய பெருங்கடுங்கோ முப்பத்தியாறு பாடல்களும், குறிஞ்சித் திணை - கபிலர் இருபத்தி ஒன்பது பாடல்களும், முல்லைத் திணை - சோழன் நல்லுருத்திரன் பதினெழு பாடல்களும், நெய்தல்

திணை - நல்லந்துவனார் முப்பத்தி நான்கு பாடல்களும் ஆக மொத்தம் நூற்றியம்பது பாடல்களை கொண்டது.

இந்நூலின் சிற்றெல்லை பதினொன்று அடிகளும் பேரெல்லை எண்பது அடிகளும் கொண்டுள்ளது. இதனைத் தொகுத்தவா் நல்லந்துவனார். தலை மக்களின் காதல் ஒழுக்கம், அடியவர், வினைவலா் செய்திகள் கடுமையான விலங்கினங்களின் எளிமையான காதல் உணர்வுகள், தமிழரது மணமுறை, இல்லற இன்பம், கவண்கல் வீசுந்திறம், தினைப்புனக் காவல், ஏறு தழுவுதல், தைந்நீராடுதல், கடவுள் வழிபாட்டுமுறை முதலிய செய்திகளைக் கலித்தொகையில் காணலாம். ஒத்தாழிசை, கொச்சகம், உறழ்கலி, கலிவெண்பா என்ற நான்கு வகைகளிலும் பாடல்கள் அமைகின்றன.

கலித்தொகையில் கலி.108, 116 விருந்து குறித்த செய்திகள் தலைவியின் விருந்து அங்கு விளையும் உணவுப் பொருட்கள் போன்ற செய்திகள் இடம் பெறுகின்றன.

### 1.1.5.1.1.5 அகநானூறு

அகப்பொருள் குறித்த அழகிய இனிய நானூறு பாடல்களைக் கொண்டமையால் இது அகநானூறு எனப் பெயா் பெற்றது. பதிமூன்று அடி சிற்றெல்லையும் முப்பத்தியொன்றடி பேரெல்லையும் உடையது. இவ்வாறு நெடுமை வாய்ந்த பாக்களால் அமைக்கப் பெற்றமையால் இந்நூல் நெடுந்தொகை எனப் பெயரும் வழங்கப் பெறும். இந்நூலை தொகுத்தவா் உருத்திரன்சன்மா் தொகுப்பித்தவா் பாண்டியன் உக்கிரப்பெருவழுதி. இந்நூலின் நயத்தை அடிப்படையாக்கி மூன்றாகப் பிரிப்பா். அவை

1. களியிற்றியானை நிறை - பாடல் 1 முதல் 120 வரை
2. மணமிடைபவளம் - பாடல் 121 முதல் 300 வரை
3. நித்திலக் கோவை - பாடல் 301 முதல் 400 வரை

என அமைந்துள்ளன.

1, 3, 5, 7, 9 என வருவன பாலைத்திணைப் பாடல்களாகும். 2, 8, 12, 18 என வருவன குறிஞ்சித் திணைப் பாடல்களாகும். 4, 14, 24, 34 என வருவன முல்லைத் திணைப் பாடல்களாகும். 6, 16, 24, 36 என வருவன மருதத் திணைப் பாடல்களாகும். 10, 20, 30, 40 என வருவன நெய்தற் திணைப் பாடல்களாகும். இதில் திணை அடிப்படையில் அமைந்த பாடல்களின் எண்ணிக்கை ஆகும்.

குறிஞ்சித் திணை எண்பது பாடல்களும், முல்லைத் திணையில் நாற்பது பாடல்களும், முல்லைத் திணையில் நாற்பது பாடல்களும், மருதத் திணையில் நாற்பது பாடல்களும், பாலைத் திணையில் இருநூறு பாடல்களும் விரவிக் காணப்படுகின்றன.

இவ்வக நானூற்றில் விருந்தோம்பல் குறித்த செய்திகள் அகம்.86, 30, 70, 10, 186 போன்ற பாடல்களின் இடம் பெறுகின்றது. இவற்றை விரிவாகப் பின்வரும் இயல்களில் பகுத்து ஆய்ந்து எடுத்துரைக்கப் பெறுகின்றது.

### 1.1.5.1.2 புறப்பாடல்கள்

எட்டுத்தொகை நூல்களில் இரண்டு புறநூல்கள் காணப்படுகின்றன. ஒன்று புறநானூறு, மற்றொன்று பதிற்றுப்பத்து. புறப்பொருள்கள். பயின்று வருவதால் இதனை புறப்பாடல்கள் என்று அழைக்கப்படுகிறது.

### 1.1.5.1.2.1 புறநானூறு

புறப்பொருள் குறித்த நானூறு பாடல்களின் தொகுப்பு என்பதால் இது புறநானூறு என்று அழைக்கப் பெறுகிறது. புறம், புறப்பாட்டு, புறம் நானூறு என்பன இந்நூலின் வேறுபெயர்கள், ஒவ்வொரு பாடலின் இறுதியிலும் திணை, துறை, பாடியோர், பாடப்பட்டோர் முதலான குறிப்புகள் உள்ளன. நான்கு அடி

சிற்றெல்லையும் நாற்பது அடி பேரெல்லையும் கொண்டவை. நூற்றி ஐம்பத்தியெழு புலவர்கள் பாடியுள்ளனர்.

வாழ்விற்குத் தேவையான அறக் கருத்துக்களைப் புறநானூறு விளம்பிச் செல்கிறது. புறநானூற்றின் திணை, துறை, அமைப்பு தொல்காப்பியர் கூறும் எழுதிணை அமைப்பை அடியொற்றி அமையாமல் புறப்பொருள் வெண்பாவை தரும் பன்னிரெண்டு திணை அமைப்பின் அடிப்படையில் அமைகின்றது. அரசர்களையும் வள்ளல்களையும் மட்டுமின்றித் போர் வீரர்களின் வீரத்தையும் புறநானூறு பாடுகின்றது. பல அரசர்களும், பெண்பாற் புலவர்களும் பாடியுள்ளனர்.

பெண்களின் வீரம் பேசும் முதின்முல்லை மன்னர்கள் பெண் கேட்டு வரினும் குடிப்பெருமை கூறி மறுக்கும் மறக்குடி மக்கள் நிலைகூறும் மகட்பாற்காஞ்சி, பொருண்மொழிக்காஞ்சி போன்ற துறைகளும், சிறப்புப் பெறுகின்றன. விருந்தோம்பல் பண்புகள், உணவு நிலைகள், கைம்மை மகளிர்கள் போன்ற பல்வேறு வகையான வாழ்வியல் நிகழ்வுகளை நயமுடன் உணர்த்துகின்றன.

புறம். 2, 24, 27 போன்ற பாடல்களில் விருந்தோம்பல் செய்தி அரசன் தன்னுடைய வெற்றி கொண்டாடும் விதமாக வீரர்களுக்கு உணவளித்தான். சுற்றத்தினருடன் மன்னன் விருந்து உண்ட செய்தியும் உயர்வு தாழ்வு பாராமல் விருந்து அளிக்கப்பட்டதையும் அறியலாம். இவ்வாறு புறநானூற்று பாடல்களில் விருந்தோம்பல் செய்தியை காணலாம்.

### 1.1.5.1.2.2 பதிற்றுப்பத்து

பத்து சேர மன்னர்களைப் பற்றி பத்துப் புலவர்கள் பாடிய பத்துப் பத்துப் பாடல்களின் தொகுப்பு. இதில் முதல் பத்தும், இறுதி பத்தும் கிடைக்கவில்லை. ஏனைய பாடல்களைப் பாடியோர், புலவருக்கு புரவலர்கள் கொடுத்த பரிசு குறித்த செய்திகள் பின்வருமாறு.

2. பாடியவர் : குமட்டூர்க் கண்ணனார்

மன்னர் : இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்

பெற்ற பரிசு : உம்பற்காட்டில் 500 ஊர்கள்,

தென்னாட்டு வருவாயுள் பாதி

3. பாலைக் கௌதமனார் பல்யானைச் செல்கெழுகுட்டுவன்

பெற்ற பரிசு : புலவர் விரும்பிய வண்ணம் பத்துப் பெருவேள்விகள் செய்து மனைவியோடு விண்ணுலகம் புக மன்னன் உதவினான்.

4. காப்பியாற்றுக் காப்பியனார் : களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல்

பெற்ற பரிசு (1) நாற்பது நூறாயிரம் பொன்

(2) ஆளுவதில் பாதி

5. பரணர் பெற்ற பரிசு : செங்குட்டுவன்

(1) உம்பற்காட்டு வருவாய்

(2) மன்னன் மகன் குட்டுவன் சேரல்

6. காக்கைபாடினியார் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்

நச்செள்ளையார் (1) ஒன்பது துலாம் பொன் நச்செள்ளையார்

பெற்ற பரிசுகள் (2) நூறாயிரம் பொற்காசுகள்

7. கபிலர் பெற்ற பரிசு : செல்வக் கடுங்கோ வாழியாதன்

(1) நூறாயிரம் பொற்காசுகள்

(2) 'நன்றா' என்னும் குன்றேறி கண்ணுக்கு எட்டிய தூரம் வரை உள்ள நிலங்கள் அனைத்தும்

8. அரிசில்கிழார் : பெருஞ்சேரலிரும் பொறை

பெற்ற பரிசு (1) ஒன்பது நூறாயிரம் பெண்

(2) அரசு கட்டில்

9. பெருங்குன்றூர்க் கிழார் பெற்ற பரிசு : இளஞ்சேரலிரும் பொறை
(1) முப்பத்தி இரண்டாயிரம் பொற்காசுகள்
(2) ஊரும் மனையும் ஏரும் பிறவும்
(3) பன்னூறாயிரம் அருங்கலன்கள்

இப்பாடலுக்கு திணை வகுக்கப் பெறவில்லை. மாறாகத் துறை மட்டும் தரப்பட்டுள்ளது. ஒவ்வொரு பாடலுக்கும் வண்ணம், தூக்கு முதலியன தலைப்புப் பெறுகிறது. பாசறையில் இருக்கும் அரசனைப் பாடுதல், நாற்படைகளின் சிறப்பைப் பாடுதல், சேர மன்னர்களின் கடல் வெற்றி, ஆரியரை வென்றது. படைவீரர்களின் இயல்பைப் பாடுதல் அரசனின் நாட்டு வளன் - பகைவர் நாட்டு அறிவு போன்றவற்றை நயப்படுத்தி காட்டும் அமைப்பும் இங்கு சிறப்படைகின்றன.

பதிற்றுப்பத்தில் பகை நாட்டு வளம் அழித்தும், புற முதுகிட்டு செல்லாத படைவீரர்கள் விருந்து அளித்த செய்தியை பதிற்றுபத்தில் காணலாம். பதி.48, 25 போன்ற பாடல்களில் அரசர்களுடைய சிறப்பும், விருந்து நடைபெறும் செய்தியும் அதிக இடம் பெறும் உணவு செய்தியும் இடம் பெறுவதை அறியலாம்.

### 1.1.5.1.3 அகப்புறப்பாடல்

எட்டுத் தொகை நூல்களில் ஓர் அகப்புற பாடலே காணப்படுகிறது. அது பரிபாடல் பாவகையால் பெயர் பெற்ற மற்றொரு பாட்டு பரிபாடல். பரிபாடல் வெண்பா என்ற பாவின் உட்பிரிவாகத் தொல்காப்பியரால் குறிப்பிடப்படுகிறது. சங்க இலக்கிய பரிபாடல் அகப்பொருளும், புறப்பொருளும் சேர்ந்த கலவை நூல் முழுமையாக கிடைக்கப் பெறவில்லை. மொத்தப் பாடல்கள் எழுபது கிடைத்தவை. இருபத்தி இரண்டு உள்ளன. முப்பத்திரண்டு அடி சிற்றெல்லைகளும் நூற்றி நாற்பது அடி பேரெல்லையும் கொண்டது.

### 1.1.5.1.3.1 பரிபாடல்

இருபத்தி இரண்டு பாடல்களில் திருமால் மீது ஆறுபாக்களும், முருகன் மீது எட்டுப்பாக்களும், வையை ஆற்றைப் பற்றி எட்டுப் பாக்களும் அமைகின்றன. கடவுளை வாழ்த்தும் பாடல்கள் புறப்பாடல்களாயின் வையைப் புனல் பெருக்கெடுக்கும் சூழலில் காட்டப்படும் காட்சிகள் அகபாடல்களாகின்றன.

திருமால் பற்றிய பாடல்களில் திருமாலிருங் குன்றமும், செவ்வேள் பற்றிய பாடல்களில் திருப்பரங்குன்றமும், வையை பற்றிய பாடல்களில் திருமருத முன்றுறையும் சிறப்பிக்கப்படுகின்றன. கடவுள் குறித்த பாடல்களைக் கொண்ட நூலாக இருந்தாலும் சங்க மரபிலேயே புனையப்பட்டுள்ளது.

பரிபாடல்களுக்குப் பண்கள் வகுக்குப் பெற்றுள்ளன. இதனால் இப்பாடல்கள் இசையுடன் முற்காலத்தில் பாடப்பெற்றுள்ளன. தெய்வ வழிபாட்டு முறைகளையும் இந்நூலில் காணலாம். சொற்சுவை, பொருட்சுவைகளில் சிறந்தவை. வடமொழி சொற்கள் கலந்து காணப்படும் பாடல்களும் உண்டு. முதல் பக்தி பனுவலாக இதனைக் காண வேண்டும். இறைவனுக்கு விருந்து படைத்தல், அதை சுற்றதாருடன் பகிர்ந்து உண்ணல் செய்தியும், அதில் இடம் பெறும் உணவுப் பொருட்கள் இடம் பெறும்.

### 1.1.5.2 பத்துப்பாட்டு

சங்க இலக்கியத்தின் மற்றொரு பிரிவு பத்துப்பாட்டாகும். பத்துப்பாட்டில் பத்துப்பாடல்களில் பத்து நூற்களாகும். இதில் குறைந்த பாடல் அடிகளைக் கொண்ட எண்ணிக்கை நூற்று மூன்றாகும். பெரிய அடிகள் என்பது எழுநூற்றி எம்பத்திரண்டு அடிகளை உடையன. பத்துபாட்டு நூல்கள் குறித்து

"முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை

பெருகு வளமதுரைக் காஞ்சி - மருவினிய

கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்

பாலை கடாத்தொடும் பத்து”[37] தொல். நூற்பா.50

என்னும் பாடல் வழி அறியலாம். பத்துப்பாட்டில் செம்பாதி நூல்கள் ஆற்றுப்படை நூல்களாகும். பத்துப்பாட்டில் அதிகமாக விருந்தோம்பல் செய்தி இடம் பெறுகிறது. விருந்தில் உணவு செய்தியும், உணவுப் பொருட்களும் நீர் உணவு போன்ற செய்தியும் இடம்பெறுவதை காணலாம்.

### 1.1.5.2.1 புறப்பாடல்கள்

புறம் குறித்த நூல்களாகும். கூடவே மதுரைக் காஞ்சி என்னும் நூலும் புறம் குறித்த நூல்களாகும். முல்லைப்பாட்டு, பட்டினப்பாலை, குறிஞ்சிப்பாட்டு மூன்று அகநூல்களாகும். நெடுநல்வாடை என்னும் நூல் அகப்புறநூலாகும்.

### 1.1.5.2.1.1 திருமுருகாற்றுப்படை

இதனை இயற்றியவர் நக்கீரர் ஆவார். பத்துப்பாட்டில் கடவுள் வாழ்த்து போன்றது இந்நூலாகும். திருமுருகாற்றுப் படைக்குப் புலவராற்றுப்படை என்ற மற்றொரு பெயரும் இதற்குண்டு பிற ஆற்றுப்படை நூல்கள் ஆற்றுப்படுத்தப்பட்டு பெயரிலேயே அமைய, முருகனை ஆற்றுப்படுத்திய பெயரிலேயே நூல் தலைப்பு அமைந்தது சிறப்பு. பிற்காலத்தில் சைவ திருமுறை வரிசையில் சேர்க்கப்பட்டுள்ளது. இதன் வரிகளின் எண்ணிக்கை முந்நூற்றி பதினேழு ஆகும். இந்நூல் முருகனின் அறுபடை வீடுகளையும் குறிப்பதால் ஆறுபகுதிகளாகப் பகுத்துக் காண்பர்.

முதற்பகுதியில் திருப்பரங்குன்றம் என்னும் மலைக்கோயிலைக் குறித்து பாடப்பெற்றுள்ளது. இயற்கைவளம், முருகன் திருக்கோலம் - சூரனுடன் முருகன் செய்த போர் முதலியன. இரண்டாம் பகுதி திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்) தலம். முருகனுடைய ஆறுமுகங்கள் பன்னிரு தோள்களின் சிறப்பு முதலியன. மூன்றாம்

பகுதி திருஆவிநன்குடி (பழனிமலை) வழிபடும் மகளிரின் சிறப்புக்கள், முருகனை வழிபடும் முனிவர்களின் பெருமைகளைக் கூறுவது நான்காம் பகுதி திருவேரகம்படும் (திருத்தணி) என்னும் தலமாகும். மந்திரம் ஓதுவார் செயல்கள், வழிப்பாடு செய்யும் முறைகள் ஆகியன விளக்கப் பெறுகின்றன. ஐந்தாம் பகுதி சுவாமிமலை : இங்கு குன்றக் குரவை, முருகனின் அழகு மலையின் சிறப்பை கூறுவது ஆறாம் பகுதி பழமுதிர் சோலை - இங்கு முருகன் அருள்கின்ற முறையும், அருவியின் சிறப்பும் விளக்கப்படுகின்றன. குறிஞ்சி நில கடவுளான முருகபெருமானின் ஆறு முக்கிய களத்தை மையமிட்டு பாடல் அமைகிறது. குறிஞ்சி நில மக்கள் முருகன். முருகன் கடவுள் வேல் வெறியாட்டு விழாவில் பலி கொடுத்து விருந்து படைத்தல், அதை சுற்றத்தாருடன் பகிர்ந்து உண்ணும் முறையும் விருந்தோம்பல் சிறப்பும் நடைபெறுவதை அறியலாம்.

### 1.1.5.2.1.2 பொருநராற்றுப்படை

இரண்டாவது காணும் நூல் பொருநராற்றுப் படையாகும். இதனை பாடியவர் முடத்தாமக் கண்ணியார் இருநூற்றி நாற்பத்தியெட்டு அடிகள் கொண்டது. பாட்டுடைத் தலைவன் கரிகாற் பெருவளத்தான். பொருநருடன் இருக்கும் பாடினி நல்ல அணிஉள்ளவள். இவளின் பத்தொன்பது உறுப்புகளை வருணித்துள்ளதே இதற்கு சான்றாகும்.

பொருநர் என்பவர் மூன்று வகைப்படுவர். அவை ஏர்க்களம் பாடுவோர், போர்க்களம் பாடுவோர், பரணி பாடுவோர் எனப் பலவகைப்படுவர். இந்நூலை இயற்றியவர் போர்க்களம் பாடும் பொருநர். இப்பாடலில் கரிகால் வளவனுடைய போர்த்திறன், அவன் புலவர்களைப் பேணும் முறை, சோழ நாட்டுவளம் முதலியன தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. குறிப்பாக முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் ஆகிய நிலங்கள் அருகருகே அமையும் பாங்கு என இயற்கை வருணனைகளும் மிகுந்து காணப்படுகின்றன.

அரசர்கள் பொருநனுக்கு விருந்து கொடுத்தல். விருந்து கொடுக்கும் போது அதனுடன் எவ்வகையான உணவுப் பொருட்கள் வழங்கினான் என்பதை அறியலாம்.

### 1.1.5.2.1.3 பெரும்பாணாற்றுப்படை

பெரிய யாழை வைத்திருக்கும் பாணர்கள் பெரும்பாணர் எனப்பட்டனர். பெரிய யாழ் பாணர்கள் ஆற்றுப்படுத்தப்படுவதாலும், சிறுபாணாற்று படையைக் காட்டிலும் அதிக அடிகளைப் பெற்றிருப்பதாலும் இது பெரும்பாணாற்றுப்படை எனப்படுகிறது. இந்நூலிற்கு ‘பாணாறு’ என்னும் பெயரும் உண்டு. இந்நூலின் பாடல்கள் ஐந்நூறு அடிகளைக் கொண்டது. இதனை இயற்றியவர் கடியலூர் உருத்திரங்கண்ணனார். பாட்டுடைத் தலைவர் தொண்டைமான் இளந்திரையன்.

இந்நூலில் பாணனது யாழின் வருணனை குறிஞ்சி நில மக்கள் இயல்பு, முல்லை நிலத்து மக்களின் வாழ்வியல் முறைகள், மருத நிலத்து மக்களின் பண்பாடுகள், வலைஞர் வாழ்விடம், அந்தணர் உறைவிடம், பாணன் வறுமை, பட்டினத்து மக்களின் பாங்கு, பாலை நிலக் கானவர், முதலிய செய்திகள் விவரிக்கப்படுகின்றன. மருதநில நில மக்களின் விருந்தோம்பல் செய்தியும் அரசன் தன் மகளுக்கும் வீரர்களுக்கு விருந்து அளித்தல் செய்தி இடம் பெறுகிறது.

அரசன் கொலுவீற்றிருக்கும் காட்சி, கலங்கரை விளக்கம் பற்றிய செய்தி போன்றவை குறிப்பிடத்தக்கவை.

### 1.1.5.2.1.4 சிறுபாணாற்றுப்படை

சிறிய யாழை வைத்திருக்கும் பாணன் பாடிய பாடல் சிறுபாணாற்றுப்படை ஆகும். இந்நூல் இயற்றியவர் இடைக்கழி நாட்டு நத்தத்தனார் ஓய்மா நாட்டு நல்லியன் கோடனன். இதன் பாட்டுடைத் தலைவன் ஆவான். இருநூற்றி அறுபத்தொன்பது அடிகளால் ஆனது.

பாணர்கள் மூவகைப்படுவர். அவரை,

(1) இசைப்பாணர்

(2) யாழ்ப்பாணர்

(3) மண்டைப்பாணர்

என வகைப்படுத்துவர். இவர்களுள் யாழ்ப்பாணர்களை அவர்கள் வைத்திருக்கும் யாழை அடிப்படையாக்கி இரண்டு வகையாகப் பிரிப்பர்

(1) சிறிய யாழ்ப்பாணர்

(2) பெரியயாழ்ப்பாணர்

என இரண்டு வகைப்படும்.

விறலியின் கன்னம், கூந்தல், நுதல் நாக்கு, எயிறு முதலான பத்து உறுப்புகள் வருணிக்கப்பட்டுள்ளன. குறிஞ்சி நில காவலனான நல்லியக் கோடனைக்காண நெய்தல் நிலம், முல்லை நிலம், மருதநிலம் ஆகிய ஊர்களைக் கடந்து செல்ல வேண்டும் என்று கூற வந்த புலவர், மூவேந்தர்களான சேர மன்னர்கள், சோழ மன்னர்கள், பாண்டிய மன்னர்கள் அவர்களின் தலைநகரங்கள் முதலியவற்றை விட நல்லியக் கோடனின் ஈகைத்திறன் சிறந்தவை. கடையெழு வள்ளல்களுக்கும் மேம்படக் கொடை வழங்குபவன். எனவே அவனை நாடி சென்றால் பரிசில் பெறுவது நிச்சியம் என்று பாணன் கூறுகிறான். கடையெழு வள்ளல்கள் குறித்த இருபத்தி எட்டு வரிகள் இலக்கிய ஓவியங்களாகும். புலவரின் புனைவு சுகந்திரம் ஒரு சட்டகத்தில் அகப்படவில்லை என்பதற்கு இந்நூல் சான்று.

விருந்தோம்பலில் சிறுபாணாற்றுப்படையில் அதிகமாக காணப்படுகிறது. விருந்துல் இடம் பெறும் உணவுப் பொருட்கள், கள் பற்றிய செய்தியும் காணப்படுகிறது. இதை அடுத்த இயலில் அறியலாம்.

### 1.1.5.2.1.5 கூத்தராற்றுப்படை என்னும் மலைபடுகடாம்

மலைக்கு யானையை உவமித்து, மலையில் உண்டாகும் ஓசையை கடாம் என்று சிறப்பித்தமையால் இந்நூல் மலைப்படுகடாம் எனப் பெயர் பெற்றது. ஆசிரியப்பாவால் ஆன இந்நூலில் ஐந்நூற்றி எம்பத்தி மூன்று அடிகளைக் கொண்டது. இதனை இயற்றியவர் இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங் கௌசிகனார். நன்னன் சேய் நன்னனைப் பாட்டுடைத் தலைவனாக கொண்டு திகழ்கிறது. கூத்தரை ஆற்றுப்படுத்துவதால் இதனை கூத்தராற்றுப் படை எனவும் வழங்குபவர்.

கூத்தர்களின் இசைகருவிகளான முழவு, ஆகுளி, பதலை, கோடு, தூம்பு, குழல், யாழ், பாண்டில் முதலிய இசைக்கருவிகள் காணப்பட்டன. காட்டு வழி குண்டு குழிகள் நிறைந்து காணப்படும். நன்னனின் கொடைத்திறம் முக்கியமாக புகழப்படுகிறது. மலைச்சாரலில் வசிக்கும் மக்களின் விருந்து உபசரிக்கும் இயல்பு, நன்னனின் ஊர் சிறப்பு முதலியன குறிப்பிடத் தகுந்த பகுதிகளாகும்.

மன்னனின் கொடை, மலையில் விளையும் உணவுப் பொருட்கள், உணவில் இடம் பெறும் பழங்கள், விருந்தினரை பேணுதல் போன்ற செய்திகள் இடம் பெறுகின்றன.

### 1.1.5.2.1.6 மதுரைக் காஞ்சி

வீடுபேறு காரணமாகப் பல்வேறு நிலையாமைகளைச் சான்றோர் உணர்த்துதல் காஞ்சி எனப்படும். மதுரையிடத்துப் பாண்டியன் தலையாலைங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனுக்குக் கூறிய காஞ்சி ஆதலால் மதுரை காஞ்சி எனப்பட்டது. இப்பாடல் எழுநூற்றி எண்பத்திரண்டு அடிகளையுடையது.

பாண்டியரின் பெருமை, நெடுஞ்செழியனது போர்த்திறன், அவனால் ஆளப்பட்ட பாண்டிய நாட்டுப் பல்வகை நகரங்கள், மதுரை மாநகர் சிறப்பு, வீடு பேறடைதற்குரிய வழிகள், நாளங்காடி, அல்லங்காடி, இங்கு விற்கப்படும் பண்டங்கள் முதலிய செய்திகள் விளக்கப்படுகின்றன.

நாடு, நகரம், மதில், அரண், அரசு, மக்கள், தொழில், கலை என்று ஒரு நல்ல நாட்டுக்குக் கட்டாயம் இருக்க வேண்டிய கூறுகளை அனைத்தையும் ஒன்று விடாமல் கூறியிருப்பது இந்நூலின் சிறப்பு. விருந்தோம்பலில் மன்னன் கொடையும், உணவுபொருட்கள், கள் பற்றிய செய்தியும் இடம் பெறுகின்றது. விருந்தோம்பல் மக்கள் வாழ்வாதாரங்க்ள விளக்கப்படுகின்றன.

### 1.1.5.2.2 அகநூல்கள்

பத்துப்பாட்டில் அகநூலில் குறித்த சிக்கல் இன்றளவும் இருந்து கொண்டே இருக்கிறது. ஆகையால் இச்சிக்கலை மாற்றி அகநூல் மூன்று என எடுத்து, மூன்று நூல்களும் அறிமுகச் செய்யப்படுகின்றன.

#### 1.1.5.2.2.1 முல்லைப்பாட்டு

தமிழர் திணை அடிப்படையாக வைத்து இலக்கியங்களைப் புனைந்தனர். அதற்கு முதல், கரு உரி என்னும் முப்பொருளையும் வைத்தனர். இதில் முல்லைத் திணைக் குறித்த பாடலே முல்லைப்பாட்டாகும். இதனை இயற்றியவர் நம்பூதனார் ஆவார். தலைவன் பிரிந்து சென்றபின் தலைவி இல்லின் கண் ஆற்றியிருத்தலே இருந்தலும் இருத்தல் நிமித்தமாகும். இந்நூல் நூற்றி மூன்று அடிகளால் ஆனவை.

தலைவனைப் பிரிந்த தலைவியின் ஆற்றாமையும், தோழியின் ஆற்றியிருக்க முயற்சிக்கும் நிலையும், விரிச்சி கேட்டல், பாசறையில் தலைவன் நிலை, யவணர், மிலேச்சர்களின் நிலை, அரசனின் கட்டிலின் நிலை போரில் காயமடைந்த வீரர்களுக்கு ஆறுதல் கூறுதல், நாளை நடைபெறும், போருக்கான தந்திரங்களை

சிந்தித்தல், கார்காலம் வரத் தொடங்குதல், தலைவர் தேர்பாகனிடம் விரைவாக வண்டியைச் செலுத்த கட்டையிடுதல் என முடிகின்றது. முல்லைத் திணைக்கான முப்பொருள்களும் நயமாக பயின்று வந்துள்ளன. முல்லைத் திணையில் தலைவனுக்கு தலைவி விருந்து படைத்தல், தலைவியின் பண்பும், விருந்தில் இடம் பெறும் உணவும், உபசரிக்கும் முறையும் இடம் பெறும்.

### 1.1.5.2.2.2 குறிஞ்சிப்பாட்டு

முல்லை திணைக் குறித்து முல்லைப் பாட்டு பாடியது போல் குறிஞ்சி திணைக் குறித்து குறிஞ்சிப்பாட்டு பாடுகிறது. இதனை இயற்றியவர் கபிலர். இந்நூல் இருநூற்றி அறுபத்தியொன்று அடிகளைக் கொண்டது. ஆரிய அரசன் பிரகத்தனுக்கு தமிழ் கற்பிக்கும் பொருட்டு பாடப்பெற்ற நூலாகும். இந்நூலை பெருங்குறிஞ்சி என நச்சினார்க்கினியர் குறிப்பிடுவார்.

தோழி செவிலியிடம் அறத்தொடு நிற்கும் சூழலே குறிஞ்சிப்பாட்டாகும். மலையில் காணப்பட்ட மலர்களின் எண்ணிக்கை தொன்னூற்றி ஒன்பதாகும். தோழியும், தலைவியும் தினைப்புனம் காத்தல், சுனையில் நீராடி செல்லுதல், பூப்பறித்து மாலை சூடி மகிழ்ந்திருத்தல், நாயோடும் இளையரோடு தலைவன் வருதல், யானையைக் கண்டு தலைவி நடுங்க, தலைவன் அம்பு எய்து அதனைத் துரத்த, தலைவிக்கும், தலைவனுக்கும் களவு வாழ்வு பிறக்கிறது. இதுவே குறிஞ்சிப்பாட்டின் தளமாகும். இயற்கை வருணனைப் படித்து இன்புறுத்தக்கதாகும். இது கபிலரின் கவிதிறனைக் குறிக்கிறதை அறியலாம். குறிஞ்சில் பாட்டில் மலையும், மலையில் விளையும் பொருட்கள், விருந்தோம்பல் முறையும், வேட்டையாடி கிடைக்கும் உணவுப் பொருட்களுடன் சுற்றத்தாருடன் பகிர்ந்து உண்ணும் முறையும் காண முடிகிறது.

### 1.1.5.2.2.3 பட்டினப்பாலை

பட்டினம் என்பது கடல் சார்ந்த நெய்தல் நிலம். நெய்தல் நிலமான காவிரிப்பூம்பட்டினத்தை இந்த நூல்நெடுகப் பாடுகின்றது. பாலைத்திணைச் சார்ந்தும் பாடப்பெறுகின்றது. எனவே இந்நூலின் திணை அமைப்பு நெய்தலும் பாலையும் இணைந்த ஒன்றாகும். முந்நூற்றி ஒன்று அடிகளை கொண்டது. இதனை இயற்றியவர் கடியலூர் உருத்திரங்கண்ணனார். பாட்டுடைத் தலைவர் கரிகாற் பெருவளத்தான்.

முதல் இருநூற்று பதினெழு வரிகளும் காவிரிப்பூம்பட்னத்தின் பல்வேறு சிறப்புகளை எடுத்துரைக்கின்றன. காவிரியின் வளம், நகரத்தின் சிறப்பு, நெய்தல் நில மக்கள் விளையாட்டு, ஏற்றுமதி - இறக்குமதி நிகழும் பண்டகசாலை, வணிகர்களின் நடுநிலையான வாழ்க்கை முறைகள் இத்தகைய சிறப்புடையது பட்டினம். பட்டினம் கிடைத்தாலும் தலைவன் தலைவியைப் பிரிய மாட்டேன் என்கிறான்.

நூலின் அடுத்த பகுதி கரிகாலனைக் குறித்தவை. கரிகாலன் அரசுரிமை பெற்ற நிலை, அவன் பகைவர் நாட்டைப் பாழ்ப்படுத்தியமை, தனது நாட்டை சீர்ப்படுத்தியமை ஆகியவைப் பற்றி விளக்கப்படுகின்றன. கரிகாலன் தன் நாட்டு மக்களுக்குச் செலுத்திய செங்கோலினும் குளிர்ச்சி பொருந்தியவை தலைவியின் மென்தோள்கள் என்று கூறி நிறுத்துகிறார். எனவே அகப்பாடல் கட்டமைப்பால் அமைந்து புறச் செய்திகளை அகத்திற்கு உவமையாக காட்டியது புலவரின் புலமைத் தளத்திற்குச் சான்றாகும். பாலை நிலத்தில் கிடைக்கும் பொருட்கள், வேட்டையாடுதல் சிறப்பும் பலி உணவும், விருந்தோம்பல் மாண்பும் இடம் பெறுகிறது.

### 1.1.5.2.3 அகப்புற நூல்கள்

எட்டுத்தொகை நூல்களில் பரிபாடல் எங்ஙனம் அகமும் புறமும் கலந்தது போலவே பத்துப்பாட்டிலும் அகமும் புறமும் கலந்த நூல் ஒன்று காணப்படுகிறது. அந்த நூல் நெடுநல்வாடை.

#### 1.1.5.2.3.1 நெடுநல்வாடை

இதனை இயற்றியவர் நக்கீரர். நூற்றியெம்பத்தியெட்டு அடிகளைக் கொண்ட நூலாகும். பாட்டுடைத் தலைவன் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்.

இப்பாடலில் அரசன் ஒருவன் தலைவியை பிரிந்து பாசறையில் தங்கி, வாடைக் காலத்தில் தலைவியின் துயர் கண்டு அவள் துயர் நீங்குமாறு தலைவன் பகைவரை வென்று விரைவில் வருவானாக என்று தோழியர் கொற்றவையை வாழ்த்தி வேண்டுவதாக அமைகின்றது. பாடலின் முதல் எழுபத்திரண்டு அடிகள் கூதிர் காலத்தின் வருணனையையும் இயற்கையுடன் மனிதர்கள் ஒன்றாக வாழ்ந்தனர் என்பதை அழகுறப் புனைகின்றது.

சந்தனம், விசிறி முதலில் வேனிற்காலப் பொருள்கள் பயனிழந்து கிடக்க, நெருப்பு மூட்டி குளிர்காயும் நிலை காட்சிப்படுத்தபடுகின்றது. எழுபத்தி மூன்று அடி முதல் நூற்றி அறுபத்தி எட்டாம் வரி வரை அமையும் பகுதி அரசி வாழும் அரண்மனை, கோபுர வாயில் அரண்மனை ஓசைகள், அந்தப்புரம், அவள் படுத்திருக்கும் கட்டில், அதன் மேலுள்ள படுக்கை போன்றவற்றையும், இறுதி இருபது அடிகள் தலைவனின் பாசறை நிலையை குறித்து விளக்கப்படுகிறது. நடந்த போரை எண்ணிப் பார்க்கிறான். தனக்காகவும், தன் நாட்டுக்காகவும் விழுப்புண் பட்டவர்களை பாசறையில் இருந்து வெளிப்பட்ட மன்னன் பார்த்துக் கொண்டே வருகிறான். இவன் வெற்றிப் பெருமிதம் இவன் விழிகளை மூடி உறக்கம்

கொள்ள வைக்கிறது என்றாலும் போர் கொடியது என்பது புலவர் நக்கீரர் கருத்து போலும் என்பதை அறிவுறுத்துகிறது.

இங்ஙனம் அகப்பாடல் வடிவத்தில் காணப்பட்ட இந்நூலில்,

"வேம்புதலை யாத்த நோன்காழ் எ∴கம்"

என்னும் அடியின் மூலம் இது பாண்டியனைச் சுட்டுகிறது என நச்சினிகினியார் கூறுகின்றார். இதனால் இந்நூல் அகமும், புறமும் கலந்து நூல் என அறியப்பகின்றது. தலைவன், தலைவி மற்றும் உறவினர்களின் விருந்து பற்றிய செய்தியும், விருந்தில் இடம் பெறும் உணவுப் பொருட்கள் அரசனின் ஈகையும் இடம் பெறுகிறது.

## 1.2 தொகுப்புரை

'விருந்தோம்பல்' என்னும் பண்பாடு தமிழ் மொழி வழங்கும் நிலத்தில் தொன்று தொட்டே காணப்படுகின்றது. இயற்கையான பொருட்களை உண்டு வாழ்ந்தனர். வரவேற்றல், உபசரித்தல், பாதுகாத்தல் இம்மூன்றும் விருந்தின் படி நிலைகளாகக் கொள்ளலாம் மக்கள் ஒருங்கிணைந்து வாழ விருந்து மிகச் சிறந்த பண்பாக கருதப்பட்டது என்பதையும்,

கிடைத்த உணவுகளைச் சுற்றத்தாரருக்குக் கொடுத்ததன் மூலமும் உணவு பரிமாற்றம் தொடங்கியது. அதன் பின் இது மரபாயிற்று. பிற்காலத்தில் விருந்தோம்பலாக மாறியது. விருந்தோம்பல் குறித்தான வாய்மொழி வழக்காறுகள் நேர்மறையாகவும், எதிர்மறையாகவும் காணப்படுகின்றன என்பதையும்,

தமிழ் மொழி ஆதி இலக்கணம், இலக்கியங்களும் விருந்து, ஈகை போன்ற செயல்களுக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து புனைய பெற்றுள்ளது. தொல்காப்பியத்துள் கூறிய உணவு முறைகள் திணைகளை அடிப்படையாக வைத்துக் கூறப்பட்டுள்ளன. நிலத்திற்கு நிலம் உணவு முறைகள் வேறுபடும். தன்னலமற்ற வாழ்வை வாழ்ந்தவர்களே சங்க தமிழர்கள். இதனை சங்க இலக்கியங்கள் மூலம் அறிந்து கொள்ளலாம் என்ற செய்தியினையும்,

சங்க இலக்கியங்கள் என்பது பதினெட்டு நூல்களில் தொகுப்பாகும். பொதுவாக அகம், புறம் என்னும் இரு பகுப்புகளில் இலக்கியங்கள் தோன்றின. இரு இலக்கியங்களின் விருந்தோம்பு பண்புகள் சற்று விளக்கமாகவே கூறப்பட்டுள்ளன. பெரும்பாலான சங்க இலக்கியங்கள் மதச் சார்பற்ற, இனச் சார்பற்ற இலக்கிய மரபை காட்டுகின்றன என்பதையும் இவ்வியல் எடுத்துரைக்கின்றது.

சங்க இலக்கியங்களில் கவிதைப் பொருள் மனித வாழ்வியல் அனுபவங்களிலிருந்து புலவர் எடுத்தனர். மனித உணர்வுகளையும் தலைவன், தலைவியரின் காதல் வாழ்க்கையும் காட்டும். அகமரபும், தலைவனின் வீரம், புறவாழ்வு இவற்றைக் காட்டும் புறமரபும், மனித வாழ்வின் அறநெறிகளையும், அன்பு ஒழுக்கத்தையும் சுட்டிக் காட்டுகின்றன. இயற்கையோடு இயைந்த வாழ்வையும், இயற்கையைப் பாதுகாத்த முறைமைகளையும் எச்சங்களாக சங்கப் புலவர்கள் பதிவு செய்துள்ளனர். சங்க இலக்கியங்கள் இல்லையெனில் விருந்தோம்பல் பண்புகள் மறைந்திருக்கக் கூடும் என்பதில் எவ்வித ஐயமுமில்லை.

விருந்து என்னும் சொல்லுக்கு புதுமை என்னும் விளக்கம் தருகிறது. புதுமை என்றால் முன் பின் தெரியாதவர்கள் உணவு வழங்குதல் என்று பொருள். சங்க இலக்கியங்களில் தலைவி, தலைவனுக்கும், குதிரைக்கும் அளிக்கும் உணவும் விருந்து என்று கூறப்பட்டுள்ளதை காண முடிகின்றது. போர்க்காலங்களின் அரசன் வீரர்களுக்கும், தலைவி சுற்றத்தார்க்கும் உணவும், உணவுப் பொருள்களும் அளிப்பதையும் ‘விருந்து’ என்றும் அழைக்கப் படுகின்றது. விருந்து என்பது புதுதை என்னும் விளக்கத்திற்கு மாறாக தெரிந்த உறவினர்க்கும் உணவு அளிப்பதையும் விருந்து என்றே கொள்ளப்படுவதை அறிய முடிகின்றது.

ஒவ்வொரு திணைக்கும் ஒவ்வொரு விதமான உணவு பழக்கங்கள் காணப்படுகின்றன. குறிஞ்சித் திணையின் விருந்தோம்பல் பண்புகள் பற்றிய செய்திகள் அடுத்த இயலில் ஆராய்ந்து விளக்குகிறது.

## குறிப்புகள்

1. கழகத் தமிழ் அகராதி, ப.855
2. சுப்பிரமணியன், க்ரியாவின் தற்கால தமிழ் அகராதி, ப.90
3. தி கிரேட் லிப்கோ, ஆங்கிலம்-ஆங்கிலம், தமிழ்-அகராதி, ப.260
4. வின்சுலோவின், தமிழ் ஆங்கில அகராதி, ப.948
5. விசுவநாதப்பிள்ளை, தமிழ் ஆங்கில அகராதி, ப.657
6. நா.கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழி அகராதி, ப.947
7. சுப்பிரமணியன், க்ரியாவின் தற்காலத் தமிழகராதி, ப.222
8. நா.கதிரைவேற் பிள்ளை, தமிழ் மொழி அகராதி, ப.947
9. விசுவநாத பிள்ளை, தமிழ் ஆங்கில அகராதி, ப.171
10. கழகத் தமிழ் அகராதி, ப.244
11. சங்க இலக்கியம் பொருட் களஞ்சிய தொகுதி அ-ஔ, ப.8
12. சுப்பிரமணியன், க்ரியாவின் தற்கால தமிழகராதி, ப.940
13. நா.கதிரைவேற் பிள்ளை, தமிழ்மொழி அகராதி, ப.45
14. விசுவநாத பிள்ளை, தமிழ் ஆங்கில அகராதி, ப.658
15. நா. கருணாநிதி, தொல்காப்பிய ந.கருணாநிதி, ப.10
16. மேலது, ப.83
17. மேலது, ப.30
18. ச.வே.சு, தொல்காப்பியம் தெளிவுரை, ப.381
19. இளம்பூரணர், தொல்காப்பியம் பொருளதிகாரம், ப.91
20. தொல்காப்பியம் மாணவர்க்கான எளிய உரை, ப.30
21. ச.வே.சு, தொல்காப்பியம் தெளிவுரை, பக் 446, 447
22. ச.வே.சு, தொல்காப்பியம் தெளிவுரை, பக் 446, 447
23. நா.கருணாநிதி, தொல்காப்பியம் மாணவர்க்கேற்ற எளிய உரை, ப.83

24. ச. அகத்தியலிங்கம், நாட்டுப்புறவியல், ப.20

25. சு.ஆனந்தன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.68

26. ச.வே.சு, தொல்காப்பியம் தெளிவுரை, ப.56

27. சு. சண்முக சுந்தரம், நாட்டுப்புற இயல், பக்.252, 253

28. எஸ்.கே.சாமி, தமிழ் நாட்டுப் பழமொழிகள், பக் 51, 52, 259

29. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு பாடவியல், ப.352

30. ஜோதி மணி, இலக்கிய வீதி ப.88

31. சாமி சிதம்பரனார், பத்துப்பாட்டு பண்டைத் தமிழரும், ப.4

32. கழகத் தமிழ் அகராதி ப.349

33. சுப்பிரமணியன், க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.319

34. பெ. மாதையன், சங்க இலக்கியத்துள் வேளாண் சமுதாயம், ப.13

35. சாமி சிதம்பரனார், எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும், ப.64

36. சு. ஆனந்தன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.51

37. மேலது, ப.82

# இயல் - 2

# குறிஞ்சி நிலத்தில் விருந்தோம்பல் கூறுகள்

## 2.0 முன்னுரை

சங்க கால சமூகத்தை அறிவதற்குச் சங்க இலக்கியங்க துணைச் செய்கின்றன. திணைகள் அடிப்படையில் பாடப்பெற்ற சங்க இலக்கியங்களில் காதல், நம்பிக்கை, பழக்க வழக்கங்கள் விருந்தோம்பல் கூறுகள் ஆகியவற்றை உள்ளடக்கமாகக் கொண்டு திகழ்கின்றன. ஒவ்வொரு திணைக்கும் ஒவ்வொரு விதமான உணவு பழக்கங்கள் காணப்படுகின்றன. அவ்வகையில் குறிஞ்சி நில மக்களின் உணவு, விருந்தோம்பல் பண்புகள் குறித்து ஆய்வு செய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

## 2.1 குறிஞ்சி நிலம்

நிலங்களை ஐந்து வகையாக பகுத்து சங்ககாலப் புலவர்கள் இலக்கியங்களைப் படைத்தனர். நிலங்கள் குறித்த செய்திகளுக்குக் கருவி நூல் தொல்காப்பியமே. தொல்காப்பியம் திணைகள் குறித்து கூறும்போது நிலம், பொழுது, கருட்பொருட்கள் உரிப்பொருள்கள் முதலியவற்றைக் கூறுகிறது. குறிஞ்சி நிலத்தைக் கூறும் போது,

"சேயோன் மேய மைவரை உலகமும்"[1] என்று குறிஞ்சியின் நிலத்தைக் குறிப்பிடுகிறார். நிலத்திற்கான பொழுதுகளைக் குறிப்பிடும் போது,

"…………… குறிஞ்சி

கூதிர்யாமம் என்மனார் புலவர்"[2] என்ற பெரும்பொழுது, சிறு பொழுதுகளைக் குறிப்பிடுகின்றார்.

## 2.2 குறிஞ்சி நிலத்தின் கருப்பொருள்

திணைக்கான கருப்பொருளைத் தொல்காப்பியம் பின்வருமாறு குறிக்கிறது.

"தெய்வம் உணர்வே மா, மரம், புள்பறை
செய்தி யாழின் பகுதியொரு தொகைஇ
அவ்வகை பிறவும் கருணை மொழி"[3]

என்னும் நூற்பா மூலம் அறியலாம். இதில் குறிஞ்சித் திணைக்குரிய கருப்பொருளாக

| | | |
|---|---|---|
| தெய்வம் | - | முருகன் |
| உணவு | - | திணை மூங்கில் நெல் |
| விலங்கு | - | யானை, புலி, கரடி |
| மரம் | - | வேங்கை, கோங்கு |
| பறவை | - | மயில், கிளி |
| பறை | - | வெறியாட்டுப் பறை, தொண்டகப்பறை |
| தொழில் | - | தேன் எடுத்தல் |
| யாழ் | - | குறிஞ்சியாழ் |
| ஊர் | - | சிறுகுடி |
| பூ | - | வேங்கைப் பூ, காந்தள் பூ, குறிஞ்சிப் பூ"[4] |

என்று உரையாசிரியர்கள் இளம்பூரணர் குறிப்பிடுகிளார்.

## 2.3 குறிஞ்சியின் உரிப்பொருள்

உரிப்பொருள் என்பது ஒழுக்கம் ஆகும். குறிஞ்சி திணையின் ஒழுக்கம் என்பது 'புணர்தல்'**.**

சங்க அக இலக்கியத்தில் குறிஞ்சித் திணை பாடல்களின் எண்ணிக்கை எண்பது எட்டுத் தொகையில் 485 பாடல்களும், பத்துப்பாட்டில் 261 அடிகளைக் கொண்ட குறிஞ்சிப் பாடலும் உள்ளன. இப்பாடல்களை ஆய்வு எல்லையாகக் கொண்டு விருந்தோம்பல் கூறுகளை ஆய்வு செய்கின்றது.

## 2.4 குறிஞ்சி நிலத்தில் எட்டுத்தொகையில் விருந்தோம்பல் கூறுகள்

குறிஞ்சி நில மக்கள் வரும் விருந்தினர்க்குச் சுற்றம் ஓம்பினர். திணைகளை உற்பத்தி செய்தல் என்பதை சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகிறது. குறிஞ்சி நிலத்தின் விருந்தோம்பும் பண்புகளைக் குறிப்பிடும் போது அவர்கள் தேன், தினைமாவு முதலியவற்றை விருந்தினருக்கு பண்போடு அளித்தனர்.

குறிஞ்சி நில மக்களின் பெயர்களைக் கூறும் போது உயர்ந்தோர், பொதுவானோர் என்ற பிரிவின்கண் பிரித்ததை,

"மலைவாணருள் குடியாலும் செல்வத்தாலும் உயர்ந்தவர் பொருப்பன், வெற்பன், சிலம்பன், கொடிச்சி எனப் பெயர் பெற்றனர். மலைவானருள் பொது மக்கள் குறவர், கானவர், குறத்தியர் எனப்பட்டனர்."[5]

என்ற தம் நூலில் இராமநாதன் செட்டியார் குறித்துள்ளார். இவ்விரு மக்களும் விருந்தோம்பலைத் தம் கடமையாகச் செய்தனர். ஆனால் பார்ப்பன மக்கள் விரத உணவை மட்டும் உண்ணும் நிலையில் காணப்பட்டனர் என்பதை

"பார்ப்பன மகனே பார்ப்பனே மகனே
செம்பூ மூங்கின் நல்நார் களைந்து
தண்டொடு பிடித்த தாழ்க மண்டலத்துப்
படிவ உண்டிப் பார்ப்பன மகனே"[6] குறு. 45 (1-4)

என்னும் குறுந்தொகைப் பாடல் சான்றாகிறது. நற்றிணை குறிஞ்சி பாடலிலும் நோன்பு உண்ணுதலின் நிலையைக் குறிப்பதை,

"வான் பெயல் நனைந்த புறத்த, நோன்பியர்
கைஊண் இருக்கையின் தோன்றும் நாடக"[7] நற்.22 (6-8)

என்னும் பாடல் அடிகளில் நோன்பு மேற்கொள்பவர்கள் நீராடி விட்ட பிறகே உணவு உண்டனர் என்பதைப் படம் பிடித்துக் காட்டுகிறது. மேலும் அகநானூற்றில் நோன்பு

நோற்றல் என்பது சபதத்தின் பெயரில் குறிப்பது. அச்சபதம் பாடல் 262 இல் குறிக்கப் பெற்றுள்ளது.

"பயற்றங் கொடி படர்ந்த வயலில் பசு புகுந்து மேய்ந்தது. அள்ளி மிசூலியின் தந்தை உண்மையைச் சொன்னார். அதைக் கேட்ட கோசர் இரக்கம் இல்லாது அத்தந்தையின் கண்ணைப் பிடுங்கினார். அதனால் சினம் கொண்ட மிஞிலி கோசரைப்பழிவாங்கும் வரை கலத்தில் உணவை உண்ணேன். தூய ஆடையை உடுக்க மாட்டேன்"[8] என்று சூள் கூறி நோன்பை மேற்கொண்டாள்."

இங்ஙனம் உணவு இருந்தும் நோன்பு நோற்றலோடு மகளிரும், ஆடவரும் குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்து வந்தனர். குறிஞ்சி நில நிலத்தில் கிடைத்த இயற்கை உணவுகளை, ஞா. ஸ்டீபன் பின்வருமாறு கூறுகிறார்.

"சங்க இலக்கியங்கள் குறிஞ்சி நில மக்களின் உணவாகத் தேன், கிழங்கு வகைகள், இறைச்சி ஆகியவற்றைக் குறிப்பிடுகின்றன. இம் மூன்றும் குறிஞ்சி நிலத்தில் இயற்கையாகக் கிடைப்பவை என்பது குறிப்பிடத்தக்கது."[9]

என்று பதிவு செய்கிறார். மேலும் கூறுகையில்,

"உணவு வழக்கம் வேட்டையாடுதலும், உணவு சேகரித்தலுமாகும் என்பதை மானிடவியலார் சுட்டிக் காட்டுவர். குறிஞ்சி நில உணவு வகைகள், இனக்குழு வாழ்க்கையை பிரதிபலிக்கின்றன. ஆனால் அவர்கள் இயற்கையாகக் கிடைத்த உணவைச் சமைத்து உண்ணவும் அறிந்திருந்தனர்."[10] என்று சுட்டிக் காட்டுகிறார்.

சங்க இலக்கியங்கள் காட்சிப்படுத்திருந்த குறிஞ்சி நில உணவு உற்பத்தி முறைகள் வேளாண் செய்ய தெரிந்தவர்களாகவே காட்சிப்படுத்தப்பட்டுள்ளனர். சில பாடல்கள் வேட்டை சமூகத்தையும் காட்சிப்படுத்துகின்றன. எனவே சங்க இலக்கிய குறிஞ்சித் திணைப் பாடல்கள் இவ்விரண்டு நிலைகளில் உணவு உற்பத்தியை வெளிப்படுத்துகிறது. சான்றாக குறிஞ்சி நில மகளில் தினைபுனம் காக்கச் செல்வதையும், கிளி ஓட்ட செல்லும் நிலையையும் காட்சிப்படுத்துவதை

"சாரற் புறத்த பெருங்குரற் சிறு தினைப்

பேர்அமர் மழைக் கண் கொடிச்சி கடியவும்

சோலைச் சிறு கிளி உன்னும் நாட"[11] ஐங் 282 (6-8)

என்ற ஐங்குறுநூறு பாடல் சான்று பகர்கிறது. கிளி ஓட்டுபவனின் பெயர் கொடிச்சி ஆகும். 'சிறுதிணை' என்னும் சொல்குறிப்பால் திணை நிலத்தில் விதைக்கப்பட்டது என்பது புலனாகிறது.

## 2.4.1 வேட்டுவ சமூகம்

குறிஞ்சிநிலத்தில் உணவு சேகரிப்பவராக வேடர்கள் காட்சிப்படுத்தப்பட்டுள்ளனர். குறிஞ்சி நிலத்தில் இறைச்சி உணவுகளுக்கு வேடர்களே முக்கிய காரணமாக இருந்துள்ளனர். இதனை 'தமிழர் பண்பாடு' என்னும் நூலில்,

"குறிஞ்சியில் பண்டை மனிதன் தொடக்கத்தில் கனி கொட்டைக்குள் இருக்கும் பருப்பு, கிழங்கு வகைகளை உண்டே உயிர் வாழ்ந்திருந்தான். பருவநிலை மாறுதல் காரணமாக, இவ்வுணவுப் பொருள் கிடைப்பதில் ஏற்பட்ட முரண்பாட்டு நிலை, அவன் உணவு வகையில் விலங்குகளின் இறைச்சியையும் சேர்த்துக் கொள்ளத் தூண்டிற்று. விலங்குப் பகைவரிடமிருந்து தன்னைக் காத்துக் கொள்வதற்கு மேலாக இவ்வுணவுத் தேவையை, அவனை வேட்டையில் வல்லுநராக ஆக்கிற்று. ஆகவே மனிதனின் முதல் தொழில் வேட்டையாடுதலாய் அமைந்தது."[12]

என்றும் உரைநடை பகுதி குறிஞ்சி நில வேட்டுவ சமூகத்தின் தோற்றம் பற்றிய தேவையைச் சுட்டிக் காட்டுகிறது. மலையும், காடும் சார்ந்த நிலங்களைச் சுட்டுவதற்காக குறிஞ்சிப் பாடல்கள் அமைந்துள்ளன. வேட்டுபவர்களைக் கானவர் என்றும் சங்க இலக்கியங்கள் குறிப்பிட்டுள்ளன.

### 2.4.2 ஆடு பலி நிகழ்ச்சி

வேட்டுவ இறைச்சி என்பதைத் தவிர்த்து விலங்குகளைப் பலி கொடுக்கும் நிகழ்வும் குறிஞ்சித் திணைகள் அமைந்துள்ளது. முருக கடவுள் சைவ மத கடவுள்களில் ஒருவர் அவர் விலங்குகளைப் பலியிடும் நிகழ்வு இலக்கியபடுத்தியதால் சைவ சமயம் தமிழகத்திற்கு வரும் முன்பே, தொடக்க காலத்திலேயே நிகழ்ந்திருக்கக் கூடும் என அறிய முடிகிறது.

"குறிஞ்சி நில மக்கள் குன்றவர்களாவர். இவர்கள் பெரும்பாலும் வேட்டுபவர்களே. இவர்கள் கானவர் என்றும் பெயர் பெறுவர். பெண்பாலார் குறத்தி, கொடிச்சி எனப்பட்டனர். இவர்கள் திணையை விதைத்து உண்பர். பரண்களைக் கட்டி அவற்றின் மேல் ஏறிநின்று கவண் வீசி விலங்குகளையும், பறவைகளையும் விரட்டுவர்"[13] என்று டாக்டர் அ.தெட்சிணாமூர்த்தி குறித்துள்ளார். மேலும்

"உணவு சேகரிப்பு, வேட்டை வாழ்க்கை நிலையைக் குறிஞ்சித் திணைப்பாடல்கள் பதிவு செய்திருக்கின்றன. இச்சமூக அமைப்பின் திணை வாழ் மக்களால் குறவர் என்றும் வேட்டுவர் என்றும் அவை குறிப்பிடுகின்றன."[14] என்று சிலம்பு செல்வராசு தம் நூலில் குறித்துள்ளார்.

"வேட்டுவ குல வாழ்க்கை மனித வளர்ச்சியின் மிக முற்பட்ட நிலைகளில் ஒன்று. உணவு சேகரிக்கும் நிலை அது. அது குறிஞ்சி நில வாழ்க்கையாக ஒழுக்கமாக தமிழரிடையே குறிக்கப்பட்டு வந்துள்ளது. கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே முன்தோன்றிய மூத்தகுடி எனத் தமிழர் தம்மைக் கூறிக் கொள்ளுவதும் இதனை அடிப்படையாகக் கொண்டே"[15] என்று கள்ளூர் கு.பா.பாலசுப்பிரமணியம் கைலாசபதியின் கருத்தைக் குறிப்பிட்டுள்ளார். இவ்விலங்கினைப் பலிக்கொள்ளும் நிகழ்விற்கு வெறியாட்டம் என்று பெயர். கற்பு வாழ்வில் இணையாமல் களவு வாழ்வில் ஈடுபடும் கன்னிப் போகும் போது உடலில் பசலை படர்ந்து உண்ணாமல்

உடல் மெலிந்து, வளைகள் சுழலும் நிலை உருவாகும். தலைவியின் தாய் மகளுக்கு தெய்வத் தன்மை ஏற்பட்டுள்ளதாக நினைத்து கோவில் பூசாரியை கொண்டு களம் வரைந்து ஆடு பலி நிகழ்த்துவர். இதற்கு "வெறியாட்டு" என்று அழைக்கப்பெறும். குறிஞ்சி நில கடவுளின் பெயரை இணைத்து 'வேலன் வெறியாடல்' என்றும் அழைக்கப்பெறும் இது குறித்து, பெ.மாதையன் பின்வருமாறு கூறுகிறார்.

'இந்த வெறியாட்ட முழுக்க முழுக்கக் குறிஞ்சித் திணையில் நிகழ்வதாகவே உள்ளது. இவ்வழிபாடு இனக்குழுச் சமுதாயத்தின் எச்சங்களைத் தாங்கிய வழிபாட்டு முறையாக உள்ளது. கானவர் வழிபடல், குடியினருடன் கள்ளுண்ணல், ஆடுபலிகொடுத்தல், திணை தூவி வழிபடல், குரவைக் கூத்தாடல், முதுபெண்டிரும் வேலனும் குறி சொல்லுதல் எனும் பலவும் இது குறிஞ்சி நில மக்களின் வழிபாட்டு முறையாய் மட்டுமே இருந்ததைக் காட்டுகின்றன.[16] என்று பதிவுச் செய்துள்ளார். சான்றாக குறுந்தொகை பாடல் சான்று கூறுவதை

''மறிக்குரல் அறுத்து தினைப் பிரப்பு இரீஇ
செல்ஆற்றுக் கவலைப் பல்இயம், கறங்க
தோற்றம் அல்லது நோய்க்கு மருந்து ஆகா
வேற்றுப் பெருந்தெய்வம் பல உடன் வாழ்த்தி
'பேஎய்க் கொளீஇயள் இவள்' எனப்படுதல்
நோதக் கன்றே கோழிமால் வரை
மழை விளையாடும் நாடனைப்
பிழையேம் ஆகிய நாம் இதன் படவே''[17] குறு.263 (1-8)

என்னும் குறுந்தொகை பாடல் வெறிபாடல் குறித்து புலப்படுத்துகின்றது. நற்றிணை பாடல்களிலும் வெறியாட்டத்தை வெளிப்படுத்துவதை

"பெருங் களிறு வழுவை சுட்டென, இரும்பிடி
உயங்கு பிணி வருத்தமொரு இயங்கல் செல்லாது
நெய்தற் பாசடை புரையும் அம்செவிப்
பைதல்அம் குழவி தழீஇ, ஒய்யென
அரும் புண் உறுநரின் வருந்தி வைகும்
கானாக நாடற்கு, 'இது என' யான் அது
கூறின் எவனோ - தோழி! வேறு உணர்ந்து
அணங்கு அறிகழங்கின் கோட்டம் காட்டி,
வெறிஎன உணர்ந்த உள்ளமொரு மறிஅறுத்து
அன்னை அயரும் முருகு நின்
பொன் நேர் பசலைக்கு உதவாமாறே?"[18] நற்.47 (1-10)

என்னும் பாடல் அடிகள் மூலம் அறியலாம். அகநானூற்றில் ஆடு பலி குறித்து பேசப்படும் தலைவனை பிரிந்த தலைவி வருந்தி உடல் மெலிந்து காணப்படுவாள். அதை பார்த்த தோழி வேலன் வெறியாட்டும், ஆடுபலி நிகழ்ச்சி மூலம் தலைவலி தன்நிலை உணர்வாள் என்பதை அறியலாம்.

"பண்பு தர வந்தமை அறியாள், நுண்கேழ்
முறி புரை எழில் நலத்து என் மகள் துயர் மருங்கு
அறிதல் வேண்டும் என, பல் பிரப்பு இரீஇ,
அறியா வேலற், தரீஇ, அன்னை
வெறி அயர் வியன் களம் பொலிய ஏத்தி
மறி உயிர் வழங்கா அளவை சென்று யாம்
சேல வரத் துணிந்த, கேண் விளங்கு, எல் வளை,
நெகிழ்ந்த முன்கை, நேர் இறைப் பணைத் தோள்
நல்எழில் அழிவின் தொல் கவின் பெறீஇய"[19] அகம்.242 (7-15)

என்னும் பாடல் அடிகளில் தலைவியின் இழந்த இளமையைப் பெற வெறியாடல் செய்ய உள்ளதாக இப்பாடல் அமைகிறது.

### 2.4.3 கானவனின் விருந்தோம்பல்

தினை புணத்தின உணவைத் தின்னவரும் முள்ளம் பன்றியைக் கானவன் அம்பு எய்து தம் இல்லத்திற்குச் சென்று தலைவியிடம் கொடுத்து தம் சுற்றத்தாருக்கும் கொடுக்கும் தலைவியின் நிலையை

"………………… சாரல்
கானவன் எய்த முளவு மான் கொழுங் குறை
தேம் கமழ் கதும்பின் கொடிச்சி, கிழங்கொடு
காந்தள்அம் சிறுகுடிப் பகுக்கும்
ஓங்கு மலை நாடன், நின் நகையினானே"[20] நற்.85 (8-11)

என்னும் பாடல் அடிகள் பன்றி இறைச்சியோடு கிழங்கையும் கொடுத்து விருந்தோம்புவதை புலவர் படம் பிடித்துக் காட்டுகிறார். இதே போலவே கானவன் பன்றி இறைச்சியை மனைவியிடம் கொடுத்து அவள் சுற்றத்தாரருக்கும் பங்கீட்டு கொடுக்கும் நிகழ்வை,

"பிணர்ச் சுவற் பன்றி தோல்முலைப் பிணவொடு
கணைக் கால் ஏனல் கைம்மிகக் கவர்தலின்
கல்அதர் அரும்புழை அல்கி, கானவன்,
வில்லின் தந்த வெண்கோட்டு ஏற்றை,
புனைஇருங் கதுப்பின் மனைவியோள் கெண்டி,
குடிமுறை பகுக்கும் நெடு மலை நாட"[21] நற்.336 (1-6)

என்னும் பாடல் அடியால் அறியலாம். மேலும் கானவர்கள் கிழங்குகளைத் தோண்டி எடுப்பர். இதனால் நிறைய குழிகள் மிகுந்து காணப்படும்.

“அன்னாய் வாழி! வேண்டு, அன்னை! கானவர்

கிழங்கு அகழ் நெடுங்குழி மல்க வேங்கைப்

பொன் மலிபுது வீதாஅம் அவர் நாட்டு”[22] ஐங்.208 (1-3)

என்னில் ஐந்குறுநூறு பாடல் மூலம் தெளியலாம்.

### 2.4.4 அசைவ உணவு

சாதாரண வாழ்வில் கூட அசைவ உணவு குறிஞ்சி நிலத்தில் பயன்படுத்தப்பட்டது. இது குறித்து கரு. இராமநாத செட்டியர்

“குறிஞ்சி நில மக்கள் பன்றி, முயல், மான் இவற்றின் இறைச்சியையும், உண்டு வந்தனர். நல்ல ஆட்சிக்கு உள்பட்ட மலைவாணர் தேனையும், கிழங்கு, இறைச்சியையும் உண்டனர். உடும்பின் இறைச்சியுடன் மானின் தசையையும் கலந்து உட்கொண்டர்”[23] என்ற செய்தியைக் காண முடிகிறது.

சங்க கால தமிழர் வாழ்வு என்னும் பகுதியில் விளக்கலாம். ஆட்டி இறைச்சியை நெய் கலந்து வெள்ளெலி இறைச்சியோடு கூகைக்கு கொடுக்கும் நிகழ்வை

“வாய்பறை அசாஅம், வலி முந்து கூகை!

மைஊன் தெரிந்த நெய்வெண் புழக்கல்

எலிவான் சூட்டொடு, மலியப் பேணுதும்

எஞ்சாக் கொள்கை எம் காதலர் வரல்”[24] நற்.83 (4-7)

என்னும் பாடல் அடிகள் மூலம் அக்கால குறிஞ்சி நில மக்களின் இறைச்சி உணவை அறியலாம். மேலும் மாமிச உணவுக் குறித்து.

“பன்றி இறைச்சி, சுறாமீன், முயல் இறைச்சி, வேட்டை ஆடிய பிறவகை மாமிசங்கள், ஈசல், கள், உடும்பு போன்றவற்றை உண்டமையும் அறியப்படுகின்றது”[25] என்று முனைவர் தா.நீலகண்டபிள்ளை தம் நூலில் குறித்துள்ளார்.

### 2.4.5 குறிஞ்சி நில தலைவனின் உணவுகள்

குறிஞ்சி நில தலைவன் உண்ட உணவினை குறுந்தொகை பாடல் பட்டியல் இடுகின்றது.

அதில் தேமா பழம், புளித்த நெல்லிக்காய் ஆகியவை இடம் பெற்றுள்ளன.

"அமிழ்தம் உண்க நம் அயல் இலாட்டி
பால் கலப்பன்ன தேக்கொக்கு அருந்துபு
நீல மென் சிறை வள்உகிர்ப் பறவை
நெல்லி அம் புளிமாந்தி அயலது
முள்இல் அம்பணை மூங்கில் தூங்கும்"[26] குறு.201 (1-5)

என்னும்பாடல் மூலம் அறியலாம். மேலும் தலைவன் சோறு உண்ணும் நிகழ்வை,

"சிறுமுத்தனைப் பேணி, சிறுசோறு மடுத்து, நீ
நறு நுதலவரொடு தக்கது நன்கு இயைவதோ;
என ஆங்கு,
அனையவை - உளையவும்"[27] கலி.50 (20-23)

என்னும் பாடல்வரியில் சோறு உணவைக் குறிக்கப் பெறுகிறது. ஊன்சோற்றை கள்ளுடன் உண்ட குறிஞ்சித் தலைவனை,

"இரும்பு வடித்தன்ன கருங் கைக் கானவன்
விரி மலர் மராஅம் பொருந்தி, கோல் தெரிந்து
வரி நுதல் யானை அரு நிறத்து அழுத்தி
இகல் அடு முன்பின் வெண் கோடு கொண்டு தன்
புல் வேய் குரம்பை புலர ஊன்றி
முன்றில் நீடிய முழவு உறழ் பலவின்
பிழிமகிழ் உவகையன், கிளையொடு கலிசிறந்து

சார்ந்த ஞெகிழியின் ஊன்புழுக்கு அயரும்

குன்றநாட..!”[28] அகம்.172 (6-14)

என்னும் பாடல் அடிகள் புலப்படுத்துகின்றன.

### 2.4.6 குறுநில மன்னனின் ஈகை

புலவர்களை வளர்த்த நிலைக்கு குறநில மன்னர்களின் பங்கு ஈடு இணையாகாது. இவர் ஈகை பண்புகளைப் பல அகப்பாடல்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன. இக்குறுநில மன்னர்கள் பெரும்பாலும் குறிஞ்சி நிலத்தை ஆண்டு கொண்டிருந்தனர். எனவே வரும் புலவர்களும் எவர்தம் மலைநாட்டின் வளத்தைப் பாடல்கள் வழியாக சுட்டுவர். குறிஞ்சி நிலப் பாடல்களின் பதிவுச் செய்யப்பட்ட குறுநில மன்னர்களின் ஈகைத் திறத்தை விளக்கப்படுகின்றது.

#### 2.4.6.1 ஓரி

கொல்லி மலையையும் அதைச் சார்ந்த இடத்தையும் ஆட்சி செய்த குறுநில மன்னன் ஓரி ஆவான். இவர் தன்னைக் காணும் பாணர்களுக்கும், புலவர்களுக்கும் மனநிறைவு ஏற்படுமாறு ஈகைகள் பல செய்வான். இவரைக் குறித்து புலவர் க.கோவிந்தன் பின்வருமாறு உரைக்கிறார்.

“இக்கொல்லி மலையையும், அம் மலையைச் சூழ் அமைந்த சிறுநாட்டையும் ஆண்டிருந்தான். ஓரி எனும் பெயருடையனொரு குறுநில மன்னன்; ஒரு விற்போர் வல்லவன்; வில்லேந்தி வேட்டம் புரியும் வகை நன்கறிந்தவன்; அதனால் வல்வில் ஓரி என வழங்கப் பெற்ற சிறப்புடையவன்; இவன் வில்லாற்றல் வன்மையை நேரிற்கண்டு வியந்து பாராட்டினாரும் உளர்”[29] என்று குறிப்பிடுகிறார். இவரைப் பாடும் பாணருக்குக் குதிரை கொடுத்தமையே,

“ஆனா நோயோடு அழி படர்க் கலங்கி
காமம் கைம்மிக கையறு துயரம்
காணவும் நல்காய்ஆயின் - பாணர்

பரிசில் பெற்ற விரி உளை நல் மான்

கவிகுளம்பு பொருத வல்மிகைச் சிறு நெறி,

இரவலர் மெலியாது ஏறும், பொறையன்

உரை கால் உயர் வரைக் கொல்லிக் குடவயின்"[30] நற்.185 (1-7)

என்னும் பாடல் அடிகளில் ஓரியின் விருந்தோம்பும் திறத்தைப் படம்பிடித்துக் காட்டுகின்றார் சங்கபுலவர். மேலும் ஓரியின் கொடைத் திறம் குறித்து.

"வில்லாண்மை மிக்க வீரனாக விளங்கிய வல்வில்ஓரி, வரையாது வழங்கும் வன்மைமுடையவனாவன். மாரி போல் வழங்கும் மலைவளம் உடைய ஓரி, தன்னைப் பாடி வரும் பாணர் முதலாயினர்க்குத் தேர் பல விருந்தளிக்கும் தெளிந்த உள்ளமும் உடையவனாயினான்."[31]

### 2.4.6.2 பாரி

சங்க இலக்கியத்தில் புலவர். புரவலர் உறவு குறிப்பிடத்தகுந்த இடத்தைப் பெறுகிறது. இல்லையேல் இன்று சங்க இலக்கியங்களே கிடைத்திருக்காது. விருந்தோம்பல் கூறுகளை மனிதன் மட்டும் செய்யவில்லை. விலங்குகளும், புறாக்களும், கிளிகளும் செய்தன. அகநானூறு என்னும் அக இலக்கிய நூலில் பாரி குறித்த வரலாற்றுச் செய்தியுடன் விருந்தோம்பல் பண்பு கூறப்பட்டுள்ளது. பாரியும், கபிலரும் உற்ற நண்பர்கள் இதனை "பாரியின் புகழ்கேட்டு அவனைப் பாடிப்பரிசில் பெற வேண்டி வந்து, அவன் அன்பால் பிணைப்புண்டு அவனை விட்டுப் பிரிய மாட்டாப் பெருநிலையுற்று, அவனோடு அப்பறம்பு மலையிலேயே தங்கி விட்ட கபிலர் மூவேந்தர் முற்றியிருப்பது கண்டார்".[32] என்னும் உரைப்பகுதிகள் சான்றாகின்றன என்பதை நா.கோவிந்தர் கூறுகிறார். இங்ஙனம் முற்றுகையிடும் போது உள்ளவர்கள் வெளியே செல்ல முடியாது. வெளியிலுள்ளவர்கள் உள்ளே போக முடியாது. இச்சூழலாக பாரியின் இருப்பிடத்திற்கு உணவு பற்றாக்குறை ஏற்பட்டது. இதனை தவிர்ப்பது எங்ஙனம் என்று கபிலர் சிந்திக்கலானார். உணவு

பற்றாக்குறையால் பாரியின் மதிலரண் திறக்கும். அவர் சரணாகதி அடைந்து விடுவார் என்று மூவேந்தர்களும் எண்ணிக் கொண்டிருந்தனர். கபிலரின் சிந்தனையை ஏற்று கிளிகள் வளைந்த நெற்கதிரைக் கொத்தி பாரியின் பரம்பில் இட்டது. இதனால் மதிலரண் அடைந்திருந்தும் உணவு பற்றாக்குறையின்றி பாரியும், போர் வீரம் இருந்தனர். இதனைப் பின்வரும் அகநானூறு பாடல் தெளிவுறுத்துவதை,

"வாய்மொழிக் கபிலன் சூழ, சேய் நின்று
செழுஞ் செய்ந் நெல்லின் விளைகதிர் கொண்டு
தடந் தாள் ஆம்பல் மலரொடு கூட்டி
யாண்டு பல கழிய வேண்டுவயிற் பிழையாது
ஆள் இடூஉக் கடந்து, வாள் அமர் உழக்கி
ஏந்துகோட்டு யானை வேந்தர் ஒட்டிய
கடும் பரிப் புரவிக் கை வண்பாரி"[33] அகம்.78 (16-22)

என்னும் பாடல் வரிகளால் உணரலாம். இதனைப் பாடியவர் மதுரை நக்கீரனார். ஒரேப்பாட்டில் புலவரையும், புரவலரையும் பாடுவது நாகரீக பண்பிற்குச் சான்றாக அமைகிறது. விருந்தினரை வரவேற்கும் நிகழ்விற்கு சமமானதாகும்.

### 2.4.6.3 அதியனின் ஈகைத் திறம்

மன்னர் ஈகைத்திறமும் விருந்தோம்பலும் பண்பிற்கு எடுத்துக்காட்டாய் திகழ்கிறது. அத்தகு பண்பிற்கு அதிகனும் சான்றாய் விளங்குவதை ஓர் அகப்பாடல் படம் பிடித்துக் காட்டுகிறது. அதியனின் வரலாற்றை புலவர் க.கோவிந்தன் பின்வருமாறு கூறுகிறார்.

"பேரரசராய் வாழ்ந்த பாண்டியர் படையில் பணியாற்றிய வீரர்களுள் அதியன் என்பவனும் ஒருவன் அதியன் சங்க காலப் பாண்டியருள் தலைசிறந்தோறும், தலையாலங்கானத்துச் செருவென்றோனும் பாண்டியன் என பல விடத்தும் அழைக்கப் பெறுவோனும் ஆய நெடுஞ்செழியன் காலத்தே பாண்டியர் படையில்

பணியாற்றினான். அதியன் மலைப்படை ஊர் ஒன்றில் வாழ்ந்திருந்தான்; வேங்கையும், பலாவும் நிறைந்து பயன்தரும் மலை, அவன் மலை"[34] என்று அவன் வரலாற்றையும் இருப்பிடத்தையும் சுருக்கமாக விளக்குகிறார். அதியனின் ஈகை திறத்தை பின்வரும் அகநானூறு பாடல் வழி அறியலாம்.

"நோய்அசா வீட முயங்கினள் வாய்மொழி
நல்இசை தரூஉம் இரவலர்க்கு உள்ளிய
நசைபிழைப்பு அறியாக் கழல்தொடி அதிகன்
கோள் அறவு அறியாய் பயம் கெழு பலவின்
வேங்கை சேர்ந்த வெற்பகம் பொலிய"[35] அகம்.162 (16-20)

என்னும் கவிதை அடிகள் மூலம் அறிய முடிகிறது.

### 2.4.6.4 நன்னன் ஈகை திறம்

அகநானூற்றில் நன்னன் என்னும் மன்னன் ஈகை திறம் புகழப்படுகிறது. நன்னன் குறித்து அகநானூற்று உரையாசிரியர் பின்வருமாறு கூறுகிறார்.

"நன்னன் பிண்டனின் மார்பில் வேலை எய்தவன்; அதனால் உண்டான வெற்றிப் புகழை உடையவன்; இரவலர்க்குக் கொடுக்கும் கொடையினன்; கலைவாணர்க்கு யானையைப் பரிசிலாக அளிப்பவன் அவனது ஊர் 'பாரம்! அவனுக்குரியது. 'ஏழில்' என்ற மலை. அந்த மலையின் பக்க மலை பாழி"[36]
என்று புலவர் அ.மாணிக்கனார் பதிவுச் செய்கிறார்,

"இசைநல் ஈகைக் களிறு வீசு வண்மகிழ்ப்
பாரத்துத் தலைவன் ஆர நன்னான்!
ஏழில் நெடுவரைப் பாழிச் சிலம்பில்
களி மயிற் கலாவத்தன்ன, தோளே"[37] அகம்.152 (11-14)

என்னும் அகநானூற்றுப் பாடல் சான்றாகிறது.

### 2.4.6.5 ஆய் மன்னனின் ஈகை தன்மை

கடையெழு வள்ளல்களுள் ஒருவன் ஆய் அண்டிரன் என்று அழைக்கப்படுகிறார்.

இது குறித்து, புலவர் கா.கோவிந்தன் தம் நூலில் பின்வருமாறு குறித்துள்ளார்.

"கடையெழு வள்ளல்களுள் ஒருவனாய் ஆய் அண்டிரனால் தோற்றுவிக்கப்பட்ட ஆய்குடி, நன்மை பலச் செறிந்தது; தமிழகத்தின் தென்பாற்கன் உள்ளது. அந்நாட்டு மலைகள் தெய்வ அருட்டன்மை உடையன. அம்மலையின் பக்க மலைகளுள் கவிரம் எனும் பெயருடையதொரு குன்றும் உண்டு. அணுகுதற்காக அருமையுடையது அக்குன்று."[38] என்று ஆய் ஆண்ட நிலத்தின் நிலவியல் பகுதிகளை தெளிவுப்படுத்துகிறார். ஆய் மன்னனிடம் பரிசிலை வாங்குபவர்கள் கல்வியில் வல்லவராக இருந்தாலும் சரி, வல்லார் அல்லாராயினும் பிச்சை பாத்திரம் நிறைய அளிப்பான் என்பதை,

"இரும்பூது கஞலிய ஆய்மலர் நாறி
வல்லினும் வல்லார் ஆயினும் சென்றோர்க்குச்
சால்அவிழ் நெடுஞ்குழி நிறைய வீசும்
மாசுல் யானை ஆஅய் கானத்து"[39] அகம்.152 (19-22)

என்னும் பாடல் அடிகள் தெளிவுப்படுத்துகின்றன.

### 2.4.6.6 ஆய் எயினனின் ஈகை தன்மை

ஆய் எயினன் என்னும் மன்னனின் ஈகைத் தன்மை குறித்து அகநானூற்றில் குறிப்பு உள்ளது. இதனை புலவர் க. கோவிந்தன் பின்வருமாறு கூறுகிறார்.

"பறவைகள் மாட்டும் பேரருள் சுரக்கும் ஆய் எயினன், பரிசிலர் மாட்டும் பேரன்புடையனாய் வாழ்ந்தான். நெடிய தன் மாளிகையின் தலைவாயிலில் நின்று, தேன்வளம் சிறந்த தன் மலையை பாடி மகிழ்வூட்டும் இரவலர், நள்ளிரவில் வந்து

வேண்டினும், வெள்ளிய கோடுகளைக் கொண்ட தலைசிறந்த யானைகளைக் கொடுக்கும் கொடை வள்ளல் ஆய் எயினான்".[40] என்று சிறப்பித்துக் கொள்கிறார். இதனை பின்வரும் அகநானூறு பாடல் சான்றாகும் என்பதை

"யாம இரவின் நெடுங்கடை நின்று
தேமுதிர் சிமையக் குன்றம் பாடும்
நுண்கோல் அகவுநர் வேண்டின், வெண்கோட்டு
அண்ணல் யானை ஈயும் வண்மகிழ்
வெளியன் வேண்மான் ஆஅய் எயினன்"[41] அகம்.208 (1-5)

என்று பரணர் என்னும் புலவர் குறித்துள்ளார். இரவலர் இரவில் வந்தாலும் அவர்களுக்கு உணவு அளித்து அவனுடைய பெருமையை பறைசாற்றுவதை அறிய முடிகிறது.

### 2.4.6.7 நள்ளி வள்ளலின் ஈகை

கடையெழு வள்ளல்களில் நள்ளி என்னும் வள்ளலும் ஒருவன். தன்னைக் காணவரும் புலவர்களை வரவேற்று உபசரிப்பது இவரின் நற்குணமாகும். நள்ளியின் ஈகை பண்பை வெளிப்படுத்தும் பாடல்களுள் ஒரு பாடல் அகநானூற்றில் காணக்கிடக்கின்றது. தோட்டி என்ற மலைச் சார்ந்த இடத்தை ஆண்டவன் நள்ளி ஆவான். இது குறித்து,

"நள்ளி கண்டீரக்கோ எனவும், கண்டீரக்கோப்பெரு நள்ளி எனவும் அழைக்கப்பெறுபவன்; நள்ளி நெடியில் தேர்ப்படை உடையவன். விற்போர் வல்ல வீரர் பலரையும் பெற்றிருந்தான் அவன், விரைந்து செல்லும் குதிரைகளையும் கொண்டிருந்தது அவன் படை";[42] என்று அவன் ஆண்ட நிலத்தையும், போர் மறவர்கள் அவன் கீழ் பணிச் செய்து சிறந்த படைகளையும் பெற்றிருந்தான் என்பதை புலவர் நா.கோவிந்தன் பதிவு செய்துள்ளார். மேலும் தன்னைப் பாடி

பரிசில் பெறும் பாணர்களுக்கு துன்பம் தீர தேரும், களிறும் பரிசிலாக கொடுத்து சிறந்த கொடையாளி ஆனதை,

''இரப்போர்க்கு

இழை அணி நெடுந்தேர் களிறொடு என்றும்

மழை சுரந்தன்ன ஈகை, வண்மகிழ்

கழல் தொடித் தடக்கை கலிமான் நள்ளி

நளிமுகை உடைந்த நறுங்கார் அடுக்கத்து

போந்தை முழுமுதல் நிலைஇய காந்தள்''[43] அகம்.238 (11-16)

என குறிஞ்சி கபிலர் போற்றுகின்றார்.

## 2.5 தலைவியின் குண நலன்கள்

நற்றிணை பாடல் ஒன்றில் தலைவியின் பண்புகளாக, தலைவன் தலைவியின் கண்களைக் கொண்டு சிறப்பிக்கிறான். இதில் சுற்றத்தாரால், விருந்தோம்பும் பண்பு ஆகியவை குறிக்கப்பெற்றுள்ளன என்பதை,

''நயனும் நண்பும்'' நாணுநன்கு உடைமையையும்

பயனும், பண்பும் பாடுஅறிந்து ஒழுகலும்

நும்மினும் அறிகுவென் மன்னே''[44] நற்.160 (1-3)

தலைவன் விருந்தினனாக தலைவி வீட்டில் வந்தப் போது பொருளைத் தலைவியே வழங்கினாள் என்பதையும் சங்கப் பாடல் விளக்குகிறது.

தலைவன் இல்லாத வீட்டில் தலைவி மட்டும் விருந்தோம்பும் பண்பு தமிழர்க்குரியதன்று. உடன்போக்குப் போன தன் மகளைத் தேடி வரும் தாய் எப்பெண்ணைக் கண்டாலும் தன் மகளைப் போலவே எண்ணுகிறாள். அவ்வாறு தன் மகளை ஒத்திருந்த பெண்ணைக் காணும் போது கண்ணீர் பெருகி வருந்தும் நிலையினை,

முன்னாள் உம்பர்க் கழிந்த என்மகள்

கண்பட நீராழ்ந்தன்றே தந்தை

தன்னூர் இடவயின் தொழுவேன்"[45] நற் - 198 (3-5)

என்னும் பாடலடிகள் எடுத்துரைக்கின்றன. இப்பாடலின் வழி தாய் தன் மகளிடம் கொண்டிருந்த அன்பானது தன் மகளை போல இருந்தவளைக் காணும் போது உண்டாகிறது. அதனால் அவளை விருந்துக்கு அழைக்கிறாள் செவிலித்தாய், அவ்விருந்தினையும் தொழுது ஏற்கும் பெருமையினையும் புறப்படுத்துகிறாள் செவிலித்தாய்.

## 2.6 குறிஞ்சி நில விளைப்பொருட்கள்

குறிஞ்சி நிலத்தில் விளைப்பொருட்கள் பல இருந்தன. அவை தானியங்களே இந்நிலத்தில் ஐவனம் என்னும் நெல்லை விதைத்தார்கள் என்பதை,

"அருவிப் பரப்பின் ஐவனம் வித்திப்

பருஇலைக் குளவியொடு பசுமரல் கட்கும்

காந்தள்அம் சிலம்பில் சிறுகுடி பசித்தென"[46] குறு.100 (1-3)

என்னும் பாடல் அடியால் அறியலாம். இயற்கையாகவே குறிஞ்சி நிலத்தில் பலாமரங்கள் காணப்படுகின்றன. அதில் வேர்பலா மிகுந்த சுவையுடையது இதை கபிலர் என்னும் புலவர் பின்வருமாறு குறித்துள்ளார்.

"வேரல் வேலி வேர்க் கோட் பலவின்

சாரல் நாட செவ்வியை ஆகுமதி"[47] குறு.18 (1-2)

என்னும் பாடல் அடியால் புலப்படுத்துகிறார்.

கானவர்கள் கிழங்கை பிடுங்குவதற்காக குழிகள் தோண்டிணர் இதனை,

'அன்னாய் வாழி! வேண்டு அன்னை! கானவர்

கிழங்கு அகழ் நெடுங்குழி மல்க வேங்கை"[48] ஐங்.209 (1-2)

என்னும் பாடல் மூலம் கபிலர் தெளிவுப்படுத்துகிறார். திணைப் பயிர்களையும் விளைவித்ததார்கள். அதில் செந்திணையும் ஒன்று என்பதனை,

“முதைச் சுவற் கலித்த மூரிச் செந்திணை

ஓங்கு வணர்ப் பெருங் குரல் உணீஇய”[49] அகம்.88 (1-2)

என்னும் தொடர் மூலம் புலவர் குறிக்கிறார். காட்டை அழித்து சீர்ப்படுத்தி உழுது திணையை விதைத்த செய்தியை பின்வரும் குறுந்தொகை பாடல் விளம்புவதை,

“மரம்கொல் கானவன் புனம்துளர்ந்து வித்திய

பிறங்குகுரல் இறடி காக்கும் புறம்தாழ்

அம்சில் ஓதி அதைஇயல் கொடிச்சி”[50] குறு.214 (1-3)

என்று கூடலூர்கிழார் உரைகிறார். திணை விதைத்து பருவத்தே வளர்ந்து விளைந்து திணைகதிராய் மாறியதை,

“மென் தோட் கொடிச்சியைப் பெறற்கு அரிதுதில்ல

பைம் புறப் படு கிளி ஒப்பவர்;

புன் புல மயக்கத்து விளைந்தன திணையே!”[51] ஐங்.260 (2-4)

என்று புலவர் கபிலர் பதிவு செய்துள்ளார். அவரை என்ற தானியத்தையும் குறிஞ்சி நிலத்தவர் வேளாண் செய்ததை,

‘அவரை அருந்த மாந்தி பகர்வர்

பக்கின் தோன்றும் நாடன் வேண்டின்”[52] ஐங்.628 (1-2)

என்னும் பாடல் அடியால் அறியலாம். மற்றொரு இடத்தில்

“சிறுதினை கொய்த இருவி வெண் கால்

காய்த்த அவரைப் படு கிளிகடியும்

யாணர் ஆகிய நல்மலை நாடன்”[53] ஐங்.46 (4-8)

என்னும் கவிதையில் தினை, அவரை ஆகிய தானியங்களை விளைப்பொருளாக பயன்படுத்தியதை அறியமுடிகிறது.

### 2.6.1 நீர் உணவு

மனிதர் உயிர்வாழ நீர் உணவு மிகவும் இன்றியமையாதது ஒன்றாகும். நீரின்றி உணவு இல்லை இதனைக் கருத்திற் கொண்டு வள்ளுவரும், "நீரின்றியமையாது உலகு" என்று கூறினார். இயற்கை உணவுப் பொருட்களில் நீர் இல்லாத உணவுப் பொருட்களே இல்லையென்று கூறலாம். செயற்கை உணவுப் பொருட்களும் பெரும்பாலானவை நீரின் துணைக்கொண்டே செய்யப்படுகின்றன. குறிஞ்சி நிலத்தில் தேன்பால் தேறல், மது, கள் ஆகியவை செயற்கை உணவாகக் கொள்ளப்படுகிறது. இதனை,

'தண்ணீர், தேன், நுங்கு, இளநீர், பால், பானங்கள் முதலியவற்றை இயற்கை உணவாகவும், கஞ்சி, தயிர், மோர், வெண்ணெய், அறியல், தேறல், மது, கள் ஆகியவற்றைச் செயற்கை உணவாகவும் கொள்ளலாம்"[54] என்று சே.நமசிவாயம் தம் நூலில் உரைக்கிறார்.

காட்டாற்று நீரில் மிகுந்த மருத்துவ குணம் உண்டு. அந்நீரில் நீராடினாலும், குடித்தாலும் அது மருந்தின் பயனைக் கொடுக்கும். இதனைக் குறிஞ்சி நில மக்கள் பயன்படுத்தியதை,

"கனை பெயில் பொழிந்தென கானக் கல்யாற்று
முளி இலை கழித்தன இணரொடு வரும்
விருந்தின் தீநீர் மருந்தும் ஆகும்
தண்ணென் உண்டு, கண்ணின் நோக்கி;
முனியாது ஆடப் பெறின்"[55] குறு.53 (6-10)

என்னும் பாடல் வரிகளால் அறியலாம்.

#### 2.6.1.1 தேன்

குறிஞ்சித் திணை பாடல்களில் தேன் மிகுதியாக கையாளப்பட்டுள்ளது. தேன் சேகரித்தலை பின்வரும் குறுந்தொகை பாடல் சான்று காட்டும்.

“நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று

நீரினும் ஆர்அளவின்றே சாரல்

கருங்காற் குறிஞ்சிப் பூக் கொண்டு

பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே”[56] குறு.3 (1-4)

என்று தேவகுலத்தார் என்னும் புலவர் பாடுகிறார். குறிஞ்சி நில மக்கள் தேன் பருகியதை,

“குறுந்தாட் கூதாளி ஆடிய நெடுவரைப்

பெருந்தேன் கண்ட இருங்கால் முடவன்

உட்கை சிறுகுடை கோலிக், கீழிஇருந்து

சுட்டுபு நக்கி யாங்கு”[57] குறு.60 (1-4)

என்னும் பாடல் வழி அறியலாம். குறிஞ்சி நில குறவர் மகளும் தேனை உண்டனர் என்பதை,

“சுரும்பு உண விரிந்த கருங் கால்வேங்கைப்

பெருஞ்சினைத் தொடுத்த கொழுங் கண் இறாஅல்

புள்ளுற்றுக் கசிந்ததீம் தேன் கல் அளைக்

குறக் குறுமாக்கள் உண்ட மிச்சிலை”[58] குறு.168 (1-4)

என்னும் பாடல் வரிகளால் உணரலாம். மலைகளில் அதிகமாக தேன் கிடைக்கும். அங்கு முக்கிய உணவு பொருள் தேன். எல்லா உணவுப் பொருட்கள் வழங்கும் போது தேனும் வழங்குவார்கள்.

### 2.6.1.2 கள்

சங்க இலக்கியத்தில் கள் முக்கிய இடம் பெற்றுள்ளது. வேலைச் செய்த களைப்பு நீங்கவும், மகிழ்ச்சியாக இருக்கவும் கள்ளைப் பருகினர். இதனை,

“மகிழ்ந்ததன் தலையும் நற உண் டாங்கு,

விழைந்ததன் தலையும் நீ வெய் துற்றனை”[59] நற்.165 (1-2)

என்னும் குறுந்தொகை பாடலில் பாணர் பதிவுச் செய்கிறார். குறிஞ்சிநில சிறுகுடியில் உள்ளோர் கள்ளை மிகுதியாக பருகினர் என்பதை,

"எருவை நீடிய பெரு வரைச் சிறுகுடி

அரியல் ஆர்ந்தவர் ஆயினும், பெரியர்"[60] நற்.156 (7-8)

குறிஞ்சி நில மக்கள் பனங்கள்ளைப் பருகியதை,

"பேர்இசை உருமொடு மாரி முற்றிய

பல் குடைக் கள்ளின் வண் மகிழ்ப்பாரி

பலவு உறு குன்றம் போல

பெருங்கவின் எய்திய அருங் காப்பினளே"[61] நற்.253 (6-10)

என்று கபிலர் குறிஞ்சி திணை பாடலாக நற்றிணையில் பதிவு செய்துள்ளார். கள் குடித்து போதையில் தள்ளாடுவதை,

"வங்காவரிப் பறைச் சிறுபாடு முனையின்

செம் பொறி அரக்கின் வட்டுநா வடிக்கும்

விளையாடு இன்நகை அழுங்கா, பால் மடுத்து"[62] நற்.341 (1-3)

என்று மருதன் இளநாகனார் பதிவுச் செய்கிறார். கள்ளை வட்டுச் சாடியில் அடைத்தனர் என்பதை அறியலாம். தினைப்புனம் காக்கும் பரணில் குறிஞ்சி கானவன் கள்ளுண்டு மகிழ்ந்திருந்தான் என்பதை,

"உளைமான் துப்பின், ஓங்கு தினைப் பெரும் புனத்துக்

கழுதில், கானவன் பிழி மகிழ்ந்து வதிந்தென

உரைத்து சந்தின் ஊரல் இருங் கதப்பு"[63] அகம்.102 (1-3)

என்னும் பாடல் அடிகள் மூலம் சேந்தங்கூத்தன் கூறுகிறார். விழாவின் போது ஊர் மக்கள் கள்ளை உண்டு. ஆரவாரம் செய்தனர் என்பதை,

"இரும்பிழி மகாஅர் இவ் அழுங்கல் மூதூர்

விழவு இன்று ஆயினும் துஞ்சாது ஆகும்."[64] அகம்.122 (1-2)

என்னும் பாடல் அடிகள் மெய்ப்பிக்கிறது.

### 2.6.1.3 தண்ணீர்

தண்ணீர் குறித்து உரைக்கும் போது வரும் விருந்தினர்களுக்குக் குறிஞ்சி நில மக்கள் தண்ணீர் கொடுத்து உபசரித்தனர் என்பதை,

"அன்னையும் யானும் இருந்தேமா, 'இல்லீரே

'உண்ணுநீர் வேட்டேன்' என வந்தாற்கு அன்னை

'அடர்பொற் சிரகத்தா வாக்கி, சுடரிழாய்!

உண்ணு நீர் ஊட்டி வா என்றாள்"[65] கலி.51 (5-8)

என்னும் பாடல் அடிகளில் குடிநீரை உண்ணுநீர் என்று பெருமைப்படுத்தினர். நீர் என்பது தாகம் கொள்ளும் போது குடிக்கும் உணவாகும். எனவே இதனைக் கேட்டு பருகுவார் இல்லை என்னும் கருத்தை,

"வேட்டார்க்கு இனிது ஆயின் அல்லது, நீர்க்கு இனிது என்று

உண்பவோ, நீர் உண்பவர்?"[66] கலி.62 (10-11)

என்னும் பாடல் அடிகள் மூலம் அறியலாம்.

### 2.6.1.4 பால்

சங்க இலக்கியத்தில் பால் குறித்தான செய்திகள் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன. துன்பம் நேர்ந்த போது தலைவி பால் குடித்து முற்படவில்லை என்பதை,

"அன்னாய்! வாழி! வேண்டு அன்னை ! நின் மகள்

பாலும் உண்ணாள், பழங்கண் கொண்டு

நனி பசந்தனள் என வினவுதி"[67] அகம்.48 (1-3)

என்னும் பாடல் அடியால் குறிஞ்சி நில மக்கள் பால் உண்ட செய்தியை உணர்த்துகிறது. குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த மக்கள் கிணற்று நீர் மிகவும்

சுவையாக இருப்பதும் அறிய முடிகிறது. அந்நிலம் நீர் சிறப்பு பொருந்தியாக கருதப்படுகிறது என்பதை அறிய முடிகிறது.

### 2.6.1.5 கிணற்று நீர்

குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த மக்கள் கிணற்று நீரையும் பயன்படுத்தியுள்ளனர். அந்நீர் தேனின் சுவையோடு பொருத்தி நிற்கும் தன்மையது என்பதை,

“அன்னாய் வாழி! வேண்டு அன்னை! நம் படப்பைத்

தேன் மயங்கு பாலினும் இனிய - அவர் நாட்டு

உவலைக் கூவற் கீழ

மான் உண்டு எஞ்சிய கலிழி நீரே”[68] ஐங்.203 (1-4)

என்னும் பாடல் மூலம் குறிஞ்சி கபிலர் மொழிப்படுத்துகிறார்.

## 2.7 பத்துப்பாட்டு அகப்பாடல்களில் குறிஞ்சித் திணை விருந்தோம்பல் பண்புகள்

பத்துப்பாட்டில் குறிஞ்சித் திணையை மையப்படுத்தி புனையப்பட்ட நூல் குறிஞ்சிப் பாட்டாகும். இந்நூலில் குறிஞ்சி திணை மக்களின் விருந்தோம்பல் பண்புகள் பதிவுச் செய்யப்பட்டுள்ளன. அவற்றை காண்பதே இங்கு முக்கிய நோக்கமாகக் கொள்ளப்படுகிறது.

### 2.7.1 அரிசி

குறிஞ்சிப்பாட்டில் அரிசி உவமையாகப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. இதனை,

‘செப்பல் ஆன்றிசின்; சினவாதிமோ

நெற்கொள் நெடு வெதிர்க்கு அணந்தயானை”[69] குறிஞ் (34-35)

இப்பாடல் அடிக்கு நெல்லரிசி போல் மூங்கில் அரிசி என்று குறிப்பதாக உள்ளது.

குறிஞ்சி நிலத்தில் மூங்கில் அதிகமாக விளையும். அதில் விளையும் அரிசி சுவையுடையதாக இருக்கும். யானையை கதிருக்கு உவமையாக கூறப்பட்டுள்ளதை அறியலாம்.

### 2.7.2 சோறு

குறிஞ்சி நிலமக்கள் வரும் விருந்தினர்க்கு சோறு இல்லை என்று கூறமாட்டார்கள். மேலும் வீட்டின் கதவை பூட்டுவதே கிடையாது. அங்கு நெய் ஒழுக கறி சோறு சேர்த்துச் சமைத்து அளிக்கின்றனர். விருந்தினர் விருந்து உண்டு எஞ்சிய சோற்றை உண்பது குறிஞ்சிநில மக்களின் பண்பாடாகும். இங்ஙனம் குறிஞ்சி நில இல்லற வாழ்க்கை குறிக்கப்பெறுவதை,

"சாறு அயர்ந்தன்ன மிடாஅச் சொன்றி
வருநர்க்கு வரையா வளநகர் பொற்ப
மலரத் திறந்த வாயில் பலர்உண,
பைந்திணம் ஒழுகிய நெயம்மலி அடிசில்
வசைஇல் வான் திணைப் புரையோர் கருடுபோடு
விருந்து உண்டு எஞ்சிய மிச்சில், பெருந்தகை
நின்னோடு உண்டலும புனரவது என்று ஆங்கு"[70] குறிஞ்சி (201-207)

என்னும் பாடல் அடிகள் மூலம் உணரலாம்.

### 2.7.3 கிடா அறுத்தல்

பயிர்கள், தினை போன்றவற்றை உண்ணும் யானைகளை கானவன் அம்பினால் குத்தி குருதியை வரவழைக்கிறான். அந்த இடம் முருக பெருமான் கோவில கிடா அறுத்த இடத்தை ஒப்புமைப்படுத்துவதாக அமைகிறது என்பதை

"அயர்ந்து புறம் கொடுத்த பின்னர் நெடுவேள்
அணங்கு உறுமகளிர் ஆடுகளம் கருப்பத்"[71] குறிஞ்சி (174-175)

என்னும் பாடல் அடிகள் மூலம் வெளிப்படுத்துவதை அறிய முடிகிறது.

## 2.8 நீர் உணவு

கபிலர் குறிஞ்சிப்பாட்டில் குறிக்கும் நீர் உணவை இரண்டு வகையாக் கூறுகிறார். ஒன்று அருவிநீர், இரண்டு சுனைநீர்.

### 2.8.1 அருவி நீர்

குறிஞ்சி நில மகளிர் அருவிநீரில் நீராடியதை,

"அண்ணல் நெடுங் கோட்டு இழிதரு தெள்நீர்

அவிர்துகில் புரையும அவ்வெள் அருவித்

தவிர்வுஇல் வேட்கையேம் தண்டாது ஆடிப்

பளிங்கு சொரிவு அன்ன பாய்சுனை குடைவுழி"[72] குறிஞ்சி (54-58)

என்னும் பாடல் மூலம் அறியலாம்.

### 2.8.2 சுனைநீர்

பழுத்த மிளகுகள் பாறைகளில் சிதறி கிடக்கும். பாறைகளுக்கு இடையே காணப்படும். சுனைகளில் மாம்பழம், பலாப்பழம் ஆகிய பழங்களின் தேன் சாறுகளும், தேனடை பிய்ந்ததால் ஏற்பட்ட தேனும் கலந்த நீர் என்பதை,

"பழு மிளகு உக்க பாறை நெடுஞ்சுனை

முழுமுதற் கொக்கின் தீம்கனி உதிர்ந்தென

புன்எறி பிரசமொடு ஈண்டி பலவின்

நெகிழ்ந்து உகுநறும் பழம்விளைந்த தேறல்

நீர்செத்து அயின்ற தோகைவியல் ஊர்ச்

சாறுகொள் ஆங்கண் விழவுக்களம் நந்தி"[73] குறி (187-192)

என்னும் பாடல் அடிகள் மூலம் உணரலாம். இந்நீரை குறிஞ்சி நிலத்தலைவன் குடிப்பதை,

“மீமிசைக் கடவுள் வாழ்த்திக் கை தொழுது

ஏமுறு வஞ்சினம் வாய்மையின் தேற்றி

அம்தீம் தெள்நீர் குடித்தலின், நெஞ்சு அர்ந்து”[74] குறிஞ்சி (209-211)

என்ற பாடல் அடிகள் மூலம் தலைவன் தேன் கலந்த சுத்தமான தெளிந்த நீரை அருந்தினார் என்பதை அறிய முடிகிறது.

### 2.8.3 கள் உண்டல்

குறிஞ்சி நிலத்தில் கள்ளை ஊற்றிக் கொடுப்பது கணவரின் மனைவியே என்பதை,

“இருவி வேய்ந்த குறுங்காற் குரம்பைப்

பிணை ஏர் நோக்கின் மனையோள் மடுப்ப

தேம்பிழி தேறல் மாந்திமகிழ் சிறந்து”[75] குறிஞ்சி (153-155)

என்னும் பாடல் அடிகள் மூலம் உணர்த்துகிறார்.

## 2.9 தொகுப்புரை

குறிஞ்சி நில மக்கள் வேட்டையர்களாக இருந்து காலப்போக்கில் வேளாண் தொழில் செய்தனர். வேட்டை சமூகத்தில் இருந்தாலும் இல்லத்திற்கு வந்த விருந்தினர்களை உபசரித்தனர். இறைச்சி கறிகள் இருந்தால் பச்சையாகவோ, கறிகள் செய்தோ சுற்றத்தாரிடம் கொடுத்தனர். முகந் தெரியாத ஒருவனின் பசிக்கு உணவு அளிக்கும் போது பண்பாளன் ஆகிறான். குறிஞ்சி நில தலைவன் கள் குடிப்பதை, அறியலாம். கடவுள் வாழ்த்துதலும், வாய்மையை நிலைநாட்டுதலும் தலைவனின் பண்புகள் என்பதை அறியலாம்.

சுற்றத்தாருக்கு கொடுக்கும் பழக்கமும் முதலில் தோன்றியது. விருந்தும் உபசரித்தலும் முக்கியப் பண்பாக குறிஞ்சி நில இலக்கியங்கள் படம் பிடித்துக் காட்டுகின்றன. விருந்தினர் உண்ட பின் மீதமிருக்கும் உணவையே இல்லத்தார் உண்பர். இதனை குறிஞ்சிப்பாடு தலைவன் மூலம் கபிலர் வெளிப்படுத்துவதை அறிய முடிகிறது.

அகநானூறு வெளிப்படுத்தும் குறுநில மன்னர்களின் ஈகை தன்மை அளப்பறியது. பெண்கள் விருந்தோம்பலில் மிகப்பெரும் பங்காற்றினர். தம் உற்றார், உறவினரே அன்றி புலவர், பாணர், பொருநர், கூத்தர் போன்ற கலைஞர்களையும் வரவேற்றும், உண்டியும் உறையுளும் கொடுத்து விருந்தோம்பியதை குறிஞ்சி நில எட்டுத் தொகை இலக்கியம் சான்று காட்டி நிற்கின்றது. புலவர்கள் சொன்னால் கிளியும் நெல்லரிசிகளைக் கொண்டு சேர்க்கிறது என்பதை அகநானூறு பாடல்கள் தெளிவுப்படுத்துகின்றன.

தெய்வ வழிபாடு குறிஞ்சி நிலத்திற்கு சிறப்புத் தன்மை காணப்படுகிறது. அது 'வேலன் வெறியாடல்' என்னும் நிகழ்வாகும். ஆடுகளை வெட்டி பலிக் கொடுக்கும் நிகழ்வை குறிஞ்சிப் பாடல்கள் கூறுகின்றன. இதற்கு துணையாக நெற்களும் பயன்பட்டன. மேலும் குறிஞ்சி நில மக்கள் ஐவனம், அவரை, திணை போன்ற தானியங்களை வேளாண் செய்தனர். கள்ளு குடித்தல் தடை

செய்யப்படாத ஒன்றாக குறிஞ்சி நிலத்தில் விளங்கியது. இங்ஙனம் குறிஞ்சி நிலச் சமுதாயம் விருந்தோம்பல் சிறந்த நிலையில் காணப்பட்டதாக கூறலாம்.

குறிஞ்சித் திணையில் விருந்தோம்பல் செய்திகள் சங்கப் புலவர்கள் பதிவு செய்ததை அறிய முடிகிறது. முல்லைத் திணையில் விருந்தோம்பல் பற்றிய செய்திகளை அடுத்த இயலில் ஆராய்ந்து விளக்குகின்றது.

## குறிப்புகள்

1. புலவர்.ந.கருணாநிதி, தொல்காப்பியம், தொகுதி 1, ப.7 (அகத்.5)
2. மேலது, ப.7 (அகத்.6)
3. ச.வே.சு. (ப.ஆ), தொல்காப்பியம், ப.358 (அகத்.18)
4. புலவர்.ந.கருணாநிதி, தொல்காப்பியம் (தொகுதி-2), பக் 10, 11
5. இராமநாத செட்டியார், சங்ககால தமிழர் வாழ்வு, ப. 58
6. மு.சண்முகம் பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, பா.45, ப.156 (1-4)
7. அச்சுபதம், நற்றிணை, பா.22, ப.38 (6-8)
8. அச்சுதன், குறுந்தொகை காட்டும் வாழ்வியல், ப.543
9. ஸ்டீபன், தொல்காப்பியமும் இனவரைவியல் கவிதையியலும், ப.33
10. மேலது, ப.34
11. அ.தெட்சிணாமூர்த்தி (ப.ஆ), ஐங்குறுநூறு, பா.282 (6-8)
12. நா. வானமாமலை, தமிழர் பண்பாடு, ப.17
13. இராச. மாணிக்கனார், தமிழ் நாடும் பண்பாடும், ப.51
14. தொல்காப்பியத்தில் மணமுறைகள், ப.28
15. கு.பா. பாலசுப்பிரமணியன் (ப.ஆ), பண்டைத் தமிழ் சமுதாய வளர்ச்சி ஒரு மார்க்சியப் பார்வை, ப.5
16. பெ.மாதையன் (ப.ஆ), தமிழ்ச் செவ்வியல் படைப்புகள் கவிதையியல் சமூகவியல் நோக்கு, ப.186
17. மு. சண்முகம் பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, பா.263 (1-8), ப.231
18. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.47 (1-10), ப.82
19. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு (தொகுதி 2), பா.242 (7-15), ப.465
20. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.85 (8-11), ப.153
21. மேலது, பா.336 (1-6), ப.621

22. அ.தெட்சிணாமூர்த்தி (ப.ஆ), ஐங்குறுநூறு, பா.208 (1-3), ப.441

23. கரு.இராமநாத செட்டியார், சங்க கால தமிழர் வாழ்வு, ப.92

24. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.83 (4-7), ப.149

25. தா.நீலகண்டபிள்ளை, சங்கத் தமிழர் வாழ்வியல், ப.103

26. மு. சண்முகம் பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, பா.201 (1-5), ப.180

27. அ.மாணிக்கனார் (ப.ஆ), கலித்தொகை, பா.59 (20-23), ப.247

28. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.172 (6-14) ப.204

29. நா.கோவிந்தன், சங்ககால அரசர் வரிசை 4, வள்ளல்கள், ப.31

30. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை மூலம் உரையும், பா.185 (1-7), ப.339

31. நா.கோவிந்தன், சங்ககால அரசர் வரிசை-4 வள்ளல்கள், ப.31

32. மேலது, ப.55

33. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.78 (16-22), ப.170

34. நா.கோவிந்தன், சங்க கால அரசர் வரிசை அகுதை முதலில் 22 பேர்கள்-5, ப.15

35. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.162 (16-20), ப.170

36. மேலது, பா.152 (11-14), ப.133

37. நா.கோவிந்தன், சங்க கால அரசர் வரிசை-4, வள்ளல்கள், ப.18

38. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.152 (19-22), ப.133

39. நா.கோவிந்தன், சங்க கால அரசர் வரிசை அகுதை முதலிய 22 பேர்கள்-5, ப.45

40. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, இரண்டாம் தொகுதி, பா.208 (1-5), ப.339

41. நா.கோவிந்தன், சங்க இலக்கிய அரசர் வரிசை தொகுதி-3, ப.46

42. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.238 (11-16), ப.452

43. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.160 (1-3), ப.294

44. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.198 (3-5)

45. மு. சண்முகம் பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, பா.100 (1-3), ப.76

46. மேலது, பா.18 (1-2), ப.21

47. அ.தெட்சிணாமூர்த்தி (ப.ஆ), ஐங்குறுநூறு, பா.209 (1-2), ப.441

48. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு தொகுதி - 1, பா.88 (1-2), ப.433

49. மு. சண்முகம் பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, பா.214 (1-3), ப.493

50. அ.தெட்சிணாமூர்த்தி (ப.ஆ), ஐங்குறுநூறு, பா.260 (2-4), ப.555

51. மேலது, பா.628 (1-2)

52. மேலது, பா.46 (4-8), ப.672

53. சே.நமசிவாயம், தமிழர் உணவு, ப.133

54. மு.சண்முகம் பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, பா.53 (6-10), பக்.93, 94

55. மு. சண்முகம் பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, பா.3 (1-4), ப.4

56. மேலது, பா.60 (1-4), ப.61

57. மு. சண்முகம் பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, பா.168 (1-4), ப.308

58. மு. சண்முகம் பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, பா.165 (1-2), ப.382

59. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.156 (7-8), ப.287

60. மேலது, பா.253 (6-10), ப.466

61. மேலது, பா.341 (1-3), ப.631

62. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.102 (1-3), பக். 493,494

63. மேலது, பா.122 (1-2), ப.8 (2)

64. அ.மாணிக்கனார் (ப.ஆ), கலித்தொகை, பா.51 (5-8), ப.309

65. மேலது, பா.62 (10-11), ப.262

66. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.48 (1-3), ப.265

67. அ.தெட்சிணாமூர்த்தி (ப.ஆ), ஐங்குறுநூறு, பா.203 (1-4), ப.429

68. குறிஞ்சிப்பாட்டு, பா. (34-35), ப. 319

69. மேலது, பா. (201-207), ப.337

70. மேலது, பா. (174-175), ப.332

71. மேலது, பா. (54-58), ப.321

72. மேலது, பா. (187-192), பக். 335, 336

73. மேலது, பா. (209-211), ப.337

74. மேலது, பா. (153-155), ப.338

# இயல் - 3

# முல்லை நிலத்தில் விருந்தோம்பல் கூறுகள்

## 3.0 முன்னுரை

சங்க இலக்கியங்கள் திணைகளின் அடிப்படையில் புனையப் பெற்றுள்ளன. அன்பின் ஐந்திணை என்னும் பிரிவாக இவ்விலக்கியங்கள் செய்யப் பெற்றுள்ளன. இவ்வைந்திணையில் ஒன்று முல்லைத் திணை ஆகும். இத்திணையின்கண் பயின்று வந்த பாடல்கள் தனிச்சிறப்பு வாய்ந்தவை ஆகும். இத்திணைப் பாடல்களில் தலைவியின் இருத்தல் நிலையும் விருந்தோம்பும் பண்புகளும், இயற்கைக் காட்சிகள் ஆகியவை புலவர்களின் திறமைக்கு ஏற்ப பயின்று வந்துள்ளன. முல்லை நில பாடல்களில் பயின்று வந்துள்ள உணவு குறிப்புகளும், விருந்தோம்பும் தன்மைகளும் ஆகியவற்றை விளக்குவதே இவ்வியலின் நோக்கமாகும்.

## 3.1 முல்லைத் திணையின் முப்பொருட்கள் :

குறிஞ்சித்திணைக்கான படிநிலைக்கு அடுத்து காணப்படும் திணை முல்லைத் திணை ஆகும். முல்லைத் திணைக்கான முப்பொருளில் கருப்பொருளை உரையாசிரியர்கள் தம் உரைகள் மூலம் தெளிவுப்படுத்தியுள்ளனர். முல்லைத் திணையின் முதற் பொருளை,

"மாயோன் மேய காடுறை உலகமும்"[1]

"காரும் மாலையும் முல்லை"[2]

என்று நூற்பா மூலம் தொல்காப்பியம் விளக்குகிறது. மாயோன் என்பது திருமால். காடு என்பது முல்லை நிலத்தின் நிலம். முல்லை நிலத்தின் தன்மை சிறுபொழுது, பெரும்பொழுது. பெரும்பொழுது என்பது கார் என்னும் மழைக்காலம் ஆகும். முல்லை நிலம் குறித்து இராமநாதன் செட்டியார் தம் நூலில் பின்வருமாறு குறித்துள்ளார்.

“இந்நிலம் குறிஞ்சி, பாலை ஆகிய வலிய நிலங்களுக்கும் மருதம், நெய்தல் ஆகிய மென்மையான நிலங்களுக்கும் இடைப்பட்ட இயல்பினது ஆதலால் இடைநிலம் எனப்பெயர் பெறும்”[3] என்று பதிவுச் செய்துள்ளார்.

### 3.2 முல்லை நிலத்து கருப்பொருட்கள் :

முல்லை நிலத்திற்கான கருப்பொருளை உரையாசிரியர் இளம்பூரணார் குறிப்பிட்டுள்ளதை,

| | | |
|---|---|---|
| “தெய்வம் | - | திருமால் |
| உணவு | - | வரகு, முதிரை |
| விலங்கு | - | மான், முயல் |
| மரம் | - | கொன்றை குருந்து |
| பறவை | - | கானாங்கோழி |
| பறை | - | ஏறுகோட்பறை |
| தொழில் | - | நிரை மேய்த்தல் |
| யாழ் | - | சாதாரிப் பண் |
| ஊர் | - | பாடி, சேரி |
| நீர் | - | கான்யாறு |
| பூ | - | முல்லை, பிடவு, தளவு”[4] தொல் |

என்று தம் நூலில் பதிவுச் செய்துள்ளார். புலவர் ந. கருணாநிதி.

### 3.3 முல்லைத் திணையின் உரிப்பொருள் :

முல்லைத் திணையின் உரிப்பொருள் “இருத்தலும், இருத்தல் நிமித்தமும்” ஆகும். தலைவன் தலைவியை விட்டு பொருள்வயினோ, வினைவயினோ பிரிந்து போவான். கார்காலம் வரும் முன்பே வருவேன் என்று கூறி பிரிவான். பிரிவாற்றாமையால் கார்காலம் வரும் முன்பே தலைவிக்குக் கார்காலம் வந்தது போலவும் கார்காலம் வந்த பின்னும் தலைவனை காணாது துன்பத்துடனும்,

தலைவனை எதிர்பார்த்திருத்தலும் என்னும் இருநிலைகளில் தலைவியின் இருத்தல் நிலை இருக்கும்.

**3.4 சங்க இலக்கியத்தில் முல்லை நிலம் :**

சங்க இலக்கியம் என்னும் பிரிவில் இரண்டு தொகுதிகள் காணப்படுகின்றன. இப்பிரிவில் எட்டுத்தொகை என்ற தொகுதியில் பயின்று வந்த முல்லைப் பாடல்களின் மொத்த எண்ணிக்கை இருநூற்றி முப்பத்தொன்றாகும். அவைகளில் ஐங்குறுநூற்றில் நூறு பாடல்களும், குறுந்தொகையில் நாற்பத்தி நான்கு பாடல்களும், கலித்தொகையில் பதினேழு பாடல்களும் அகநானூற்றில் நாற்பது பாடல்களும், நற்றிணையில் முப்பது பாடல்களும் இடம்பெற்றுள்ளன.

இப்பிரிவின் மற்றொரு பகுதியான பத்துப்பாட்டில் இரண்டு நூல்கள் முல்லைத் திணையை அடிப்படையாக்கி கொண்டு திகழ்கின்றன. அவைகளில் முதலில் காணப்படுவது முல்லைப்பாட்டு இது நூற்று மூன்று அடிகளைக் கொண்டவை ஆகும். மற்றொன்று நெடுநல் வாடை ஆகும். இது நூற்று எண்பத்து எட்டு அடிகளைக் கொண்டமைந்தனவாகும். ஆக பத்துப்பாட்டில் இருநூற்றி தொன்னூற்றி ஒரு அடிகளைக் கொண்டு முல்லைத் திணைக்கவிதைகள் காணப்படுகின்றன.

3.4.1 எட்டுத்தொகையில் முல்லை நில விருந்தோம்பல்

இங்ஙனம் முல்லைத் திணைக்கவிதைகள் வெளிப்படுத்தும் முல்லைநில மக்களின் விருந்தோம்பல் முறைகள் முல்லை நில ஒழுக்கத்தை வெளிப்படுத்துகின்றன என்று கூறலாம். இதனை விளக்க இவ்வியலை நான்கு பிரிவாக பிரிக்கலாம்.

1. முல்லை நில மக்கள்
2. முல்லை நில உணவு பொருட்களும் அரிசி உணவுகளும்
3. முல்லை நிலத்தில் இறைச்சி உணவுகள்.
4. முல்லை நில நீர் உணவுகள்

என்பனவாகும்.

### 3.4.1.1 முல்லை நில மக்கள் :

முல்லை நில கவிதைகள் மூலம் படிந்துள்ள மக்கள் குறித்த பதிவுகள் முக்கியமானதாகும். எத்தகைய மக்கள் இந்நில பகுதியில் வாழ்ந்திருந்தனர், அவர்களின் பழக்க வழக்கங்கள் ஆகியவற்றை அறிதல் இன்றியமையாத ஒன்றாகும்.

முல்லை நிலத்தில் ஆடவர்கள் மூன்று பெயர்களில் குறிப்பிடப்பட்டுள்ளனர். அவர்கள் :

1. ஆயர்
2. இடையர்
3. கோவலர்

என்று மூன்று பெயர்கள் அறியப்படுகின்றனர். இதனை,

“அகப்பாடல்களில் வரும் முல்லை நில மக்களை 1. ஆயர், 2. கோவலர், 3. இடையர் என்ற மூவகையினராகக் குறிப்பிடலாம்”[5] என்று முனைவர் இரா.அரங்கநாதன் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார். இவர்கள் எல்லாம் தனித்தனி பிரிவை உடையவர்கள். மேலும் தனித்தனி குலங்கள், இனங்கள் சார்ந்தவையாக இவர்கள் வாழ்ந்திருக்கலாம். இவர்களுக்கென்று தனி அடையாளங்கள் உண்டு. அவ்வடையாளங்களில் ஒன்று கழுத்தில் அணியும் மாலை. எனவே இம்மூன்று பெயர்களைத் தனித்தனியாக ஆய வேண்டியது அவசியமாகும்.

#### 3.4.1.1.1 ஆயர்

ஆயர் என்னும் இனமக்கள் பசுக்களை மேய்த்தலைத் தலையாய தொழிலாகக் கொண்டனர். “ஆ” என்னும் சொல்லிற்குப் “பசு” என்ற பொருளும் உண்டு. ஆர் என்ற உயர்திணை பன்மை விகுதியை இணைத்து ஆயர் என்னும் சொல் உருவாயிற்று. ஆண் மக்களை ஆயர் என்றும் பெண் மக்களை ஆய்ச்சியர் என்றும் புலவர்கள் சுட்டியுள்ளனர். ஆயர்கள் கவிதையின் தலைவனாகச் சுட்டப்

பெற்றுள்ளான். இங்கு ஆயர் தலைவன் பசுவை விட்டு பொருள் தேடச் சென்றான். மாலைபொழுது ஆகியும் தலைவன் இன்னும் வரவில்லை என்று தலைவி கூறுவதாக,

"நோற்றோர் மன்ற தோழி! தண்ணெலித்
தூற்றும் துவலைப் பனிக்கடுந் திங்கள்
புலம்பயிர் அருந்த அண்ணல் ஏற்றொடு
நிலம்தூங்கு அணல வீங்குமுலைச் செருத்தல்
பால் வார்பு குழவி உள்ளி நிரை இறந்து
ஊர்வயின் பெயரும் புன்கண் மாலை
அரும்பெறல் பொருட்பிணிப் போகிப்
பிரிந்துஉறை காதலர் வரகாண் போரே"[6] குறு.344 (1-8)

என்னும் பாடல்வழி சங்க புலவன் குறுங்குடி மருதன் கூறியுள்ளார். முல்லை திணை சமூகத்தில் தான் முதல் தொழில் மாற்றம் நிகழ்ந்தது. இப்பாடல் இதனின் உச்சம் ஆகும். முல்லை நிலத்தொழில் மாற்றம் குறித்து,

"கால் நடைகள் பெருகப் பெருகக் குடும்பச் செல்வமும் பெருகியது. மாடு பண்டமாற்றாக உபயோகிக்கப்பட்டது. நாளடைவில் வேட்டைத் தொழில் புரிந்தவர்களிடமிருந்து மேய்க்கும் தொழில் புரிந்தவர் முற்றுமாகப் பிரிந்து தனிக்குலமாக அமைந்தனர். மேய்ப்பது மட்டும் அவர்களின் தொழிலாகியது"[7] என்று தம் நூலில் கள்ளூர் பாலசுப்பிரமணியம் குறித்துள்ளார். ஆயர்கள் குறித்தான பாடல்களை முல்லை நில கவிதைகள் சான்று பகர்கின்றன. ஆநிரை மேய்த்தல் குறித்தான செய்திகள் மருதநில கவிதைகளிலும் குறிஞ்சி நில கவிதைகளிலும் பயின்று வந்துள்ளன. கால்நடை வளர்ப்புத் தொழிலை மேற்கொண்டவர்கள் முதற்மையானோர் முல்லை நிலத்தவர்களே. குறிப்பாக ஆயர்களே. இத்திணைச் சார்ந்த கருப்பொருட்களே மருத திணைப் பாடல்களுக்கு திணை மயக்கமாக மாறி இருக்க வேண்டும். வேட்டை சமூகம் இறுதி நிலையில் இருக்கும் போது கால்நடை

சமூகம் தோன்றி இருக்க வேண்டும். அதன் பிற்பகுதியில் தான் கால்நடைகளை வேளாண்மைக்குப் பயன்படுத்தியிருக்க வேண்டும். குடும்பம் தோன்றிய நிலமும், முல்லை நிலமே. ஐங்குறுநூறு பாடல்களில் கணவன், மனைவி, மக்கள் என்ற குடும்ப சூழலை சங்க புலவர் பேயனார் வடித்துக் காட்டியுள்ளார். இதனை,

"புதல்வற் கவைஇய தாய் புறம் முயங்கி
நசைஇனன் வதிந்த கிடக்கை, பாணர்
நரம்பு உளர் முரற்கை போல,
இனிதால்; அம்ம! பண்புமார் உடைத்தே"[8] ஐங்.402 (1-4)

என்னும் பாடல்வழி அறியலாம். உணவின் அடிப்படையில் தான் தொழில்கள் தோன்றின. இதனை முல்லை நில ஆயர் வாழ்க்கையோடு அறிந்து கொள்ளலாம்.

### 3.4.1.1.2 ஆயர் குறித்த அகராதிகளின் விளக்கங்கள் :

ஆயர் என்னும் சொல் குறித்து அகராதிகள் தரும் விளக்கம் முக்கியமானதாகும். எனவே ஆயர் என்னும் சொல்லிற்கு அகராதிகள் பின்வருமாறு விளக்கம் கூறுகின்றன.

"ஆயர், இடையர், முல்லை நிலத்து மக்கள். ஆயர் - இடையர் - அறம் புரியும் நெஞ்சத்தையுடையவர்"[9] என்று சங்க இலக்கிய பொருட்களஞ்சியம் தொகுதி - ஒன்று பதிவு செய்துள்ளது.

மேலும், "ஆயமகன்", "ஆயமகள்", "ஆயர்மகன்", "ஆயர்மகள்" ஆகிய சொற்களையும் குறித்துள்ளன. எனவே இவை அனைத்தும் ஒரு பொருள் உணர்த்தும் பல சொற்கள் ஆகும்.

### 3.4.1.1.3 அபிதான சிந்தாமணி :

"ஆயர் - இடையர் இவர்கள் இடையர் கோலாயர் என இருவிதப் படுவர்"[10] என்று குறிப்பிடுகிறது. ஆயர் என்பது சாதிப்பெயராகி விடுகிறது. திணை நிலப் பெயர் என்ற முறை மாறி சாதிப்பெயராயிற்று என்பதை அறியலாம். இன்னும்

இடையர் சாதி என்னும் பெயரிலேயே அறியப்படுகின்றது.

ந.சி.கந்தையாபிள்ளை தொகுப்பாசிரியராக பணியாற்றிய செந்தமிழ் அகராதியில்,

"ஆயன் - இடையன்"[11]

என்னும் பொருளைச் சுருக்கமாகத் தருகின்றது. மேலும் ஆயர் என்னும் பன்மை விகுதியைத் தவிர்த்து ஆயன் என்னும் ஒருமை விகுதியைத் தவிர்த்து ஆயன் என்னும் ஒருமை விகுதியைக் கையாண்டுள்ளது. கழகத் தமிழ் அகராதி.

"ஆயர் - இடையர்"[12] என்று செந்தமிழ் அகராதி போல் சுருக்கமாக சொல்லி விடுகின்றது. க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி

"ஆயர் - இடையர், Cowherd"[13] என்று விளம்புகிறது. இங்ஙனம் ஆயர் என்பவர் இடையர் என்று பொருள் குறிப்பதாக அபிதான சிந்தாமணி தவிர்த்து பிற அகராதிகள் தெறிவிக்கின்றன. ஆயரும் இடையரும் ஒன்றா என்று சிந்திக்க வேண்டியது முக்கியமான ஒன்றாகும். ஆயர்கள் மாடு மேய்ப்பதற்கு கோல்களை வைப்பார்கள். இதனை நாகரித்தோடு தொடர்புபடுத்தி அறிஞர் மு.வ. தம் நூலில் குறித்துள்ளதை,

"மனிதன் நாகரீகம் பெற்று வளரத் தொடங்கியது முல்லை நிலத்திலேயே ஆகும். மக்கள் ஓர் இனமாய்க் கூடிச் சமுதாயமாய் அமைந்தது முதல்முதலில் முல்லை நிலத்தில்தான். முல்லை நிலத்தில் பசுக்களை மேய்ப்பதற்கு உதவும் கருவியாக கோல், மக்களினத்தின் தலைவனுடைய ஆட்சிக்கு அறிகுறியாக அமைந்தது"[14] என்று பதிவு செய்துள்ளார்.

### 3.4.1.1.2 இடையர் :

இடையர் என்பவர் எந்தச் சாதிகளின் குறியீடு என்று நோக்கினால் அது ஆயர் சாதி குறியீடாகும். ஆடுகளை உடையவர்கள் அகநானூற்றில் இடையராக குறிக்கப் பெற்றுள்ளனர். இதனை,

“பசுக்களை உடையவர்கள் கோவலராகவும் ஆடுகளை உடையவர்கள் இடையராகவும் அகநானூற்றில் குறிப்பிடப்படுகிறார்கள்”[15] என்று சுட்டிக் காட்டியுள்ளார். இடையர் என்பதை இடையன் என்ற சொல்லாலும் குறிப்பிடுவர். இதனை, “இடையன் : ஆடு மாடு மேய்ப்போர் இடையர் எனப்படுவர். இவர்களுள் வைணவர் நாமம் தரித்துக் கொள்வர், தம்மை யாதவர் எனக் கூறிக் கொள்வர்”[16] என்று ந.சி.கந்தையா பிள்ளை தம் நூலில் குறித்துள்ளார்.

**3.4.1.1.2.1 இடையர் - சொல் அகராதி விளக்கம் :**

சங்க இலக்கிய பொருட்கள் களஞ்சியம் “இடையன் - இடையர் மகன்”[17] என்று பொருள் கொள்கிறது. அபிதான சிந்தாமணி இடையன் என்னும் சொல்லிற்கு விரிவான பொருளை எடுத்தியம்புவதை,

“இடையர் - சூத்திரன் வைசியக் கன்னிகையைப் புணரப் பிறந்தவர். இவர்கள் ஆடு, மாடுகள் மேய்த்து வாழ்வர் (அருணகிரி புராணம்) (இவர்க்குத் தசாங்கம்) மலை, கோவர்த்தனம், நதி, யமுனை, நாடு, நந்த மண்டலம், நகரம், கோகுலம், கொடி, கருடன், வாத்யம், முரசம், மாலை, முல்லை, வாகனம், யானை, குதிரை இவர்களைக் கோவைசியர் என்று சூடாமணி நிகண்டு கூறும். தமிழ்நாட்டு ஆடு, மாடு மேய்த்துச் சீவிப்போர் இவர்கள் யாதவர் எனப்படுவர். இவர்களில் சிலர் சைவராகவும் இருக்கின்றனர். இவர்கள் கால்கட்டி, பாசி, பெண்டுக்கு மேக்கி, சங்குகட்டி, சாம்பன், புதுக்க நாட்டார், பெருந்தாலி, சிறுதாலி, பஞ்சரம் கட்டி, மணியக்காரன், சோழியன், ஆனைக்கொம்பு, பெருமாள், மாட்டுக்காரன், பூ இடையன், புது நாட்டிடையன், போண்டன் கோனார் என வகைப்படுவர்”[18] என்று விரிவான விளக்கம் கொடுக்கிறது.

செந்தமிழ் அகராதி “இடையன் - இடை சாதியர்”[19] என்று ஒருமையாகச் சொல்லைக் கையாளுகிறது. நா.கதிரைவேற் பிள்ளையின் தமிழ்மொழி அகராதி இடையன் என்னும் சொல்லிற்கு “இடையன் - முல்லை நில மாக்கள்”[20] என்று

பொருள் தருகிறது. க்ரியாவின் தற்கால தமிழ்மொழி அகராதி இடையன் - ஆடு அல்லது மேய்ப்பதை தொழிலாகக் கொண்டவன்”[21] என்று பொருள் விளக்கம் கொடுக்கிறது.

இவ்வாறு இடையன் என்னும் பெயர் வந்தபோது அது ஆடு மாடுகளை மேய்ப்பவர் என்னும் பொருளைக் கொடுக்கிறது. சங்க காலச் சிறப்புப் பெயர்கள் என்னும் நூலில் இடையர் குறித்தான விளக்கங்களை நூலாசிரியர் பின்வருமாறு குறிப்பிடுகிறார். பட்டினப் பாலை குறிப்பிடும் பொதுவர் என்னும் சொல்லை இடையர் என்று சொல்லோடு பொருத்தி பார்க்கிறார். இதனை,

“முல்லை நிலங்களில் வாழும் ஆயர்கள், பொதுவர் என வழங்கப் பெறுவர். அவர்கள் இடையர் எனவும் வழங்கப் பெறுவர். இடையர் என்ற சொல்லும் பொதுவர் என்ற சொல்லும் ஒரே பொருளையே குறிக்கும்”[22] என்று குறிப்பிடுகிறார்.

முல்லை நில மக்கள் குறித்து, ‘சங்கத் தமிழர் வாழ்வியல்’ என்னும் நூல் பின்வருமாறு கூறுகிறது.

“முல்லைப் பகுதி மேய்ச்சல் நிலங்களைக் கொண்டிருந்தமையால் ஆடு மாடு வளர்த்தலை முக்கிய தொழிலாகக் கொண்ட மக்கள் இப்பகுதியில் வாழ்ந்தனர். இவர்களைக் கோவலர், ஆயர், அண்டர், இடையர் என்னும் பெயர்களால் அழைப்பர்”[23] என்று பதிவு செய்துள்ளார். இச்செய்திகள் முல்லை திணை கவிதைகளை அடிப்படையாக்கி வரைந்தவைஇடையன் என்பது இடையர் சாதியின் ஆண்பாலைக் குறிக்கும் சொல்லாகும். பெண்பாலரை இடைச்சி என்னும் சொல்லால் குறித்தனர். இடையன் என்பவன் ஆடு மேய்ப்பவன் என்பதை,

“ஆடு தலைத் துருவின் தோடு தலைப் பெயர்க்கும்
வன் கை இடையன் எல்லிப் பரீஇ
வெண் போழ் தைஇய அலங்கல்அம் தொடலை

மறுகுடன் கமழும் மாலை,

சிறுகுடிப் பாக்கத்து எம் பெரு நகரானே"[24] நற்.310 (6-10)

என்னும் நற்றிணைப் பாடல் மூலம் அறியலாம்.

எனவே இடையர் என்பவர் தொடக்கத்தில் ஆடு மேய்ப்பராகவே இருந்துள்ளனர். இடையர் என்னும் சொல் குறித்து,

"செல்வம், வாழ்க்கை நிலை ஆகியவற்றில் தலையாயவராய் (முதல்வராய், முதலிகளாய்) உள்ளவர்க்கும், நாள்தோறும் உழைத்து வயிறு வளர்க்கும் கடையருக்கும் இடைப்பட்டவரே இடையர் அல்லது பொதுவர் எனப்படுவர். அல்லது, மிக உயர்ந்த மலைப் பகுதிகளுக்கும், மிகத்தாழ்ந்த வயல் நிலப்பகுதிகளுக்கும் இடையே வாழ்ந்த மக்கள் பொதுவர் அல்லது இடையர் எனப் பெற்றார் எனலாம்"[25.] என்று குறிப்பிடுவது நிலத் தன்மையை அடிப்படையாக்கியும், பொருளாதாரத்தை அடிப்படையாக்கியும் விளக்குவதாக அமைகிறது.

### 3.4.1.1.3 கோவலர் :

முல்லை நிலத்தில் ஆடு, மாடு மேய்ப்பவர்களைக் கோவலர் என்று அழைக்கும் முறைமையை முல்லை நிலப் பாடல்கள் பதிவுச் செய்துள்ளன. கோ என்பதற்கு மன்னன் என்ற பொருளும் உண்டு இப்பொருள் பிற்காலத்தில் ஏற்பட்டதாக வாய்ப்புண்டு. சிலப்பதிகாரக் காப்பியத்தின் நாயகன் பெயரும் கோவலன். கோவலரின் ஒருமை வடிவமே கோவலன். இக்கோவலன் வணிக மரபினைச் சேர்ந்தவன். எனவே முல்லை நில வணிக மரபாக கோவலர்கள் தோன்றியிருக்கலாம்.

### 3.4.1.1.3.1 கோவலர் அகராதி பொருள் விளக்கம் :

கோவலர் என்ற சொல்லை அகராதிகள் சீராக பயன்படுத்தியது இல்லை. எனவே இக்கலைச் சொல்லை விளக்குவது முக்கியமான ஒன்றாகும். சங்க

இலக்கிய பொருட்களஞ்சியம் தொகுதி - 2 கோவலர் என்னும் சொல்லிற்குப் பின்வருமாறு பொருள் கொடுக்கப்படுகிறது.

"கோவலர் - ஆயர்"[26] என்று பொருள் கூறுகிறது. செந்தமிழ் அகராதி,

"கோவலர் - முல்லை நில மக்கள், இடையன்

கோவலன் - இடையன், அரசன், வசிட்டன்"[27] என்று ஒருமையிலும் பன்மையிலும் சொற்களைக் கையாளுகிறது. கழகத் தமிழ் அகராதி,

"கோவலன் - இடையன், அரசன், சிவன்

வசிட்டன்"[28] என்று பொருள் கொடுக்கிறது.

நா. கதிரைவேற் பிள்ளையின் தமிழ் மொழி அகராதி என்று சுருக்கமாகப் பொருள் நவில்கிறது. இங்ஙனம் "கோவலன் என்னும் சொல்லிற்கு இடையன் என்று பொருள் கூறப்பட்டாலும் ஆயர் என்னும் பெயர் ஆதியில் வழங்கப்பட்டப் பெயர் என்பதை அறியலாம். காலப்போக்கில் இடையன் என்னும் பெயரை பரவலாக பயன்படுத்தத் தொடங்கினார். ஆடு, பசு, மாடு போன்றவற்றை மேய்த்த இவர்கள் காலப்போக்கில் எருமை மாடுகளையும் மேய்த்தனர்."[29] இதனை,

"திரிமருப்பு எருமை இருள்நிற மை ஆன்

வருமிடறு யாத்த பகுவாய்த் தெண்மணி

புலம்புகொள் யாமத்து இயங்குதொறு இசைக்கும்"[30] குறு.279 (1-3)

என்னும் குறுந்தொகை பாடல் மூலம் அறியலாம். சங்க இலக்கியங்கள் பதிவுச் செய்த முல்லை நிலத்தில் மூன்று முக்கிய பிரிவினர்கள் ஆளுமை செலுத்தியதை அறியமுடிகிறது. இவர்கள் மேய்த்தலை முக்கியத் தொழிலாகக் கொண்டிருந்தனர். பிற தொழில்கள் அறியாதவர்களாக இருந்தனர். இடையர் என்னும் சொல்லை அகராதிகள் பெரும்பான்மையாகக் குறிக்கப்படுகிறது. கோவலர் என்னும் சொல் பாடலில் பயின்று வந்துள்ளதை,

“கனை பெயல் பொழிந்து கடுங் குரல் பயிற்றி

கார் செய்து என் உழையதுவே, ஆயிடை

கொல்லைக் கோவலர் எல்லி மாட்டிய

பெரு மர ஒடியல் போல”[31] நற்.289 (5-10)

என்னும் பாடல் அடிகளில் கோவலர் என்னும் சொல்லால் முல்லை நில மக்கள் குறிக்கப் பெற்றுள்ளதை அறியலாம்.

### 3.4.1.1.3.2 முல்லை நில மகளிர் :

முல்லை நிலத்தில் வாழ்ந்த மகளிர்கள் குறிப்பிடத்தக்கப் பண்புகளைக் கொண்டிருந்தனர். கற்புடன் ஆற்றியிருத்தல் மற்றும் வினைமுடிந்து திரும்பும் தலைமகனுக்கு விருந்திற்கு ஏற்பாடு செய்தல் என இருநிலைகளில் குறிக்கப் படுகின்றனர். கலித்தொகையில் மட்டும் தலைவியின் இருத்தல் பண்பு ஏற்படும் பின்னணி சற்று வேறுபாட்டாக புனைந்துரைக்கப்பட்டுள்ளது. இங்கு களவிலேயே இருத்தல் பண்பில் ஈடுபடுகிறாள் என்பதாகும். தொல்காப்பியம் குறிப்பிடும் கற்பு கோட்பாட்டின் வலிமை முல்லை நிலத்தலைவி வாயிலாகச் சுட்டப்பட்டுள்ளது. முல்லை நில மகளிர் மோர், வெண்ணெய் போன்ற பொருட்களை விற்று தொழில் செய்வர். இடைச்சி என்ற சொல்லால் பெரும்பாலும் முல்லை நில மகளிர் விளக்கப் பெறுகின்றனர். ஆயர் மகளிர், ஆய மகளிர், ஆய்ச்சியர் என்ற பெயர்களாலும் அழைக்கப்பட்டதை இலக்கியங்களும் எடுத்துக்காட்டுகின்றன. ஆய மகளின் தோற்றம் குறித்து, முனைவர் இரா. அரங்கராசன்,

“முள் எயிறு உடையவளாக, வாடுறு கூந்தல் கொண்டவளாக, மான் நோக்கினளாக மென்தோள் உடையவளாக இருக்கிறாள் ஆய மகள் அகன்ற அல்குல், தோள், கண் என்று சொன்ன மூன்றிடமும் பெருத்து, நுதல், அடி, இடைஎன்று சொன்ன மூன்றிடமும் சிறுத்துக் காமனும் பிறர்க்கு மனக்கவலை செய்தலோடே தன் அம்பை விடுவதற்குக் காரணமான அழகுடையவளே ஆய மகள் என அழகின் இலக்கணமாக உள்ளாள்”[32] என்ற உரைநடையால் அறியலாம்.

சிலப்பதிகார ஆசிரியர் தாம் படைத்த காப்பியத்தின் ஒரு காரணமாக “ஆய்ச்சியர் குரவை” என்று தலைப்பிட்டுள்ளது. இங்கு கவனிக்கத் தக்கது. “கொலைக் களக்காதை” என்னும் பகுதியில் முல்லை மகளிரை இளங்கோ குறிப்பிட்டுள்ளார். அதில் மாதவி என்ற பெண் கதாபாத்திரம் இடையர்குலத்தில் தோன்றியதாக சித்தரிக்கப்பட்டுள்ளார். மேலும் இளங்கோவடிகள் முல்லை நில மகளிரை இரண்டு பெயர்களில் அழைக்கிறார். ஒன்று “இடைக்குல மடந்தை” மற்றொன்று “ஆய்ச்சியர்” என்று குறிப்பிட்டுள்ளார். இதனை,

“அரும்பெறல் பாவையை அடைக்கலம் பெற்ற
இரும்பேர் உவகையின் இடைக்குல மடந்தை
அளைவிலை உணவின் ஆய்ச்சியர் தம்மொடு
மிளைசூழ் கோவலர் இருக்கை அன்றிப்
பூவல் ஊட்டிய புனைமாண் பந்தர்”[33] சிலம்பு.கொலை காதை (1-5)

என்னும் அடிகளால் அறியலாம். முல்லை நில பெண் மக்களை சங்க இலக்கியக் கவிதைகள் பின்வருமாறு பதிவுச் செய்துள்ளதை,

“தம்புல ஏறு பரத்தர உய்த்த தம்
அன்புஉறு காதல் கைபிணைந்து ஆய்ச்சியர்
இன்புற்று ஆய்வர், தழூஉ
முயங்கிப் பொதிவேம், முயங்கிப் பொதிவேம்”[34] கலி.106 (30-34)

என்னும் பாடல் அடிகளில் முல்லை நில மகளிர் ஆய்ச்சியர் என்றே குறிக்கப் பெற்றுள்ளனர்.

### 3.4.1.1.3.3. தலைவியின் விருந்தோம்பல்

முல்லை நில தலைவியின் விருந்தோம்பும் எண்ணங்களை முல்லை நில பாடல்கள் பதிவு செய்துள்ளன. தலைவனை விருந்தினர்களாகவே நினைத்து வாழ்ந்தனர். ஆற்றிருத்தலின் இறுதி நிலையாக இதனைக் கொள்ள வேண்டும்.

பெண்ணை மையப்படுத்தி விருந்து என்னும் செவ்வியல் பண்பாடு சங்க இலக்கியங்களால் கட்டமைக்கப்பட்டுள்ளதை,

தலைவன் இல்லாத வீட்டில் தலைவி மட்டும் விருந்தோம்பும் பண்பு தமிழர்க்குரியதன்று. உடன்போக்குப் போன தன் மகளைத் தேடி வரும் தாய் எப்பெண்ணைக் கண்டாலும் தன் மகளைப் போலவே எண்ணுகிறாள். அவ்வாறு தன் மகளை ஒத்திருந்த பெண்ணைக் காணும் போது கண்ணீர் பெருகி வருந்தும் நிலையினை,

“முன்னாள் உம்பர்க் கழிந்த என்மகள்

கண்பட நீராழ்ந்தன்றே தந்தை

தன்னூர் இடவயின் தொடுவேன்”[35]… நற்.198 (3-5)

என்னும் பாடலடிகள் எடுத்துரைக்கின்றன. இப்பாடலின் வழி தாய் தன் மகளிடம் கொண்டிருந்த அன்பானது தன் மகளை போல இருந்தவளைக் காணும் போது உண்டாகுகிறது. அதனால் அவளை விருந்துக்கு அழைக்கிறாள் செவிலித்தாய் அவ்விருந்திணையும் தொழுது ஏற்கும் பெருமையினையும் புலப்படுத்துகிறாள் செவிலித்தாய்,

“ஆக வன முலைக் கரைவலம் தெறிப்ப

அழுதனள் உறையும் அம் மா அரிவை

விருந்து அயர் விருப்பொடு வருந்தினள் அசைஇய

முறுவல் இன்நகை காணகம்

உறுபகை தணித்தனன், உரவு வாவேந்தே”[36] நற்.81 (6-10)

என்னும் முல்லைத்திணைப் பாடல் வழி புலவர் அகம்பன் மாலாதனார் கவிதை மொழிகளால் பதிவுச் செய்துள்ளார். இங்கு தலைவனும் தலைவியின் விருந்தோம்பும் பண்பை நினைத்துத் தேரை விரைவாகச் செலுத்தும் தன்மைப் பெற்றவனாகிறான். பொழுது நோக்காமல் வினைமுடிந்து திரும்பி வரும்

தலைவனுக்குத் தலைவி விருந்து உபசரிப்பதையேக் கடமையாக முல்லை நிலத் தலைவி வாழ்ந்துள்ளார் என்பதை,

"அல்லில் ஆயினும் விருந்து வரின் உவக்கும்

முல்லை சான்ற கற்பின்

மெல் இயற் குறுமகள் உறைவின் ஊரே"[37] நற்.142 (8-10)

என்னும் பாடல் வழி புலவர் இடைக்காடனார் பதிவுச் செய்துள்ளார். இங்ஙனம் முல்லை நில தலைவி கற்புடன் இருப்பதோடு தலைவனை விருந்தினர் போல் விருந்து உபசரிக்கும் பண்பை உடையவளாய் இருந்தாள் என்பதும் புலனாகின்றது.

### 3.4.1.1.3.4 முல்லை நிலத்தில் பிற மக்கள்

முல்லைத் திணை கவிதைகளில் குறிக்கப்படும் பிற மாந்தர்களில், வேடர்கள், உழவர்கள், பாணர்கள், தேர்பாகன், மள்ளர்கள், செவிலி முதலியோர்கள் முக்கியமானவர்களாகப் பதிவு செய்யப்பட்டுள்ளனர். போர்வையின்கண் பிரிந்த ஆடவர்களுள் வேந்தர்களும் இடம் பெற்றிருந்தார்கள். முல்லைக் கவி ஊடலையும் உரிப்பொருளாக எடுத்து நவில்கிறது. இங்கு பாணன்(ர்) என்னும் மக்கள் இடம் பெறுகிறார்கள். இவர்களில் உழவர் என்பது மருத நில உழவர்களின் தன்மையைப் பெற்றிருந்தவர்கள் இல்லை. எனவே இவர்களை ஆரம்பகால உழவர்கள் என்று கூறலாம். முல்லைப் பாடல் ஒன்றில் கோவலர்கள் ஆடுமாடுகளை மேய்ப்பது அல்லாமல் பிற தொழில்களைச் செய்ய அறியாதவர்கள் என்பதை,

"உரும் இசை அறியாச் சிறு செந்நாவின்

ஈ மணி இன்குரல் ஊர் நணிஇயம்ப

பல் ஆ தந்த கல்லாக் கோவலர்

கொன்றைஅம் தீம் குழல் மன்று தோறு இயல்"[38] நற்.364 (7-10)

என்னும் பாடல் அடிகளால் அறியலாம். இங்ஙனம் முல்லைத் திணையில் பலதரப்பட்ட மக்கள் பயின்று வந்துள்ளனர்.

### 3.4.1.2 முல்லை நில உணவு பொருட்களும் அரிசி உணவுகளும்

முல்லை நில கவிதைகள் வெளிப்படுத்தும் உணவு பொருட்களாவன. அரிசி, பால், வெண்ணெய், தயிர், நீர், கள், தயிர் குழம்பு, ஊறுகாய், பால் கூழ், நெய் ஆகிய உணவுப் பொருட்களை முல்லைத் திணை கவிதைகள் வாயிலாக அறியலாம்.

#### 3.4.1.2.1 அரிசி உணவுகள் :

முல்லை நில கவிதைகளில் அரிசி உணவுகள் குறைவாகவே பயன்படுத்தியுள்ளனர் என்பதை அறிய முடிகிறது. அரிசி என்று வரும்போது உழவு தொழில் செய்து முடிக்க வேண்டிய கட்டாயம் உள்ளது. எனவே உழவு தொழில் முல்லை நிலத்தில் செய்யப்பட்டன என்பது புலனாகும். முல்லை நில உழவு நிலம் குறித்து,

"முதைப்புனம் கொன்ற ஆர்கலி உழவர்
விதைக் குறு வட்டி போதொடு பொதுளப்
பொழுதோ தான்வந் தன்றே மெழுகுஆன்று
ஊதுஉலைப் பெய்த பகுவாய்த் தெண்மணி"[39] குறு.185 (1-4)

என்னும் குறுந்தொகை பாடல் வழி பழங்கொல்லையயை அழித்து விளைநிலமாக மாற்றியுள்ளதைக் காணலாம். உழவுத் தொழில் செயயப் பெற்ற திறத்தை,

"கால மாரி மாலை மாமழை
இன்இசை உருமினம் முரலுசெம்
முன்வரல் ஏமம் செய்துஅகன்றோரே"[40] குறு.200 (5-7)

என்னும் ஔவையார் இயற்றிய பாடலுள் இன்இசை என்ற சொல் உழவர்களுக்கு மழையின் ஓசை இனிமைப்பயக்கும் என்று கூறினார்.

### 3.4.1.2.2 பயிர்த்தொழில்

முல்லைநில உழவுத்தொழில் அரிசி மற்றுமின்றி வரகுபயிர், கதிர், வெண்ணெய் ஆகியவற்றையும் பயிர் செய்ததை அறிய முடிகிறது.

### 3.4.1.2.3 பயிர் செய்தல்

திணை அடிப்படையில் நோக்கும் போது முல்லை நிலத்தில் முதன்முறையாக பயிர் செய்யத் தொடங்கினர். பயிர் செய்தல் நிகழ்வை முல்லை நிலப்பாடல்கள் பதிவு செய்துள்ளன.

"பாங்கு அரும் பாட்டங்கால் கன்றொடு செல்வேம்; எம்

தாம்பின் ஒரு தலை பற்றினை, ஈங்கு எம்மை

முன்னை நின்றாங்கே விலக்கிய எல்லா!"[41] கலி.116 (1-3)

என்னும் பாடல் அடியில் பாங்கு அரும் பாட்டங்கால் என்ற தொடர் மனையின் அருகில் பயிர் செய்யும் நிலம் என்று உரையாசிரியர் உரைக் கொள்ளப்படுகிறது.

### 3.4.1.2.4 வரகு பயிர் செய்தல்

வரகு என்னும் தானிய வகையை முல்லை நில மக்கள் பயிர் செய்தலை சங்க இலக்கிய முல்லை திணைப் பாடல்கள் பறைசாற்றுகின்றன. இதனை,

"மா புதல் சேர வரகு இணர் சிறப்ப

மா மலை புலம்ப, கார் கலித்து அலைப்ப

பேர் அமர்க் கண்ணி"[42] ஐங்.496 (1-3)

என்னும் பாடல் அடிகளில் வரகு பயிர் செய்தலைக் குறிப்பிடுகிறது.

### 3.4.1.2.5 வெண்சோறு

பசுக்கள் தரும் நெய்யோடு வெண்மையான நெய்ச் சோற்றை கலங்களில் இட்டு வைத்ததை,

“பல்ஆ பயந்த நெய்யின் தொண்டி

முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெஞ்சோறு

எழுகலத்து ஏந்தினும் சிறிது”[43] குறு.210 (2-4)

என்னும் பாடல் அடிகளால் காக்கை பாடினியார் நச்செள்ளையார் பதிவு செய்துள்ளார். சோற்றில் இனிய புளிப்பு உடையச் சோற்றை உண்டனர். அதன் மீது பசுவின் வெண்ணெய் இட்டு அது உருக்கி நெய்யாக மாற அதனை ஏவலர் உண்டு மகிழ்ந்தனர். இதனை,

“புதுக் கலத்து அன்ன செவ் வாய்ச் சிற்றில்

புனை இருங் கதுப்பின் நின் மனையோள் அயர

பாலுடை அடிசில் தொடீஇய ஒரு நாள்”[44] அகம்.394 (9-11)

என்னும் பாடலடியால் விருந்து உபசரிப்பது தலைவியின் பாற்படும் என்பது புலனாகிறது என்பதை அறியலாம்.

### 3.4.1.3 முல்லை நிலத்தில் இறைச்சி உணவுகள்

முல்லை நில மக்கள் அசைவ உணவுகளை அதிகமாக உட்கொண்டதாக குறிப்புகள் இல்லை. அசைவ உணவுகளை வேட்டையாடி உண்டனர். முல்லை நிலத்தில் மறவர்களும் வாழ்ந்திருந்தனர். முல்லை நிலத்தில் முயல் வேட்டை நடைபெற்றதை,

“உடும்பு கொலீஇ, வரிநுணல் அகழ்ந்து

நெடுங் கோட்டுப் புற்றத்து ஈயல் கெண்டி

எல்லு முயல் எறிந்த வேட்டுவன் சுவல்

பல் வேறு பண்டத் தொடை மறந்து, இல்லத்து”[45] நற்.59 (1-4)

என்னும் பாடல் அடிகளால் சங்க புலவர் கபிலர் குறிப்பிடுகிறார்.

தலைவனுக்குத் தலைவி மதிய விருந்து உருவாக்குவதை,

“முற்றையும் உடையமோ மற்றே-பிற்றை

வீழ்மா மணிய புனை நெடுங் கூந்தல்

நீர்வார் புள்ளி ஆகம் நனைப்ப

விருந்து அயர் விருப்பினள் வருந்தும்

திருத்து குழை, அரிவைத் தேமொழி நிலையே?"[46] நற்.374 (6-10)

என்னும் பாடல் அடிகளால் தெளியலாம். இறைச்சியை உவமையாக இடைக்காடனார் என்னும் புலவர் கூறியுள்ளதை,

"ஊன்கிழித் தன்ன செஞ்சுவல் நெடுஞ்சால்

வித்திய மருங்கின் விதைபல நாறி"[47] அகம்.194 (4-5)

என்னும் பாடல் அடிகளில் செம்மண்ணில் விவசாயத்திற்கு வேண்டி கிழித்த நிகழ்வு இறைச்சி சதையை நினைவுப்படுத்துகிறார் புலவர். மானை அறுத்து உண்ட மறவர்களை, காட்சிப்படுத்துவதை,

"திணைக் கள் உண்ட தெறி கோல் மறவர்

விசைத்த வில்லர், வேட்டம் போகி

முல்லைப் படப்பைப் புல்வாய் கொண்டும்"[48] அகம்.284 (8-10)

என்னும் பாடல் அடியால் அறியலாம்.

### 3.4.1.4 முல்லை நிலத்தில் நீர் உணவுகள்

முல்லை நிலத்தில் நீர் உணவுகள் பயன்படுத்தப்பட்டுள்ளதை அறியமுடிகிறது. முல்லை நில நீர் உணவாக நீர், பால், தயிர், வெண்ணெய், நெய், கள்ளு ஆகியவற்றைக் கூறலாம். முல்லை நிலத்தில் இறைச்சி உணவுகள் அந்த நிலத்தில் கிடைக்கும் மான், ஆடு போன்ற விலங்குகளின் தசைகளை பங்கிட்டு பகிர்ந்து உண்ணும் பழக்கம் இருந்ததை அறிய முடிகிறது.

#### 3.4.1.4.1 நீர்

நீர் தோன்றக் காரணம் மழையாகும். காடு சார்ந்த நிலங்களில் மழைப்பெய்வது இயற்கையான ஒன்றாகும். நீர் தங்கி இருக்கும் இடங்களை நீர்

தடாகங்கள் அல்லது நீர் நிலைகள் என்று அழைக்கலாம். முல்லை நில கவிதைகளில் நீர் உணவு மனிதர்கள் மட்டுமன்றி மான் போன்ற விலங்குகளும் உண்டதை இயற்கை நயத்துடன் புலவர் படம்பிடித்துக் காட்டுகிறார். இதனை,

"இரும்பு திரித்தன்ன மா இரு மருப்பின்

பரல் அவல் அடைய, இரலை, தெறிப்ப

மலர்ந்த ஞாலம் புலம்பு புறக்கொடுப்ப"[49] அகம்.4 (3-5)

என்னும் பாடல் அடிகளால் குறுங்குடி மருதனார் தெரியப்படுத்துகிறார். இதன் கருத்தை,

"வன்பரற் தெள்அறல் பருகிய இரலைதன்

இன்புறு துணையொடு மறுவந்து உகள

தான்வந் தன்றே தளிதரு தண்கார்"[50] குறு.65 (1-3)

என்னும் பாடல் அடிகள் மூலம் முல்லை நில மான்கள் நீர்நிலைகளில் நீர் உண்டதைப் புலவர்கள் தெள்ளத் தெளிவாகப் படம் பிடித்துக் காட்டியுள்ளனர்.

சங்க காலத்தில் தானம் செய்யும் போது நீரையும் தானம் செய்தனர் என்பதனை,

"கார்எதிர் புறவினதுவே உயர்ந்தோர்க்கு

நீரொடு சொரிந்த மிச்சில் யாவர்க்கும்

வரைகோள் அறியாச் சொன்றி

நிரைகோற் குறுந்தொடி தந்தை ஊரே"[51] குறு.233 (1-7)

என்னும் பாடல் அடிகள் மூலம் சங்கத் தமிழ் புலவர் பேயன் வெளிப்படுத்துகிறார்.

### 3.4.1.4.2 பனை நுங்கு நீர்

சங்க கால மக்கள் பனை நுங்கு நீரையும் உண்டனர். மருந்தும், சுவைநீரும் பனை நுங்கின் தன்மை ஆகும். இதனை,

"பிடிதுஞ்சு அன்ன அறைமேல நுங்கின்

தடிகண் புரையும் குறுஞ்சுனை ஆடி

பனிப் பூந் தளவொடு முல்லை பறித்து"[52] கலி.106(40-42)

என்னும் பாடல் அடிகளில் அருவி நீரை நுங்கின் வெட்டிய கண்ணை உவமிக்கிறார்.

### 3.4.1.4.3 பால்

நீர் உணவுகளில் முக்கியமான இடத்தைப் பெறுவது பால் உணவு. முல்லை நில கவிதைகளில் பால் உணவுகளாக தாய்ப்பால், எருமை பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் ஆகிய உணவு பொருட்கள் குறிக்கப் பெறுகின்றன.

### 3.4.4.4 தாய்ப்பால்

பெண்ணாகப் பிறந்து வளர்ந்து குமரியாகிய பின் மணம் முடித்து தாயாகும் போது அவள் மார்பில் சுரக்கும் பாலே தாய்ப்பால் ஆகும். தாய்ப்பால் குறித்து சங்க இலக்கியங்கள் பதிவுச் செய்துள்ளன. பிள்ளைகளுக்குப் பால் கொடுக்காவிடின் தனியே சுரந்து களையும். இதனை முல்லை நில உரிப்பொருளான இருத்தலோடு தொடர்புபடுத்தி புலவர்கள் கவிதைகள் படைத்துள்ளனர். தாய்ப்பாலை முல்லைப் பால் என்றும் அழைப்பர். இதனை,

"வாள் நுதல் அரிவை மகன் முலை ஊட்ட

தான் அவள் சிறுபுறம் சுவையினன்"[53] ஐங்.404 (1-2)

என்னும் அடிகளால் அறியலாம்.

"அழுத பிள்ளைக்குத்தான் பால்"

என்பது பழமொழி. இப்பழமொழியை உணர்த்தி நின்றாற் போல் ஐங்குறுநூறு கவிதை பின்வருமாறு விளக்குகிறது.

"ஒண்நுதல் பசப்பநீ செலின், தெண்நீர்ப்

போது அவிழ் தாமரை அன்ன நின்

காதல்அம் புதல்வன் அழும் இனி முலைக்கே"[54] ஐங்.424 (2-4)

என்னும் பாடல் அடிகளால் முல்லை நில புலவர் பேயனார் காட்சிப்படுத்துகிறார்.

**3.4.1.4.5 பசுவின் பால் :**

முல்லை நிலத்தில் மேயும் பசுக்களில் இருந்து வரும் பால்களையும் உணவாக முல்லை நில மக்கள் பயன்படுத்தினர். மேலும் பால் மூலம் கிடைக்கும் தயிர், மோர், வெண்ணெய், நெய் ஆகிய உணவு குறிப்புகளையும் முல்லை நில பாடல்கள் பதிவு செய்துள்ளன.

பசுவின் குட்டியைக் கன்று என்றழைப்பர். பசு உணவிற்காகப் புல் மேய்த்தலுக்குச் சென்றிருக்கும். மாலை பொழுதில் கன்றுகள் பசுவின் வரவை எதிர்பார்த்து இருக்கும். இச்சூழலை,

"பல்ஆ நெடுநெறிக்கு அகன்று வந்தெனப்

புன்தலை மன்றம் நோக்கி மாலை

மடக்கண் குழவி அலம் வந்தன்ன"[55] குறு.64 (1-3)

என்னும் பாடல் அடிகள் சான்று காட்டுகின்றன. பால் தரும் பசுக்களைப் பாற்பசுக்கள் என்று அழைத்தனர். இதனை,

"கார்புறந் தந்த நீருடை வியன் புலத்துப்

பல்ஆ புகுதருஉம் புல்லென் மாலை"[56] குறு.162 (1-2)

என்னும் அடிகள் உணர்த்துகின்றன. பாலை ஊற்றி வைப்பதற்கென்று கலங்கள் இருந்தன என்பதையும் அதனை "உறி" என்று அழைத்தனர். இதனை,

"கழுவொடு சுடுபடை சுருக்கிய தோற்கண்

இமிழ்இசை மண்டை உறியொடு தூக்கி"[57] கலி.106 (1-2)

என்னும் பாடல் அடிகளால் அறியலாம்.

அதிகம் பால் தரும் பசுவை இது குடம் பால் தரும் என்று சிறப்பிப்பர். இதனை,

"எல்லா! இ∴து ஒன்று கூறு - குறும்பு இவர்

புல்லினத்தார்க்கும், குடம் சுட்டவர்க்கும், எம்

கொல் ஏறு கோடல் குறை"[58] கலி.107 (1-3)

என்னும் பாடல் அடிகள் சான்று பகர்கின்றன.

### 3.4.1.4.6 பால் - பலி செலுத்துதல்

பலி உணவைப் பிரதிபலிக்கும் சங்கப் பாடல்கள் பல பாலையும் பலிப் பொருட்களில் உட்படுத்துவர் என்பது முல்லை நிலப் பழக்கமாகும் என்பதை,

"நுண்ணிதாத் தோன்றும், நுசுப்பு

இடை தெரியா ஏள் இருவரும் தத்தம்

உடை வனப்பு எல்லாம் இவட்கு ஈத்தார் கொல்லோ?

படை இடுவான் மன் கண்டீர், காமனமடை அடும்

பாலொடு கோட்டம புகின்"[59] கலி.109 (16-20)

என்னும் பாடல் அடிகளில் கடவுளுக்குப் பலியாக பாலையும் பயன்படுத்தினர் என்பது புலனாகும்.

### 3.4.1.4.7 தயிர்க்குழம்பு

குழம்பு வகைகளுள் ஒன்று தயிர்க்குழம்பு ஆகும். முல்லை நில மக்கள் தயிரை குழம்பாக உண்டனர். இதனை,

"முளிதயிர் பிசைந்த காந்தாள் மெல்விரல்

கழுவுறு கலிங்கம் கழாஅது உடீஇக்

குவளை உண்கண் குய்ப்புகை கழுமத்

தான்துழந்து அட்ட தீம்புளிப் பாகர்

இனிது எனக் கணவன் உண்டலின்

நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே"[60] குறு.167 (1-6)

என்னும் குறுந்தொகைப் பாடலில் தலைவி தலைவனுக்கு விருந்து உணவாகத் தயிர் குழம்பைத் தயார்படுத்துகிறார். இன்று "மோர் குழம்பு" என்று அழைக்கப்படுகிறது.

### 3.4.1.4.8 கூழ்

ஆடுகளை மேய்க்கும் இடையர்களுக்கு மதிய உணவு என்பது கூழ் ஆகும். கூழை உண்பதற்குக் கறியாக பாலை உண்டதை,

"பறியுடைக் கையர் மறியினத்து ஒழிய

பாலொடு வந்து கூழொடு பெயரும்

ஆடுடை இடைமகன் சென்னிச்"[61] குறு.221 (2-4)

என்னும் பாடல் அடிகள் சுட்டிக்காட்டுகின்றன.

### 3.4.1.4.9 மோர் விற்றல்

முல்லை நிலத்துப் பண்டமாற்றும் தொழிலாக மோர் விற்றலைக் கூறலாம். பால் வாங்காத இல்லங்களில் மோரை மட்டும் வாங்கும் பழக்கம் இன்றும் வழக்கத்தில் உள்ளது. முல்லை நில தலைவி மோர் விற்றதை,

"இகல்வேந்தன் சேனை இறுத்த வாய்போல

அகல், அல்குல், தோள், கண்என மூவழிப் பெருகி

நுதல், அடி, நுசுப்பு என மூவழிச் சிறுகி

அகலாங்கண் அளைமாறி, அலமந்து பெயருங்கால்"[62] கலி.108 (1-5)

என்னும் பாடல் அடிகளில் மோர் விற்கும் முல்லை நில மகளிரின் உடல் அடையாளங்களையும் புலவர் கூறியிருப்பது புனைவின் அடையாளமாகும். மோர் கடைந்த புனைவின் அடையாளமாகும். மோர் கடைந்த ஒலியானது நண்பகல் வேளையில் ஊரில் கேட்கும். இதனை,

"வெண்ணெய்த் தெழிகேட்கும் அண்மையால், சேய்த்து அன்றி,

அண்ணணித்து ஊர் ஆயின் நண்பகல் போழ்து ஆயின்"[63] கலி.108 (35-36)

என்னும் பாடல் அடிகள் மூலம் அறியலாம்.

### 3.4.1.4.10 கள்

முல்லை நில மக்கள் கள் அருந்தி மகிழ்ச்சியாக வாழ்ந்தனர் என்பதை முல்லைநில கவிதைகள் பிரதிபலிக்கின்றன. குறுந்தொகை முல்லை நிலப் பாடல் கள்ளை 'மட்டம்' என்று குறிப்பிடுகிறது. இதனை,

"மட்டம் பெய்த மணிக்கலத் தன்ன

இட்டுவாய்ச் சுனைய பகுவாய்த்தேரை

தட்டைப் பறையின் கறங்கும் நாடன்"[64] குறு.193 (1-3)

என்னும் பாடல் சான்றாகின்றது. கலித்தொகையின் கள்ளுண்ட ஆண் மகன் உவமையாக படிந்துள்ளதை,

"தோழி! நாம், காணாமை உண்ட

கடுங்கள்ளை, மெய்கூர

நாணாது சென்று நடுங்க உரைத்தாங்குக்

கரந்ததூஉம் கையொடு கோட்பட்டாம் கண்டாய்"[65] கலி.115 (1-3)

என்னும் பாடல் அடிகள் விளம்புகின்றன. கடின வேலை செய்யும் தொழிலாளர்கள் கள் குடிப்பது வழக்கம். இது சங்க காலத்தில் இருந்த பழக்கமாகும். இதனை,

"எரி புரை பல் மலர் பிறழ வாங்கி

அரிஞர் யாத்த அலங்கு தலைப் பெருஞ் சூடு

கள் ஆர் வினைஞர் களம்தொறும் மறுகும்"[66] அகம்.84 (11-13)

என்னும் பாடல் அடிகள் மூலம் சங்கப் புலவர் மதுரை எழுத்தாளன் குறிப்பிட்டுள்ளார். அகநானூறு கள்ளை 'அரியல்' என்று குறிப்பதை,

"கோடுடைக் கையர் துளர் எறி வினைஞர்

அரியல் ஆர்கையர் விளைமகிழ் தூங்கச்

செல்கதிர் மழுகிய உருவ ஞாயிற்று"[67] அகம்.184 (13-15)

என்னும் பாடலின் இரண்டாம் அடியின் முதல் சீர் சான்றாகிறது. இங்ஙனம் எட்டுத்தொகை நூலில் உணவு குறித்த விருந்தோம்பும் குறிப்புக் காணப்படுகிறது.

எட்டுத்தொகை நூல்களில் நீர் உணவுகள் என்னும் தலைப்பில் நீர், பால், பசுவின் பால், தயிர்க்குழம்பு, கூழ், மோர், கள் போன்ற உணவுகள் இடம் பெறுகின்றன. கள் அதிக அளவில் பயன்படுத்தபட்டுள்ளதை அறியலாம். கள்ளின் தன்மையை பட்டம் என்று கூறுகின்றனர்.

கள்ளை அருந்தி மக்கள் ஒற்றுமையுடன் மகிழ்ச்சியாக வாழ்ந்தனர் என்பதை அறிய முடிகிறது. மோர் கடைந்த ஒலியானது நண்பகல் வேளையில் ஊரில் கேட்கும். முல்லைநிலம் வளத்தையும், விருந்தோமல் நிகழ்ச்சியும் இடம் பெறுகின்றன.

பத்துபாட்டில் அசைவ உணவுகள் வரவில்லை எனில் அங்கு விளைவிக்ககூடிய பொருட்கள் அதிகமாக மக்கள் பயன்படுத்தியதை அறியலாம்.

### 3.5 பத்துப்பாட்டில் முல்லைநில விருந்தோம்பல்

பத்துப்பாட்டில் முல்லைநிலத்தை அடிப்படையாக வைத்து புனையப் பெற்ற இரண்டு பாடல் நூல்கள் உண்டு. ஒன்று முல்லைப் பாட்டு, மற்றொன்று நெடுநல் வாடை. இவ்விரண்டு நூல்களில் படிந்துள்ள உணவு, விருந்தோம்பல் பண்புகள் ஆகியவற்றை அறியலாம்.

#### 3.5.1 நெல்

முல்லை நிலத் தெய்வமான திருமாலுக்கு வழிபாடு செய்யும் தானியங்களுள் நெற்கதிர் பயன்படுத்தியதை,

“யாழ்இசை இனவண்டு ஆர்ப்ப நெல்லொடு

நாழிகொண்ட நறுவீ முல்லை

அரும்பு அவிழ் அலரி தூஉய்க் கைதொழு”[68] முல். (7-10)

என்னும் பாடல் அடிகளால் அறியலாம். முல்லை நிலத்தில் நெற்கதிர்கள் நன்றாக விளைந்து காணப்பட்டதை,

“அங்கண் அகல்வயல் ஆர்பெயல் கலித்த

வண்தோட்டு நெல்லின் வருகதிர் வணங்க”[69] நெடு. (21-22)

என்னும் அடிகளால் நக்கீரர் எடுத்துக் காட்டியுள்ளார்.

### 3.5.2 நீர் உணவு

நெடுநல்வாடை உணர்த்தும் நீர் உணவு என்பது பனை நீரும், கள்ளும் ஆகும்.

### 3.5.3 பனை நீர்

பனை நீரைத் “தெண்நீர்” என்று குறிப்பிடுவதை,

“கொழுமடல் அவிழ்ந்த குழுஉக்கொள் பெருங்குலை

நுண்நீர் தெவிள வீங்கிப் புடைதிரண்டு

தெண்நீர்ப் பசுங்காய் சேறு கொள முற்ற

நளிகொள் சிமைய குருஉத்துளி தூங்க”[70] நெடு. (30-35)

என்னும் பாடல் அடிகள் புலப்படுத்துகின்றன.

### 3.5.4 கள்

கள் குடிக்கும் மக்கள் எவ்வாறு இருந்தனர் என்பதை,

“படலைக் கண்ணி பருஏர் எறுழ்திணி தோள்

முடலை யாக்கை முழுவலி மாக்கள்

வண்டு மூசுதேறல் மாந்தி மகிழ்சிறந்து

துவலைத் தண்துளி பேணார் பகல் இறந்து

இரு கோட்டு அறுவையர் வேண்டுவயின் திரிதர”[71] நெடு. (30-35)

என்னும் பாடல் அடிகளில் முல்லை நில மக்கள் கள் அருந்தி தெருக்களில் இன்பமாக கழிந்ததைப் படம்பிடித்து விளக்குகிறது. இங்ஙனம் நெல், நீர் உணவுகள் மட்டும் பயின்று வந்துள்ளன. இறைச்சி உணவுகள் பயின்று வரவில்லை.

## 3.6 தொகுப்புரை

காடும் காடு சார்ந்த நில பகுதியான முல்லை நிலத்தில் வேளாண் செய்ததற்கான குறிப்புகள் கவிதைகளில் காணப்படுகின்றன. நெல் வரகு போன்ற தானியங்களை விதைத்தார்கள். காடுகள் வெட்டி நிலம் சீர் செய்யப் பெற்று அதில் வேளாண்மையைச் செய்தனர். வளர்ந்த நெற்கதிர்களைக் கவிதைகள் குறிப்பிடுவதன் மூலம் விவசாய நிலை வளமாக இருந்ததை அறியலாம்.

இடையர், கோவலர், ஆயர், என்றும் இனத்தவர்கள் முல்லை நில கவிதைகளில் அதிகம் பயின்று வந்துள்ளனர். புல்லாங்குழல் ஓசையை நிரப்பி காடு வழி ஆடுகளையும், ஆக்களையும் மேய்க்கும் தொழிலைக் கொண்டனர். இந்த இனங்களைச் சேராதவர்களாக இவர்களே அசைவ உணவு உண்பவர்களாகக் குறிப்பிடப்பட்டுள்ளனர். மான் போன்ற விலங்குகளை வேட்டையாடி அதனை உண்டு சுற்றத்தார்க்கும் பகிர்ந்து கொடுக்கும் நற்பண்பு உள்ளவர்கள்.

நீர் உணவுகளாக பால், தாய்ப்பால், தயிர், மோர், வெண்ணெய், நெய், கள், பனை நீர் ஆகியவை முல்லை நில மக்கள் பயன்படுத்தி இருந்தனர். தாய்ப்பால் கொடுக்கும் தலைவியின் உணர்வுகள் சிறந்த நாகரிக நிலையைப் படம்பிடித்து காட்டுகிறது. மேலும் வினை நிமித்தம் பிரிந்த தலைவன் இல்லம் வருவான் என்று எதிர்பார்த்து இருக்கும் தலைவி தலைவனுக்கு வேண்டி விருந்து சமைக்கும் பொருட்டு எண்ணிக் கொண்டிருப்பவளாகச் சித்திரப்படுத்தப்படுகிறாள். இங்கு விருந்தோம்பல் பண்பு தலைவியின் உணர்வுகள், எண்ணங்கள் வாயிலாக புலப்படுத்துகின்றன.

மோர் விற்றல் முக்கியமான பண்டமாற்று தொழிலாக முல்லை நிலத்தில் குறிக்கப் பெற்றுள்ளன. மோர் விற்றதின் மூலம் நெல்லும், கள்ளும் கிடைத்தன. விவசாயம் செய்யும் மக்கள் கள் அருந்தி மகிழ்கின்றதாக கவிதைகள் தெரிவிக்கின்றன. மக்கள் ஒன்றாக தங்கிய நிலையை இங்கு நாம் அறிகின்றோம். நெய் தீபம் ஏற்றுதல், வெண்ணையை தலை முடிகளில் தேய்த்து குளித்தல்,

விரிச்சி கேட்டல். திருமால் வழிபாடு போன்ற பழக்கவழக்கங்களை முல்லை நில மக்களிடம் காணப்பட்டன. பலி உணவாக நீர், பால் ஆகிய பொருட்கள் இடம் பெற்றன என்பதை நோக்கும் போது வழிபாடல் முறைகளிலும் தனித்துவம் அடைந்திருந்தனர் என்பதை ஐயமின்றி கூறலாம்.

முல்லைத் திணையில் காடுகள் நிறைந்து காணப்படுவதால் அங்கு வேட்டையாடும் விலங்குகளைக் கொன்று அதை பிரித்து கொடுத்தும், பச்சையாவோ, கறி சமைத்தொ சுற்றத்தாரும் விருந்து அளிப்பதை அறிய முடிகிறது. வேளாண்மை தொழிலை அடிப்படையாகக் கொண்ட மருத நிலத்தில், வேளாண் தொழிலையும் அதில் கிடைக்கக்கூடிய உணவு பொருட்களைக் கொண்டு விருந்து அளிப்பதை பற்றி அடுத்த இயலில் விரிவாகக் காணலாம்.

## குறிப்புகள்:

1. இளம்பூரணர் (ப.ஆ), தொல்காப்பியம், பொருள் -நூற் 5, ப.7
2. மேலது, பொருள் நூற் 6, ப.7
3. இராமநாதசெட்டியர், சங்க காலத் தமிழர் வாழ்வு, ப.60
4. புலவர்.நா.கருணாநிதி, தொல்காப்பியம், பக்.10,11
5. இ.ரா.அரங்கநாதன், சங்க இலக்கியத்தில் ஆயர் வாழ்வியல், ப.11
6. மு.சண்முகம் பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, பா 344 (1-8), ப.302
7. கு.வெ.பாலசுப்பிரமணியன், பண்டைத்தமிழ் சமுதாய வளர்ச்சி, ப.13
8. அ.தெட்சிணாமூர்த்தி (ப.ஆ), ஐங்குறுநூறு, பா.402, ப. 88
9. சங்க இலக்கிய பொருட்களஞ்சியம் தொகுதி-1, ப. 168
10. அபிதான சிந்தாமணி, ப.133
11. ந.சி.கந்தையாபிள்ளை, செந்தமிழ் அகராதி, ப.40
12. கழகத் தமிழ் அகராதி, ப.81
13. சுப்பிரமணியன், க்ரியாவின் தற்காலத் தமிழகராதி, ப.78
14. முல்லைத் திணை, ப.5
15. இரா.அரங்கநாதன், சங்க இலக்கியத்தில் ஆயர் வாழ்வியல், ப.12
16. கந்தையாபிள்ளை, தென்னிந்திய குலங்களும் குடிகளும், ப.6
17. சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம், ப.212
18. அபிதான சிந்தாமணி, ப.220
19. கந்தையா பிள்ளை, செந்தமிழ் அகராதி, ப.48
20. நா.கதிரைவேற்பிள்ளை, அகராதி, ப.210
21. சுப்பிரமணியன், க்ரியாவின் கற்காலத் தமிழகராதி, ப.94
22. துரை.அரங்கசாமி, சங்க காலச் சிறப்பு பெயர்கள், ப.336
23. தா. நீலகண்டபிள்ளை, சங்கத் தமிழர் வாழ்வியல், ப.49
24. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.310

25. துரை.அரங்கசாமி, சங்க கால சிறப்புப் பெயர்கள், ப.336

26. சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம் தொகுதி-2, ப.593

27. ந.சி.கந்தையா பிள்ளை, செந்தமிழ் அகராதி, ப.243.

28. கழகத் தமிழ் அகராதி, ப.408.

29. நா.கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழி அகராதி

30. மு.சண்முகம் பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, பா.279, ப.245

31. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.289 (5-10), ப.532

32. இரா.அரங்கநாதன், சங்க இலக்கியங்களில் ஆயர் வாழ்வியல், ப.28

33. சிலம்பு செல்வராசு, சிலப்பதிகாரம்-கொலைக்களக் காதை (1-5), ப.256.

34. அ.மாணிக்கனார் (ப.ஆ), கலித்தொகை, பா.106 (31-34), ப.67

35. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை , பா.248 (3-5), ப.198

36. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.81 (6-10), ப.145

37. மேலது, பா.142 (8-10), பக். 260-261

38. மேலது, பா.364 (7-10), ப.673

39. மு.சண்முகம் பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, பா.185 (1-4), ப.142

40. மேலது, பா.200 (5-7), ப.179

41. அ.மாணிக்கனார் (ப.ஆ), கலித்தொகை, பா.116 (1-3), ப.134

42. அ.தெட்சிணாமூர்த்தி (ப.ஆ), ஐங்குறுநூறு, பா.496 (1-3) - ப.1065

43. மு.சண்முகம் பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை , பா.210 (2-4), ப.188

44. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா. 394 (1-11), ப.317

45. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.59 (1-4), ப.15

46. மேலது, பா.374 (6-10), ப.690

47. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா. 194 (4-5), ப.288

48. மேலது, பா.284 (8-10), ப.616

49. மேலது, பா.4 (3-5), ப.68

50. மு.சண்முகம் பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, பா.65 (1-3), ப.66

51. மேலது, பா.233 (1-7), ப.208

52. அ.மாணிக்கனார் (ப.ஆ), கலித்தொகை, பா.108, (40-42), ப.81

53. அ.தெட்சிணாமூர்த்தி (ப.ஆ), ஐங்குறுநூறு, பா.404 (1-2), ப.886

54. மேலது, பா.424 (2-4), ப.922

55. மு.சண்முகம் பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, பா.64 (1-3), ப.65

56. மேலது, பா.162 (1-2), ப.148

57. அ.மாணிக்கனார் (ப.ஆ), கலித்தொகை, பா.106 (1-2), ப.65

58. மேலது, பா.107 (1-3), ப.74

59. மேலது, பா.109 (16-20), ப.93

60. மு.சண்முகம் பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, பா.167 (1-6), ப.152

61. மேலது, பா.221 (2-4), ப.197

62. அ.மாணிக்கனார் (ப.ஆ), கலித்தொகை, பா.108 (1-5), பக்.81-82

63. மேலது, பா.108 (35-36), ப.83

64. மு.சண்முகம் பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, பா.193 (1-3), ப.174

65. அ.மாணிக்கனார் (ப.ஆ), கலித்தொகை, பா.115 (1-3), ப.130

66. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.84 (11-13), பக்.416-417

67. மேலது, பா.184 (13-15), ப.250

68. அ.மாணிக்கனார் (ப.ஆ), முல்லைப்பாட்டு, பா. (7-10), ப.187

69. அ.மாணிக்கனார் (ப.ஆ), நெடுநல்வாடை, பா. (21-22), ப.291

70. மேலது, பா. (23-27), பக்.293,294

71. மேலது, பா. (30-35), பக். 294

# இயல் - 4

# மருத நிலத்தில் விருந்தோம்பல் கூறுகள்

## 4.0 முன்னுரை

சங்க இலக்கியங்களில் திணைகளில் மருதத்திணையும் ஒன்றாகும். மருதத்திணைக் கவிதைகள் ஊடலை அடிப்படையாகக் கொண்டு புனையப்பட்டவை. மருத நில கவிதைகளில் பல்வேறு வகையான மன்னர்களும், மக்களும், வள்ளல்களும் இடம்பெற்றுள்ளனர். இவர்களின் போர்திறமும், ஈகை திறனும் உவமையாகச் சொல்லப்பட்டுள்ளன. இதன் நடுவே மருதநில மக்களின் விருந்தோம்பல் கூறுகளும் இடம்பெற்றுள்ளன. அவர்களின் உணவுப் பொருட்கள் குறித்தான செய்திகளும் இடம் பெறுகின்றன. இவைகள் அந்நில மக்களின் பழக்க வழக்கங்களையும் பண்பாட்டுகளையும் அடையாளப்படுத்தும் விதமாக அமைந்துள்ளன. மருதத்திணை சார்ந்தக் கவிதைகளில் விருந்தோம்பல் கூறுகளை ஆய்வு செய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

## 4.1 மருதத்திணையின் இலக்கியப் பொருட்கள்

தொல்காப்பியம் ஒவ்வொரு திணைக்கும் முப்பொருளைச் சுட்டிச் செல்கிறது. இது இலக்கிய உருவாக்கத்தின் தளமாகும். முப்பொருட்களின் சேர்மானத்தில் கட்டப்படும் இலக்கியங்களில் தனித்தனியாக திணைகளும் அதைச்சார்ந்த பொருட்களும் தொல்காப்பிய உரையாசிரியர்களால் பகுக்கப்பட்டுள்ளன.

## 4.2 மருதத்திணையின் முதற்பொருள்

முதற்பொருள் என்பது நிலமும், பொழுதும் மருதத்திணையின் முதற்பொருள் என்பது,

"வேந்தன் மேய பெருமணல் உலகம்"[1]

என்னும் நூற்பா மருதத்திணையின் நிலத்தை உரைக்கிறது. மருதத்திணையின் பொழுதை வரையறுக்கும் போது,

"வைகறை விடியல் மருதம்"[2]

என்னும் நூற்பாவில் விடியலின் முன் பொழுதாகிய வைகறையும், அதன்பின் பொழுதான விடியலும் சிறுபொழுதாயினால் பெரும்பொழுது குறித்து குறிப்பிடாததால் ஆறுவகை பெரும்பொழுதும் மருதத்திணையைச் சார்ந்து வரும். இவையே மருதத்திணையின் முதற்பொருளாகும்.

## 4.3 மருதத்திணையின் கருப்பொருட்கள்

மருதத்திணையின் கருப்பொருள்கள் குறித்து மாணவர்க்கான எளிய உரையில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளதை,

"தெய்வம் - இந்திரன்

விலங்கு - எருமை, நீர் நாய்

மரம் - மருது காஞ்சி

பறவை - அன்னம், அன்றில்

பறை - நெல்லரி பறை

தொழில் - உழவு

பண் - மருதப்பண்

ஊர் - பேரூர் மூதூர்

நீர் - ஆற்றுநீர், பொய்கை

பூ - தாமரை, செங்கழு நீர்"[3]

இவையே மருதத்திணையின் கருப்பொருட்கள் ஆகும்.

மருதத்திணையின் உரிப்பொருள் என்பது "ஊடல்" ஆகும். இங்ஙனம் மருதத்திணையில் கவிதைப் படைக்க இம் முப்பொருள்கள் தேவையாகின்றன.

### 4.3.1 வயல்

மருதத்திணைப் பாடல்களில் வயல்வெளிகள் பின்புலமாக அமைந்துள்ளன. அதில் நெற்கதிர்களும், கனிகள் தொங்கி நிற்கும் மரங்களும் காட்சித் தருகின்றன.

வயல்களைச் செழுமையாகக் காட்சிப்படுத்தும் பாடல்களில் நாட்டு வளமும், நகர் வளமும் பொருட்படுத்தப்படுகின்றன. இதனை,

"சேற்றுநிலை முனைஇய செங் கட் காரன்
ஊர் மடி கங்குலில் நோன் தளை பரிந்து
கூர் முள் வேலி கோட்டின் நீக்கி
நீர் முதிர் பழனத்து மீன் உடன் இரிய
அம் தூம்பு வள்ளை மயக்கி, தாமரை
வண்டு ஊது பனி மலர் ஆரும் ஊர!"[4] அகம்.46 (1-6)

என்னும் பாடலில் தலைவனின் ஊரைச் சுட்ட புலவர் வயல் வெளிகளைக் காட்சிப்படுத்துவதைக் காணலாம். பிற்கால இலக்கியங்களுள் வயல்கள் முக்கிய இடம்பெற்றன. சிற்றிலக்கியங்களும் புதினங்களும் இவற்றைப் பறைச்சாற்றும் வண்ணம் அமைந்துள்ளன. சான்றாக முக்கூடற்பள்ளு என்னும் இலக்கியத்தில் வயல் மற்றும் விவசாயம் சார்ந்தும் பாடப்படுகின்றன. இதனை,

"சாத்தான் பெரியான் கொன்னனத்
தாண்டி அரியான்
அடையான் உடையான் கட்டைச்
சங்கன் புங்கன்
போத்தன் அருதன் கோணப்
பூவன் மருதன்
பூலான் வயித்தி வேலான்
புலியன் கலியன்
காத்தன் வெருகன் கப்புக்
காலன் முருகன்
ஆண்டன் கருத்த முண்டன்
கங்கன் சிங்கன்

கூத்தன் முதலா யுள்ள
பள்ளர் எல்லாம்
குரவையிட் டேரைப் பூட்டிக்
கூடி யுழுதா"[5] முக்கூடற். (115)

என்னும் பாடல் அடிகளில் பள்ளன் மேற்சொன்னவர்களோடு வயலில் உழுத நிலையைக் காணலாம். தமிழ்வட்டார நாவல்களில் பெரும்பாலும் விவசாயம் முக்கியப் பின்புலமாக அமைவதுண்டு. சான்றாகப் பொன்னீலனின் "கரிசல்" கா.சி. வேங்கட ரமணியின் "முருகன் ஓர் உழவன்" ஆகிய புதினங்களில் விவசாய மக்கள் முக்கியப் பாத்திரங்களாக அமைகின்றனர். இங்ஙனம் மருதநில பின்புலம் கற்கால இலக்கியங்கள் வரை முக்கியக் களமாகக் கையாளப்பட்டு வருகிறது.

### 4.4 விருந்தோம்பல் கூறுகள்

"சங்க இலக்கியத்தில் மிளகு, நெய், புளி, கீரை, இறைச்சி, கும்மாயம் பற்றிய உணவுக் குறிப்புகள் காணக்கிடக்கின்றன. பக்தி இலகியத்தின் எழுச்சியோடு தமிழ் உணவு வகையில் பெரிய மாற்றம் நிகழ்ந்திருக்கிறது"[6] என மேரி செல்வம் குறிப்பிடுகிறார்.

மருத நிலத்தில் விருந்தோம்பல் கூறுகள் என்னும் இவ்வியல் மூன்று தலைப்புகளின் கீழ் ஆய்கிறது.

1. அரிசி மற்றும் பழம் சார்ந்த உணவுகள்
2. அசைவ உணவுகள்
3. நீர் உணவுகள்

என்பனவாகும்.

#### 4.4.1 அரிசி மற்றும் பழம் சார்ந்த உணவுகள்

மருத நில கவிதைகளில் அரிசி உணவுகளும் பழங்களின் தன்மைகளும் மொழியப்படுகின்றன. இது மருத நில வளங்களைக் காட்சிப்படுத்துகின்றன.

#### 4.4.1.1 நெல்

மருத திணையில் நெல் முக்கிய விளைப் பொருளாக அமைந்துள்ளது. நெல், செந்நெல், ஐவகை நெல், வெண்ணெல் ஆகியவை கூறப்பட்டுள்ளது. நெல்லை முதன்மைப்படுத்தி மன்னர்களின் ஆட்சி நிலையும் நாட்டு வளமும் புகழப்பட்டுள்ளன. இதனை,

"வாழி ஆதன், வாழி அவினி
நெல் பல பொலிக பொன் பெரிது சிக்கி
என வேட்டோளே, யாயே : யாமே
நனைய காஞ்சிச் சினைய சிறுமீன்
யாணர் ஊரன் வாழ்க
பாணனும் வாழ்க என வேட்டேமே"[7] ஐங்.1 (1-6)

என்னும் பாடலில் மன்னன் வாழ்த்தப் படுகிறான். நாட்டின் வளம் மட்டுமல்ல வீட்டின் செல்வத்தை வளமையாகக் குறிப்பிடுவதையும் நெல் உணர்த்துகிறது. இங்கு, நெல் பொருளாதாரத்தைக் குறிக்கவும் பயன்படுவதை அறியலாம்.

வேலன் வெறியாடும் போது நெல்லை தூவி வழிபடும் முறை இருந்துள்ளது. அந்நெல்லானது செந்நெல். இதனை,

"எம் அணங்கினவே, மகிழ்ந! முன்றில்
நனைமுதிர் புன்கின் பூத்தாழ் வெண்மணல்
வேலன் புனைந்த வெறிஅயர் களம்தொறும்
செந்நெல் வான்பொரி சிதறி யன்ன"[8] குறு.353 (1-4)

என்னும் பாடல் அடிகள் மூலம் அறியலாம். வயலில் நெல் விளைந்தால் அதனை வாங்க இரவலர்களும் இருந்தனர். பகுத்துக் கொடுத்து வாழ்வது இல்லறத்தாரின் கடமை. இதற்கு வயல் விளைவு என்பது முக்கியமானதாகும். இதனை,

“வாழி ஆதன் வாழி அவினி!

விளைக வயலே! வருக இரவலர்!

என வேட்டோளே, யாயே; யாமே”[9] ஐங்.2 (1-3)

என்னும் பாடல் அடிகள் மூலம் விளங்கலாம். மருதநிலத்தில் வேளாண்மை முக்கியத்துவம் பெற்றுள்ளதை அறியலாம். செந்நெல்லும் அரிசியும் கலந்தக் கலவையை சிவந்தமுயிறுக்கும் அதன் வெண்மையான முட்டைக்கும் உவமையாகக் கூறுவதை,

“பழனப் பாகல் முயிறு மூசு குடம்பை

கழனி நாரை உரைத்தலின், செந்நெல்

விரவு வெள்ளரிசியின் தாஅம் ஊரன்”[10] நற். 180 (1-3)

என்னும் பாடல் அடிகள் சான்று பகர்கின்றன. நெல் செழிப்பாக இருந்ததால் புலவர் நெல்லையும், அரிசியையும் உவமையாக கூறியுள்ளார். “பழந்தமிழர்கள் மாட்சிமை மிக்கப் பண்புகளுடன் வாழ்ந்தனர். பிற உயிர்களை மதித்தனர் என்பதற்கு”[11] தா.நீலகண்டபிள்ளை சங்கத் தமிழர் வாழ்வியலில் குறிப்பிட்டுள்ளார்.

வெண்ணெல்லை அரிக்கும் போது காக்கைகள் மற்றும் பல பறவையினங்கள் அவ்வொலியின் மிகுதியைக் கேட்டு பயந்து, பறந்து மருத மரத்தில் தங்கும். இதனை,

“வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇ

பழனப் பல் புள் இரிய, கழனி

வாங்கு சினை மருதத் தூங்குதுணர் உதிரும்”[12] நற்.350 (1-3)

என்னும் பாடலடியால் சங்க காலப்புலவர் பரணர் குறிப்பிட்டுள்ளார். வாழை மரங்களை நட்ட நிலத்தில் நெல்விதைகளை விதைப்பர். செழித்து வளர்ந்தபின் மள்ளர் என்னும் நில மக்கள் கதிரறுப்பர். இதனை,

"வாழை மென்தோடு வார்புறுபு ஊக்கும்

நெல் விளை கழனி நேர் கண் செறுவின்

அரிவனர் இட்ட சூட்டு அயல், பெரிய"[13] நற்.400 (1-3)

என்னும் பாடல் அடிகள் நெற்கதிர்களை அறுவடைச் செய்த நிகழ்வைச் சுட்டுகிறது. நெல்லறுத்து நீங்கப் பெற்ற மருத நிலத்தையும் நற்றிணை இலக்கியம் எடுத்துரைக்கிறது. மீண்டும் நிலத்தை உழுதப் பின்னர் விதைக்கும் பொருட்களைப் பட்டியலிட்டுச் சென்றதை,

"அரிகால் மாறிய அம் கண் அகல் வயல்

மறு கால் உழுத ஈரச் செறுவின்

வித்தொடு சென்ற வட்டி பற்பல"[14] நற்.210 (1-3)

என்னும் கவிதை அடிகள் மூலம் செந்தமிழ்ப் புலவர் மிளைகிழான் நல்வேட்டனார் பதிவு செய்கிறார். இங்ஙனம் மருத நிலத்தில் முக்கிய விளைப்பொருளாக, உணவுப் பொருளாக நெல் விளங்கியிருந்தது. அதிகமாக விளைந்த நெற்கதிர்களைத் தெருவெங்கும் காய வைப்பர். இது நெற்களால் கூடு அமைந்தவைப் போல் இருக்கும். இத்தகு செழிப்பான திணை மருதத்திணை என்பதை,

"கழனிக் கரும்பின் சாய்ப்புறம் ஊர்ந்து

பழனயாமை பசுவெயில் கொள்ளும்

நெல்லுடை மறுகின் நன்னர் ஊர!"[15] அகம்.306 (6-8)

என்னும் பாடலடியால் அறியலாம்.

கரிகால் வளவனின் கழாஅர் என்னும் ஊரையும் குட்டுவனது மரந்தை என்னும் ஊரையும் குறிப்பிடும் போது நெற்களின் வளமையைப் புலவர் குறிப்பிடுவதை,

"கல்லா யானை கடி புனல் கற்றென
மலி புனல் பொருத மருது ஓங்கு படப்பை
ஒலிகதிர்க் கழனி கழாஅர் முன்துறை
கலிகொள் சுற்றமொடு கரிகால் காண"[16] அகம்.376 (2-5)

என்னும் பாடல் அடிகளும்,

"அம்தூம்பு வள்ளை அழற்கொடி மயக்கி
வண்தோட்டு நெல்லின் வாங்குபீள் விரிய
துய்த்தலை முடங்குஇறாத் தெறிக்கும், பொற்புடைக்
குரங்குஉளைப் புரவிக் குட்டுவன்
மரந்தை அன்ன, என் நலம் தந்து சென்மே"[17] அகம்.376 (14-18)

என்னும் பாடல் அடிகளால் உணரலாம்.

குட்டுவனின் மாந்தை என்னும் ஊர் பட்டினமாகக் குறுந்தொகை உரையில் குறிக்கப் பெற்றுள்ளது. இதனை, மு.சண்முகம் பிள்ளை பதிப்பாசிரியராக வெளியிட்ட குறுந்தொகை உரையில்,

"கடற்கரையிலுள்ள யானையை போலப் பிளிறும் இயல்புடைய வண்டாளங் குருகின் பெரிய தொகுதியானது, பகைவரைக் கொன்றொழித்து வெற்றிக் கொண்ட வீரரின் பேராரவார ஒலியைக் கேட்டு, அஞ்சுதற்கு இடமான குட்டுவனது மாந்தை என்னும் பட்டினத்தைப் போன்ற"[18] என்னும் உரை மூலம் அறியலாம். மாந்தை என்று கூறினும் மரந்தை என்று கூறினும் ஒன்றே என்றும் விளக்கம் தருகிறார்.

நெல்லாக கிடைத்தபின் அதை வறுத்தோ, பச்சையாகவோ உலக்கையால் இடிப்பர். பச்சையாக இடித்தால் அதனை அவல் என்று அழைத்தனர். இடித்தபின் நெற்பயிர் விளையும் இடத்தில் உலக்கையை வைத்தனர். இதனை,

"பாசவல் இடித்த கருங்காழ் உலக்கை
ஆய்கதிர் நெல்லின் வரம்புஅணைத் துயிற்றி"[19] குறு.238 (1-2)

என்னும் பாடல் அடிகள் மூலம் சங்க தமிழ் புலவர் குன்றியன் குறிப்பிடுவதை காணலாம்.

### 4.4.1.2 அரிசி உணவுகள்

நெல்லிலிருந்து கிடைத்த அரிசிகளை உணவாக்கி சுற்றத்தார்க்கும், விருந்தினர்க்கும் பகிர்ந்து அளித்து உண்டனர். மிகுதியானவற்றை பண்டமாற்று முறையில் விற்று பிற உணவுப் பொருட்களை வாங்கினர். சோறு என்பது, இல்லத்தின் செழிப்பை உணர்த்துவதாகும். மக்களை விருந்துண்ண பாடல் பாடி அழைத்ததாக ஈதலும், கடவுளுக்கு உணவு படைக்கும் தமிழர்களின் பழக்கமாக இன்றளவும் கடைப்பிடிக்கப்பட்டு வருகிறது என "தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும்"[20] என்ற நூல் விளக்குகிறது. பரத்தையர் இல்லத்தில் சோறு காணப்படும். தலைவியின் தோழி தலைவியின் குழந்தையைப் பரத்தையின் இல்லத்திற்கு அனுப்புகிறாள். இது தலைவிக்கும் தெரியும். இதனை நினைத்து வருத்தம் கொள்கிறாள். இதனை,

"பெருந் திரு நிலைஇய வீங்குசோற்று அகல் மனை
பொருந்து நோன் கதவு ஒற்றிப் புலம்பி யாம் உலமர"[21] கலி.83 (1-2)

என்னும் பாடல் அடிகளால் மருதக் கவிப் புலவர் படம்பிடித்துக் காட்டுகிறார். மருதநில உழவர்கள் சோற்றுத் திரள்களோடு வரால் மீன் குழம்பையும் உண்டுவிட்டு உழவு தொழில் செய்தார்கள். இதனை,

"மலை கண்டன்ன நிலை புணர் நிவப்பின்
பெரு நெற் பல் கூட்டு எருமை உழவ
கண்படை பெறாஅது, தன் புலர் விடியல்
கருங்கண் வராஅல் பெருந்த தடி மிளிர்வையொடு
புகர்வை அரிசிப் பொம்மற் பெருஞ் சோறு"[22] நற்.60 (1-5)

என்னும் அடிகள் மூலம் புலவர் தூங்கலோரியார் பதிவுச் செய்கிறார். திருமண விழாவில் சோறு உண்ட நிகழ்வை அகநானூறு பாடல் விளக்குகிறது. இரவில் தான் திருமணம் நடந்தது என்பது இங்கு குறிப்பிடத்தக்க கருத்தாகும்.

"உழுந்து தலைப்பெய்த கொழுங் களி மிதவை

பெருஞ் சோற்று அமலை நிற்ப, நிரைகால்

தண் பெரும் பந்தர்த் தருமணல் ஞெமிரி

மனை விளக்குறுத்து, மாலை தொடரி

கனை இருள் அகன்ற கவின்பெறு காலை"[23] அகம்.86 (1-5)

என்னும் பாடல் அடிகள் மூலம் நல்லஆர் கிழார் என்னும் புலவர் குறிப்பிடுகிறார். இல்லத்திருமண விழாவில் உளுந்தம் பருப்புச் சோற்றை உணவாக உண்டனர். இன்றைய திருமண விழாவில் உளுந்தஞ்சோறு தவிர்க்கப்பட்டுவிட்டது எனலாம். திருமணம் தோன்றிய விதத்தை,

"பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்

ஐயர் யாத்தனர் கரணம் என்ப"[24] தொல். கற்பு. நூற்.18

என்னும் நூற்பாவால் தொல்காப்பியர் தம் நூலில் குறித்துள்ளார். மணம் முடிக்கும் கருத்தைப் பதிவு செய்யும் சங்க இலக்கியப் பாடல்கள் குறைவு. மேற்குறித்த அகநானூறு கவிதையும் அதே அகநானூற்று செய்யுளிலும் குறிக்கப்படுகின்றன.

திருமண தினத்தன்று இனிமையான நெய்யால் ஆன சோறு சமைக்கப்பட்டது. இது உறவினர்கள் அனைவருக்கும் தாராளமாகக் கொடுக்கப்பட்டதை,

"மைப்புஅறப் புழுக்கின் நெய்க்கனி வெண்சோறு

வரையா வண்மையொடு புரையோர்ப் பேணி

புள்ளுப் புணர்ந்து இனியஆக, தெள் ஒளி

அம்கண் இருவிசும்பு விளங்கத் திங்கட்

சகடம் மண்டிய துகள்தீர் கூட்டத்து"[25] அகம்.136 (1-5)

என்னும் பாடல் அடிகளால் விற்றூற்று மூதெயினனார் என்ற சங்கப் புலவர் குறிப்பிடுகிறார். இங்ஙனம் திருமண நாளன்று பங்கெடுத்த அனைத்து மக்களுக்கும் விருந்து படைக்கப்பட்டதை அறிந்து கொள்ளலாம்.

#### 4.4.1.3 சோறு உண்ட பாத்திரங்கள்

மருத நில பாடல் ஒன்று சோறு உண்ட இலையைக் குறிப்பிடுகிறது. வாழை இலையில் உண்ணவில்லை என்பதும் ஆம்பல் இலையில் உண்டனர் என்பதும் குறிப்பிடத் தகுந்த செய்தியாகும். சோற்றோடு புளிக்கறியையும் பிசைந்து உண்டனர். இதனை,

“வேட்டம் மறந்து துஞ்சும் கொழுநர்க்குப் பாட்டி

ஆம்பல் அகல்இலை அமலை வெஞ்சோறு

தீம்புளிப் பிரம்பின் திரள்கனி பெய்து”[26] அகம்.196 (4-6)

என்னும் பாடல் அடிகள் மூலம் பரணர் என்னும் சங்கத் தமிழ்புலவர் வெளிப்படுத்துகிறார். பாணர்க்கு பாணினி உணவு இடுவதாக பாடல் அடிகள் உணர்த்துகின்றன. மருதத்திணையின் உரிப்பொருள் ஊடல். தலைவனின் பரத்தமைக் காரணமாக தலைவி ஊடல் நிகழ்த்துவாள். இச்சூழலில் அரிசி உணவு குறித்து ஒரு பாடல் உரைக்கிறது. தலைவன் தலைவியோடு சேர்ந்திருக்கும்போது சேர்த்து வைத்திருந்த அரிசி தலைவன் போனபின் சுருங்குகிறது. இதனை,

“புலத்தல் ஒல்லுமோ? - மனைகெழு மடந்தை!

அது புலந்து உறைதல் வல்லி யோரே

செய்யோள் நீங்க, சில்பதம் கொழித்து

தாம் அட்டு உண்டு, தமியர் ஆகி”[27] அகம்.316 (11-14)

என்னும் பாடல் அடிகளால் ஓரம்போகியார் குறிப்பிடுகிறார். “சில்பதம்” என்னும் சொல் இல்லத்தில் நிறைந்திருந்த அரிசி தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தால் குறைந்துள்ளதை புலவர் குறிப்பாக புலப்படுத்துகிறார்.

## 4.4 அசைவ உணவுகள்

அசைவ உணவு வகைகள் குறைவாக குறிப்பிடப்பட்டுள்ள திணை மருத திணை. பண்ட மாற்றும் முறையில் கிடைக்கப்பெற்ற மீன்களும், வயலிலும், ஆற்றிலும் கிடைக்கப் பெற்ற மீன்களும் உழவர்களுக்கு அசைவ உணவுகளாயின. அசைவங்களான விலங்குகளும் தம் உணவைப் பிற உயிரினங்களிடமிருந்து பெற்றுக் கொள்கிறது. இதுவும் இங்கு அசைவ உணவாகக் கொள்ளப்பெறும்.

“மக்களின் விருந்துணவு மிகச் சிறப்பாக நடைபெற்றது. உணவிலே விருப்பம் அதிகம். மாமிசம் உண்போரும், மரக்கறி உண்போரும் ஒத்த பெருமையுள்ளவர்களாகத்தான் கருதப்பட்டனர். பிற்காலத்தில் தான் மரக்கறி உண்டோர் உயர்ந்தோர் என்றும் மாமிசம் உண்போர் இழிந்தவர் என்ற வேற்றுமை தமிழகத்தில் தோன்றியது. இவ்வுண்மைகளை நமக்குப் பண்டைத் தமிழ் நூல்கள் உணர்த்துகின்றன. உணவு காரணமாக உயர்வு தாழ்வு பாரட்டுவது அறியாமை”[28] என்பதில் ஐயம் இல்லை.

### 4.4.2.1 மீன் உணவு

மீன் உணவு என்னும் இப்பகுதியானது மீன்களைக் கறிவைத்து தின்றும் மனிதர்களும், மீன் பிற உயிரினங்களைத் தின்று நடக்கும் நிகழ்வுகளும் இங்கு குறிக்கப் பெறுவதாகும்.

### 4.4.2.2 பாணரின் மீன் கலம்

சங்க கால தமிழர்கள் உணவுபொருட்களை இட்டு வைப்பதற்கும் உண்பதற்கும் தனித்தனி புழங்கு பொருட்களைப் பயன்படுத்தினர். அதில் ஒன்று உணவைப் பயன்படுத்தி வைத்திருக்கும் பாத்திரமாகும். பாணன் என்ற பிரிவினர் இத்தகைய பாத்திரங்களை செய்பவர்கள் பாணர் என்னும் இனம் குறித்து,

“மதுரையிலும் திருநெல்வேலியிலும் இவர்கள் தையல் வேலை செய்வர். அம்பட்டரும் வண்ணாரும் இவர் வீடுகளில் உண்ணார்கள். இவர்கள் கோவில்களுள்

நுழையலாம். மலையாள பாணர் பேய்க் கூத்தாடுவோராவர்"[29] என்று ந.சி. கந்தையா பிள்ளை குறிப்பிடுகிறார். குறுந்தொகை பாடல் ஒன்று பாணர் இதனை குறிப்பிடுவதை,

"நும்மொடு நக்க வால்வெள் எயிறே பாணர்,

பசுமீன் சொரிந்த மண்டைபோல

எமக்கும் பெரும்புலவு ஆகி"[30] குறு.169 (3-5)

என்னும் பாடல் அடியில் பாணர் என்ற சொல் பாணர் இனத்தைக் குறித்தாயிற்று. இங்கு பாண இன மக்கள் மீன் உண்பர் என்ற செய்தியை அறியலாம்.

நீர் நாய் வாளை மீனை உண்ணும் இத்தகைய ஊரையுடைய தலைவனே, தலைவனின் ஊருக்கு அடையாக கூறுவதை,

"அரில்பவர்ப் பிரம்பின் வரிப்புற நீர்நாய்

வாளை நாள் இரை பெறூஉம் ஊரன்"[31] குறு.364 (1-2)

என்னும் பாடல் அடிகள் மூலம் ஔவையார் என்ற பெண்பாற்புலவர் படம்பிடித்து விளக்குகிறார். ஆண் முதலை ஆனது தன் உடன் வாழும் பெரிய மீன்களை உண்ணும். இதனை,

"முதலைப் போத்து முழுமீன் ஆரும்

தண் துறை ஊரன் தேர் எம்

முன்கடை நிற்க' என வேட்டேமே"[32] ஐங்.5 (3-5)

என்னும் பாடல் அடிகள் சான்றாகின்றன.

மருதத்திணை நற்றிணை பாடல் ஒன்றில் தலைவி உணவு சமைப்பதைப் படம் பிடித்து காட்டப்படுகிறது. வாளை மீனை உண்ணும் வகையில் நறுக்கினாள். மேலும் உணவாக்குதல் மூலம் புகை எழும்புகிறது. இதனை,

"சிறு தாழ் செறித்த மெல் விரல் சேப்ப

வாளை ஈர்ந் தடி வல்லிதின் வகைஇ

புகை உண்டு அமர்த்த கண்ணள், தகை பெறப்

பிறை நுதல் பொறித்த சிறுநுண் பல்வியர்

அம்துகில் தலையில் துடையினள், நப்புலந்து

அட்டிலோளே, அம் மா அரிவை

எமக்கே வருகதில் விருந்தே"[33] நற். 120 (1-10)

என்னும் பாடல் அடிகள் மூலம் தென்தமிழ்புலவர் மாங்குடி கிழார் குறிப்பிடுகிறார். நெல்லை அறுக்கும் உழவர்களின் களத்தை பரணர் குறிப்பிடும்போது அவர்களின் உணவை குறிப்பிடுகிறார். இதனை,

"மணிமருள் மலர முள்ளி அமன்ற

துணிநீர் இலஞ்சிக் கொண்ட பெருமீன்

அரிநிறக் கொழுங்குறை வெளவினர் மாந்தி

வெண்ணெல் அரிநர் பெயர்நிலைப் பின்றை

இடைநிலம் நெரிதரு நெடுங்கதிர்ப் பல் சூட்டு"[34] அகம்.236 (1-5)

என்னும் பாடல் அடிகள் புலப்படுத்துகின்றன. ஊர் வருணனையில் நீர்நாய் வாளை மீனை உண்ணும் நிலை குறிப்பிடத்தக்க நிலையில் அமைகின்றது. இதனை,

"பொய்கை நீர்நாய்ப் புலவுநாறு இரும் போந்து

வாளை நாள்இரை தேடும் ஊர"[35] அகம்.386 (1-2)

என்னும் பாடல் அடிகளால் அறியலாம். இதே கருத்தை ஐங்குநுறூறு மருத திணை பாடலும் புலப்படுத்துவதை,

"பொய்கைப் பள்ளிப் புலவு நாறு நீர்நாய்

வாளை நாள் இரை பெறூஉம் ஊர"[36] ஐங்.63 (1-2)

என்னும் பாடல் அடிகளால் இக்கவிதை நீர் நிலைக்கு வருணனையாக அமைந்தது. இங்கு இடம்பெற்ற ஊர என்ற சொல் "ஊரன்" என்பதன் இடைகுறையாகும்.

#### 4.4.2.3 பண்டமாற்று முறையில் மீனின் பங்கு

மருதத்திணைப் பாடலில் பண்டமாற்று முறையில் மீனை வாங்கவும் விற்கவும் செய்தனர். எனவே உழவர் உணவில் மீன் உணவு முக்கிய பங்குவகித்தது எனலாம். மருதநிலக் கவிதைகள் ஆற்று வளத்திற்கும், நாட்டு வளத்திற்கும் அடையாளமாக மீனைக் குறிப்பிடுகின்றன. மீனைக் கள்ளிற்காக விற்கும் நிலையை நீர் உணவு என்னும் பகுதியில் காணலாம்.

காவிரி ஆற்றில் தமையரால் பிடிக்கப்பட்ட பெரிய வாளை மீனை விற்கபாணன் மகள் செல்கிறாள். செந்நெல்லோடு சிறந்த அணிகலன்களையும் பெற்றாள். இதனை,

"கடற்கரை மெலிக்கும் காவிரிப் பேரியாற்று
அறல்வார் நெடுங்கயத்து அருநிலை கலங்க
மால்இருள் நடுநாள் போகி தன்ஐயர்
காலைத் தந்த கணைக்கோட்டு வாளைக்கு
அவ்வாங்கு உந்தி, அம்சொல், பாண்மகள்
நெடுங்கொடி நுடங்கும் நறவுமலி மறுகில்
பழஞ்செந் நெல்லின் முகவை கொள்ளாள்
கழங்கு உறழ் முத்தமொடு நன்கலம் பெறூஉம் விற்கும்"[37] அகம்.126 (5-11)

என்னும் பாடல் அடிகளில் கள் விற்கும் தெருவில் சென்றாள். ஆனால் கள் வாங்காமல் செந்நெல்லைப் பெற்றாள் என்பதிலிருந்து மருதநிலத்தில் வேளாண் இல்லாத இடங்களில் மீன் பிடித்தல் தொழிலாக இருந்தது என்பதை அறியலாம். பாணர் குடியில் பிறந்த மகள் மீன் விற்க உழவர் மக்கள் இருக்கும் இடத்திற்கு வருகிறாள். மீன் விற்று, பெரும் பயற்றைப் பெறுகிறாள். இதனை,

"முள் எயிற்றுப் பாண்மகள் இன் கெடிறு சொரிந்த
அகன் பெரு வட்டி நிறைய, மனையோள்
அரிகாற் பெரும் பயறு நிறைக்கும் ஊர!"[38] ஐங்.47 (1-3)

என்னும் பாடல் அடிகளால் உணரலாம். மீன்பிடிப்பதற்குக் காரணம் மருத நிலம் நீர்வளம் உடையதாக விளங்குவதே. இதனை,

“மருத நிலத்தில் நீர் வளம் மிகுதியாதலின் மீன், நண்டு, இறால் என்னும் நீர் வாழ் உயிர்கள் அந்நில மக்களுக்கு உணவாயின”[39] என்றக் கருத்தை கரு.இராமநாத செட்டியர் வாயிலாக அறியலாம்.

மருத நில கவிதைகள் மீன் பிடிக்கும் மக்களை பாணன் என்று குறிப்பிடுகிறார்கள். இவரது மக்களை பாணன் மகள் என்று குறிக்கப் பெறுகின்றது. இதனை,

“வலைஅல் பாண்மகன் வால் எயிற்று மடமகள்

வராஅல் சொரிந்த வட்டியுள், மனையோள்

யாண்டுகழி வெண்ணெல் நிறைக்கும் ஊர!”[40] ஐங்.48 (1-3)

என்னும் பாடல் அடிகளில் மீன் விற்றதற்குப் பதிலாக வெண்ணெல் பெறப்படுகிறது. இங்கு பண்டமாற்று முறையில் உணவுப் பொருட்கள் பரிமாறப்படுகின்றன. பொருளாதார நிலையில் இதனை பண்டமாற்று வாரிய முறையில் அடக்கலாம். இதனை,

“அம்சில் ஓதி அசைநடைப் பாண்மகள்

சில்மீன் சொரிந்து பல் நெற்பெறூஉம்

யாணர் ஊர! நின் பாண் மகன்”[41] ஐங்.49 (1-3)

என்ற பாடல் அடிகளில் சில மீன்களைப் பெற்று அவற்றுக்கு ஈடாக பலவாகிய நெல்லை மருதநில தலைவிக் கொடுத்தாள் பலவகையான நெல்களைத் தலைவி கொடுத்தாள். மருத நிலத்தில் நடைபெற்ற வேளாண் தொழிலைச் செழுமையாக எடுத்துக் காட்டுகிறது. இப்பாடல் நாளும் புது வருவாய் தரும் ஊர் என்ற குறிப்பிடுவதால் நெல், அரிசி, தானியம் ஆகியவை பண்டாமற்று முறையில் கொடுக்கப்பட்டுள்ளதை அறியலாம். இது தான் சங்க கால வேளாண் வணிகம்

என்று கூறமுடியாது. புறப்பாடல்களில் இடம்பெற்ற வாணிக முறை பண்டமாற்று முறையில் இருந்து வேறாக்கப்பட்டிருந்ததை அறியலாம். மருதநில இலக்கியங்கள் குறிப்பிடும் புதுவருவாய் என்னும் சொல்லே பெரிய வாணிப முறையை குறிப்பதாக அமையலாம்.

## 4.4 நீருணவு

நீர் நிலைகள் அதிகம் குறிக்கப் பெற்ற திணையாக மருதத்திணை திகழ்கிறது. நீர்துறைகளைக் குறிப்பிடும்போது மாம்பழம், பலாப்பழம் போன்றக் கனி வகைகளைக் குறிப்பிடுகின்றது. இது நீரின் இனிமையைக் குறிப்பதற்கும் கனிகளின் வளர்ச்சியை வெளிப்படுத்துவதற்கும் துணைபுரியும் வகையில் புலவர்கள் கவிதையில் கூறியுள்ளனர்.

மருதநில கவிதைகள் நீர்நிலைகளைக் குறிக்க ஆறு, பொய்கை. பழனம், குளம், கேணி என்று குறிப்பிடப்படுகின்றன. நீர்நிலைகள் வருணனையாக அமையாமல் உள்ளுறையாகவும் அமைந்து விடுவதுண்டு. நீர் உணவுகளில் அதிகமாகக் காட்சிப்படுத்துவது கள்ளுணவாகும். கள்ளில்லாத மருத தலைவன் இல்லை என்று கூறும் அளவிற்கு கள்ளின் பழக்கம் குறித்து மருத நிலக் கவிதைகள் பறைசாற்றுகின்றன. எனவே இங்கு இரண்டு நிலைகளில் நீர் உணவைக் காணலாம்.

1. நீர்நிலைகள்
2. கள்ளுணவு

என்பனவாகும்.

### 4.4.3.1 நீர்நிலைகள்

நீர்கள் அமையும் உறைவிடமே நீர்நிலைகள் ஆகும். பொய்கை மருத நில நீர்நிலைகளுள் ஒன்று. பொய்கையைக் குறித்த பாடல்கள் பெரும்பாலும் மருதநில சார்ந்தும் சிறுபான்மை குறிஞ்சி நிலம் சார்ந்தும் பயின்று வந்துள்ளன. புனல் என்னும் சொல் ஆற்று நீரைக்குறிப்பதாக உணரலாம். அகநானூற்று

மருதத்திணைப் பாடல் காவிரி, பழனம் என்ற இரண்டு சொற்களை நீர்நிலைக்கு ஒப்பாக குறிப்பிடுவதை,

"மழை வளம் தரூஉம் மா வண் தித்தன்
பிண்ட நெல்லின் உறந்தை ஆங்கண்
கழை நிலை பெறாஅக் காவிரி நீத்தம்"[42] அகம்.6 (4-6)

என்னும் பாடல் அடிகளில் காவிரி ஆற்றையும், முதல் அடியில் மழை வெள்ளத்தையும் குறிப்பிட்ட பரணர் கவிதையின் இறுதி நிலைக்கு செல்லும்போது பழனம் என்னும் சொல்லையும் கையாளுவதை,

"சுடர்ப் பூந்தாமரை நீர் முதிர் பழனத்து
அம் தூம்பு வள்ளை ஆய் கொடி மயக்கி
வாளை மேய்ந்த வள் எயிற்று நீர் நாய்"[43] அகம்.6 16-18)

என்னும் பாடல் அடிகளால் பழனம் என்ற சொல் மருத நீர்நிலைகளில் ஒன்றைக் குறித்ததாகும். நீர் அமைந்த வயல்களையும் பழனம் என்னும் சொல் குறிக்கும்.

"கழுநீர் மேய்ந்த கருந்தாள் எருமை
பழனத் தாமரைப் பனிமலர் முணைஇ
தண்டு சேர் மள்ளரின் இயலி, அயலது
குன்று சேர் வெண் மணல் துஞ்சும் ஊர"[44] நற்.260 (1-4)

என்னும் பாடல் அடிகளில் பழனத் தாமரை என்று பயின்று வந்துள்ளதால் பழனம் என்பது வயல் சார்ந்த குளங்களையோ, நீர்நிலைகளையோ குறித்தன என்று ஐயமின்றி உரைக்கலாம்.

### 4.4.3.1.1 **ஆறு**

மருதநில நீர் நிலைகளுள் ஆறுகள் குறிப்பிடத்தக்க பங்கை வகிக்கின்றன. மழை அதிகமாக பெய்தால் அந்நீர் ஆற்றில் கலக்கும் போது உணவு பொருட்களையும், பிற பொருட்களையும் மருத நிலத்தில் கொண்டு சேர்க்கும்.

ஆற்று நீரை வருணிக்கும் போது அது தலைவன் ஊரின் நீர் வளத்தைச் சுட்டுவதாக அமையப்பெறுகிறது. இதனை,

"கூதிர் ஆயின் தண் கவிழ் தந்து

வேனில் ஆயின் மணி நிறம் கொள்ளும்

யாறு அணிந்தன்று, நின் ஊரே!"[45] ஐங்.45 (1-3)

என்னும் பாடல் அடிகளில் கூதிர், வேனில் என்று இரண்டு பெரும்பொழுது பயின்று வந்துள்ளதை அறியலாம். மழை பெய்தால் ஆற்று நீர் கலங்கி இருக்குமென்றும், வேனில் காலத்தில் தெளிந்த நீராக இருக்கும் என்று புலவர் உரைக்கிறார். விழா நடக்கும் தெருவை வருணிக்கும் புலவர்க்கு ஆற்றின் நினைவு வருகிறது. எனவே ஆற்றை உவமைப்படுத்துகிறார்.

"கண்ணி கட்டிய கதிர அன்ன

ஒண் குரல் நொச்சித் தெரியல் சூடி

யாறு கிடந்தன்ன அகல் நெடுந் தெருவில்"[46] நற்.200 (1-3)

என்னும் பாடல் அடிகள் நயமுற எடுத்துக் காட்டுகின்றன.

பொய்கை, ஆற்றுநீர் என்பது இரண்டு வெவ்வேறு நீர்நிலைகள் பொய்கை என்பது ஆழமான நீர்நிலை என்றும் கவிதையில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. ஆறு என்பது பொய்கையை விடச் சிறியதாகும். இங்ஙனம் மருத நில நீர் நிலைகளைச் சித்தரிக்கிறது. பின்வரும் குறுந்தொகை கவிதை,

"ஊர்க்கும் அணித்தே பொய்கை; பொய்கைக்குச்

சேய்த்தும் அன்றே சிறுகான் யாறே

இரைதேர் வெண்குருகு அல்லது யாவதும்"[47] குறு.113 (1-3)

என்னும் பாடல் அடிகளால் அறியலாம்.

#### 4.4.3.1.2 அருவி

நீர் நிலைகளுள் குளிப்பதற்கு என்று சிறந்த நீர் நிலை எதுவென்றால் அது அருவி ஆகும். குற்றால அருவி, ஐந்தருவி, பாலருவி, தேனருவி என்று வகைப்படுத்தலாம். இங்கு மழைக்கு ஒப்புமைப்படுத்த அருவியை உவமையாக்குகிறார். அதன் ஆற்று நீரை காட்சிப்படுத்துகிறார். இது தலைவனின் நாட்டு வளத்தைக் குறிப்பிடுவதாகவே அமைகிறது. இதனை,

"அருவி அன்ன பருஉறை சிதறி

யாறு நிறை பகரும் நாடனைத் தேறி

உற்றது மன்னும் ஒருநாள் மற்று அது"[48] குறு.271 (1-3)

என்னும் பாடல் அடிகளால் புலவர் அழிசி நச்சாத்தனார் கூறியுள்ளார். மற்றொரு அகப்பாடல் ஒன்றில் அருவி நீர் மருத நிலத்தில் பயின்று வந்துள்ளதை,

"அர வாய் அன்ன அம்முள் நெடுங்கொடி

அருவி ஆம்பல் அகல் அடை துடக்கி

அசைவரல் வாடை தூக்கலின், ஊது உலை"[49] அகம்.96 (5-7)

என்னும் பாடல் அடிகள் சான்றளிக்கின்றன.

#### 4.4.3.1.3 புனல்

புனல் என்ற சொல் நீரை குறிக்கும் சொல்லாகும். காப்பியங்களில் புனலாடுதல் என்பது தவிர்க்க முடியாத உறுப்பாகி விட்டது. தலைவன் நாட்டில் புனல் வெள்ளத்தை வருணிக்கும் போது அது நாட்கள் அழகு என்று உரைக்கப்படுவதை,

"முள்ளி வேர் அளைக் களவன் ஆட்டி

பூக் குற்று, எய்திய புனல் அணி ஊரன்"[50] ஐங்.23 (1-2)

என்னும் பாடல் அடிகளால் அறியலாம். புனல் என்னும் சொல் ஆற்று நீரைக் குறிக்கும். இதனை,

“நாள், கயம் உழக்கும் பூக் கேழ் ஊர

வரு புனல் வையை வார்மணல் அகன்துறை

திரு மருது ஓங்கிய விரி மலர்க் காவில்”[51] அகம்.36 (8-10)

என்னும் பாடலடிகளால் நக்கீரர் பதிவு செய்கிறார். வயல் அருகே காணப்படும் நீர்களையும் புனல் என்னும் சொல்லால் குறிப்பதை,

“புது வறம் கூர்ந்த செறுவில் தண்ணென

மலி புனல் பரந்தந்தா அங்கு

இனிதே தெய்ய, நிற் காணுங்காலே”[52] நற்.230 (8-10)

என்னும் பாடல் அடிகளால் சங்கப் புலவர் ஆலங்குடி வங்கனார் குறிப்பிட்டுள்ளார். இங்கு மருத நில தலைவனின் குண நலத்திற்கு இணையாக பயின்று வந்துள்ளது. மருத நிலத் தலைவன் குண நலத்திற்கு இணையாக பயின்று வந்துள்ளது. மருத நிலத் தலைவன் பரத்தையருடன் சேர்ந்து நீரில் விளையாடுகிறான். இதனையும் புனல் என்னும் சொல்லால் குறிப்பதை,

“பொழுதுக் கொண்ட கவ்வையின் பூ அணிப் பொலிந்த நின்

வதுவை அம் கமழ் நாற்றம் வைகறைப் பெற்றதை

கனலும் நோய்த் தலையும், நீ கனங் குழையவரொடு

புனல் உளாய் என வந்த பூசலின் பெரிது அன்றோ”[53] கலி.66 (11-14)

என்னும் பாடல் அடிகளால் தெள்ள தெளிவாக உணரலாம். இங்கு தலைவன் பரத்தையர் உறவை விளக்கும் பொருட்டு புனல் என்னும் சொல் கையாளப்பட்டுள்ளது எனலாம்.

காவிரி என்னும் ஆறும் மருதநில நீர்நிலைகளில் ஒன்றாகப் பதிவுச் செய்யப்பட்டுள்ளது. காவிரி ஆற்றை தலைவன் மார்பை உவமிக்கிறார். இங்கு தலைவியின் உள்ளமே முக்கியத்துவம் பெறுவதை,

"மகிழ் மிகச் சிறப்ப மயங்கினள் கொல்லோ,

யாணர் ஊர நின் மாண் இழை அரிவை

காவிரி மலிர் நிறை அன்ன நின்

மார்பு நனி விலக்கல் தொடங்கியோளே"[54] ஐங்.42 (1-4)

என்னும் பாடல் அடிகளில் மிகுதியான வெள்ளம் என்று பொருள்பட மலிர் என்னும் சொல் பயின்று வந்துள்ளது. காவிரி ஆறு பெரிய நீர்த்துறையாக காட்சிப்படுத்தியிருப்பதை,

"வாரல்எம் சேரி; தாரல் நின் தாரே

அலரா கின்றால் பெரும! காவிரி"[55] குறு.258 (1-2)

என்னும் பாடல் அடிகளால் அறியலாம். காவிரி ஆற்றின் மூலம் அகநானூறு மருத பாடல் மூலம் வரலாற்று செய்தி ஒன்று பெறப்படுகிறது. பழையன் என்னும் பெயர் கொண்ட சோழ மன்னனின் படைத்தலைவன் குறித்த செய்தியாகும். இதனை,

"இழை அணி யானைச் சோழர் மறவன்

கழை அளந்து அறியாக் காவிரிப் படைப்பை

புனல் மலி புதவின், போஞர் கிழவோன்"[56] அகம்.326 (9-11)

என்னும் பாடல் அடிகள் மூலம் சங்கப் புலவர் பரணர் பதிவுச் செய்துள்ளார்.

#### 4.4.3.1.4 பழம்

பழங்களைக் குறித்த பதிவுகள் நீர் நிலைகள் சார்ந்தே பதிவு செய்யப்பட்டுள்ளன. இங்கு ஆழமான நீர் நிலையைக் குறிக்க இலஞ்சி என்னும் சொல்லைப் புலவர் கையாளுவதை,

"அரில்பவர்ப் பிரம்பின் வரிப்புற விளை கனி

குண்டு நீர் இலஞ்சிக் கெண்டை கதூஉம்

தண்துறை ஊரன்"[57] குறு.91 (1-3)

என்னும் பாடல் அடிகள் மூலம் சங்க பெண்பாற்புலவர் ஔவையார் பதிவுச் செய்துள்ளார். வயலின் அருகே அமைந்த பழங்கள் நிறைந்த மரத்தில் வாளை மீன்கள் தொங்கியிருந்த பழங்களைக் குதித்து உண்ணும் இதனை,

"கழனி மாஅத்து விளைந்து உகு தீம்பழம்

பழன வாளை கதூஉம் ஊரன்"[58] குறு.8 (1-2)

என்னும் பாடல் அடிகள் சான்று பகறுகின்றன. கனிகளை நீர்த்துறையோடு கூறுகின்ற மரபு மருத திணையின் சிறப்பு எனலாம். பெண் வாளை மீன் தேன் போன்ற இனிய மாம்பழத்தை கொத்தித் தின்று உண்ணும். இதனை,

"கணைக் கோட்டு வாளைக் கமஞ்சூல் மடநாடு

துணர்த் தேக் கொக்கின் தீம்பழம் கதூஉம்

தொன்று முதிர் வேளிர் குன்றூர்க் குணாது"[59] குறு.164 (1-3)

என்னும் பாடல் மூலம் மாங்குடி மருதன் என்ற புலவர் படம்பிடித்துக் காட்டுகிறார். கனி முற்றும் போது கொப்புகளில் இருந்து கீழே காணும் நீர் நிலைகளில் "துடும்" என்னும் ஒலியுடன் விழும். இங்கு நீர் நிலை பொய்கை என்று குறிப்பிடப்படுகிறது.

"நறு வடிமா அத்து விளைந்து உகு தீம்பழம்

நெடுநீர்ப் பொய்கைத் துடுமென விழுஉம்

கைவண் மத்தி கழாஅர் அன்ன"[60] ஐங்.61 (1-3)

என்னும் பாடல் அடிகளில் மத்தி என்பாளின் நீர்வளம் குறிப்பிடப்படுகிறது.

#### 4.4.3.1.5 நீர் உண்ணும் துறை

மக்கள் குடிக்க எடுக்கும் நீர் நிலைகளை நீர் உண்ணும் துறை என்று அழைத்தனர். இது குறித்து விளக்கும் கவிதை அருகியே பயின்று வந்துள்ளது. ஊரார் உண்ணும் துறை என்று உரையாசிரியர் விளக்கம் கொடுக்கிறார். கவிதையில் "உண்துறை" என்றே குறிப்பிடப்பட்டுள்ளதை,

"உண்துறை அணங்கு இவள் உறை நோய் ஆயின்

தண்சேறு களவன் வரிக்கும் ஊரற்கு

ஒண் தொடி நெகிழச் சாஅய்"[61] ஐங்.28 (1-3)

என்னும் பாடல் அடிகளால் சங்கத் தமிழ்ப் புலவர் ஓரம்போகியார் பதிவுச் செய்துள்ளார். இதன் மூலம் பொதுவான நீர்நிலைகள் மக்களின் நீருணவிற்கும் பிற உணவிற்கும் பயன்பட்டதை அறிந்து கொள்ளலாம்.

### 4.4.3.1.6 பால்

நீர் உணவுகளில் பால் குறித்தான குறிப்புகள் காணப்படுகின்றன. இதில் தாய்ப்பாலும், பசுவின் பாலும் குறிக்கப் பெறுகின்றன என்பது முக்கியமான செய்தியாகும். தலைவன் பரத்தையிடம் செல்கிறான். தலைவி ஊடல் செய்கிறாள். குழந்தை அழுகிறது. அப்போது தலைவி குழந்தைக்குப் பால் ஊட்ட மறுக்கிறாள். அப்பால் ஆனது முடைநாற்றம் வீசுகிறது. இதனை,

"நெய்யும் குய்யும் ஆடி, மெய்யொடு

மாசு பட்டன்றே கலிங்கமும், தோளும்,

திதலை மென முலைத் தீம்பால் பிலிற்ற

புதல்வற் புல்லிப் புனிறு நாறும்மே"[62] நற்.380 (1-4)

என்னும் பாடல் அடிகள் புலப்படுத்துகின்றன. தலைவியின் பிள்ளை வீட்டின் முன் விளையாடிக் கொண்டிருந்த வேளையில் தோழியானவள் பரத்தையர் வீட்டிற்கு அழைத்துச் செல்கிறாள். தலைவி குழந்தைக்கு பால் ஊட்டும் நினைவு காரணமாக வீட்டின் வாசலில் நோக்க குழந்தை தாமதமாக தோழியுடன் வீட்டிற்குள் வருகிறது. அதற்கு முன்பே "தலைவியின் கொங்கைகளிலிருந்து பால் சுரந்து வழிகின்றது. இதனை,

"பெருந்திரு நிலைஇய வீங்குசோற்று அகன்மனைப்

பொருந்துநோன் கதவுஒற்றிப் புலம்பி யாம் உலமர

இளையவர் தழூஉ ஆடும் எக்கர்வாய் வியன் தெருவில்

விளையாட்டிக் கொண்டு வரற்கு எனச் சென்றாய்

உளைவ இலை ஊட்டல் என தீம்பால் பெருகும் அளவெல்லாம்

நீட்டித்த காரணம் என்? கேட்டீ"[63] கலி.83 (1-7)

என்னும் கலித்தொகை பாடல் அடிகள் சான்று பகர்கின்றன. தலைவனின் பரத்தமையை வெளிப்படுத்தும் பாடல்களுள் தாய்ப்பால் கசிந்து வெளியேறும் பொருட்டு வெளிப்படுத்தப்படுகின்றன. இதனை,

"உறுவளி தூக்கும் உயர்சினை மாவின்

நறுவடி ஆர்இற் றவைபோல் அழியக்

கரந்தஎன் மென்முலைப் பால்பழுதாக - நீ

நல்வாயில் போததந்த பொழுதினான், எல்லா

கடவுட் கடிநகர் தோறும் இவனை

வலங்கொளீஇ வா" எனச் சென்றாய் விலங்கினை

ஈரம்இலாத இவன் தந்தை பெண்டிருள்

யார்இல் தவிர்ந்தனை? கூறு"[64] கலி.84 (1-9)

என்னும் பாடல் அடிகள் பரத்தையர் தலைவன் உறவை வெளிப்படுத்துகின்றன. மாவடு பாலின் கசிதலும் உவமையாக படிந்து கவிதைக்கு அழகு ஊட்டுகிறது. பால் வீட்டில் செல்வம் என்று அடையாளம் படுத்தும் அளவிற்குக் (கலித்தொகை) அமைகின்றது. இங்கு கிண்ணத்தில், கலத்தில் அமையப் பெற்ற பாலை புலவர் குறிக்கிறார். குழந்தை மட்டுமின்றி தலைவனுக்கும் பால் அருந்தும் பழக்கம் உள்ளதையும் இப்பாடல் தெளிவாகிறது.

### 4.4.3.1.7 எருமை பால்

எருமை பாலின் பயன்பாடு சங்க இலக்கியத்திலேயே பதிவு செய்யப்பட்டுள்ளமை அறியலாம். ஊரிலுள்ள இளம் சிறுவர்கள் எருமையின் பாலை கறந்து கொள்வர். இதனால் கன்றுகளைத் தொழுவத்தில் விட்டு வைப்பர். இதனை,

“மன்ற எருமை மலர் தலைக்காரான்

இன் தீம் பாற்பயம் கொண்மார், கழன்று விட்டு,

ஊர் குறுமாக்கள் மேற்கொண்டு கழியும்

பெரும் புலர் விடியலின் விரும்பிப் போத்தந்து”[65] நற்.80 (1-4)

என்னும் பாடல் அடிகளால் சங்க புலவர் பூதன் தேவனார் புலப்படுத்தியுள்ளார். ஐங்குநுறூறு மருத பாடல் ஒன்றில் எருதுகள் எண்ணிக்கையில் மிகுவனவாக பால் பெருகுவதாக என்று அதன் அவினி வாழ்த்தப் பெறுகிறான். இதனை,

“வாழி ஆதன், வாழி அவினி!

பால் பல ஊறுக! பகடு பல சிறக்க!

என வேட்டோளே, யாயே; யாமே”[66] ஐங்.3 (1-3)

என்னும் பாடல் வழி அறியலாம்.

### 4.4.3.2 கள்ளுணவு

கள்ளுண்ணாத ஐந்திணைகள் இல்லை என்று உரைக்கும் அளவிற்கு சங்க இலக்கியத்தில் கள்ளுணவிற்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளதாக அறிய முடிகின்றது. தேறல், நறவு, நறா, தெளிவு, கள் என்று பல சொற்களில் மருத நில கவிதைகளில் கள் இடம்பெற்றுள்ளது. நீருணவில் “கள்” சிறப்பிக்கப் பெற்றுள்ளது என்று கூறலாம். கள் குறித்து அகநானூற்று மருததிணைப் பாடல் மிகுதியான பதிவை செய்துள்ளது.

#### 4.4.3.2.1 நறவு

நறவு என்னும் சொல் கள் என்னும் பொருளைக் குறித்த சொல்லாகும். கலித் தொகைப் பாடல் நறவு என்னும் சொல்லைக் கையாளுகிறது. இங்கு தேவர் அசுரர் என்ற நிலையில் விமர்சனம் செய்யும் வகையில் தேவர்கள் கள்ளை அருந்த மாட்டார்கள். அசுரர்கள் கள்ளை உண்பார்கள். இதனை,

“நறவினை வரைந்தார்க்கும் வரையார்க்கும் அவை எடுத்து

அறவினை இன்புறூஉம் அந்தணர் இருவரும்

திறம் வேறு செய்தியின் நூல் நெறி பிழையாது

குழவியைப் பார்த்து உறூஉம் தாய் போல் உலகத்து”[67] கலி.99 (1-4)

என்னும் பாடல் அடிகளில் நீதிநூற்கள் நெறிபடி ஆட்சி அமைதல் என்னும் கருத்தும் பெறப்படுகிறது.

மீன் பிடித்து, விற்று வாழும் பாணர் குலம். பாணர் மகள் தூண்டிற் கோலால் மீன் பிடிக்கிறாள். இம்மகளின் தந்தை கள் அருந்தி மயங்கி இருக்கிறான். மீன் சுட்டு ஊட்டும் நிலையை,

“நாண் கொள் நுண்கோலின் மீன்கொள் பாண்மகள்

தான்புனல் அடைகரைப் படுத்த வராஅல்

நார் அரி நறவு உண்டு இருந்த தந்தைக்கு

வஞ்சி விறகின் சுட்டு வாய் உறுக்கும்

தண்துறை ஊரன் பெண்டிர்”[68] அகம்.216 (1-5)

என்னும் பாடல் அடிகள் மூலம் ஐயூர் முடவனார் பதிவு செய்கிறார். பண்டமாற்று முறையில் மீனை விற்கும் நிலையை கள் மிக்க தெருவில் நடந்த நிலையை அகநானூற்று பாடல் சுட்டுகிறது. கள்ளின் பெருக்கத்தால் நாட்டுவளம் சித்தரிக்கப் பெறுகிறது. நறவு என்னும் சொல் பயின்று வந்தபோது அது கரிகால் வளவனின் “வெண்ணி வாயில்” என்னும் ஊரைப் பறைச் சாற்றுகிறது. இதனை,

“தாதுஆர் காஞ்சித் தண்பொழில் அகல்யாறு

ஆடினை என்ப, நெருநை: அலரே

காய்சின மொய்ம்பின் பெரும்பெயர்க் கரிகால்

ஆர்கலி நறவின் வெண்ணி வாயில்”[69] அகம்.246 (6-9)

என்னும் பாடல் அடிகள் மூலம் பரணர் தெளிவுபடுத்துகிறார். மீன்பிடித்தல் மட்டுமின்றி விலங்குகளை வேட்டை ஆடுதலும் பாணர் குலத் தொழிலாகும். இதனை நறவோடு தொடர்பு படுத்தி விளக்குவதை,

“நெடுங்கொடி நுடங்கும் நறவுமலி பாக்கத்து

நாள்துறைப் பட்டமோட்டு இரு வராஅல்

துடிக்கண் கொழுங்குறை நொடுத்து, உண்டு ஆடி”[70] அகம்.196 (1-3)

என்னும் பாடல் அடிகளில் கள்ளுண்ட மயக்கம் தெளிவாக சித்தரிக்கப்பட்டுள்ளதை அறியலாம். தலைவன் பரத்தையரிடம் தொடர்பு கொண்டுவிட்டு தம் இல்லம் வருகிறான். அங்கு தலைவி ஊடல் கொள்கிறாள். தலைவன் பரத்தையரை மணந்து கொணட செய்தி பழி சொல்லாக கேட்கிறது. இது பாண்டியன் நெடுஞ்செழியன் போரில் வென்றதை விட அதிக ஒலி அளவில் சொல்லப்படுகிறது என்று தலைவி கூறும் போது வெற்றி களிப்பில் பாண்டிய மன்னனின் வீரர்கள் கள் அருந்தியதை விளக்குகிறது. இதனை,

“கொய் சுவல் புரவிக் கொடித் தேர் செழியன்

ஆலங்கானத்து அகன் தலை சிவப்ப

சேரதல் செம்பயின் சினம் கெழு திதியன்

போர் வல்யானைப் பொலம் பூண் எழினி

நார் அரி நறவின் எருமையூரன்”[71] அகம்.36 (13-17)

என்னும் பாடல் அடிகள் மூலம் சங்க புலவர் மதுரை நக்கீரர் தெளிவுபடுத்துகிறார்.

### 4.4.3.2.2 தேறல்

தேறல் என்னும் சொல்லும் கள் என்னும் பொருளைக் குறிப்பதாகும். குளங்களில் அதிகமான நீராடினால் கண்கள் சிவக்கும். இதனைக் கள் அருந்துபவர்களின் கண்களை ஒப்பிட்டுச் சொல்கிறார் புலவர்.

"அகன் துறை அணிபெற, புதலொடு தாழ்ந்த
பகன்றைப் பூ உற நீண்ட பாசடைத் தாமரை
கண் பொல ஒளிவிட்ட வெள்ளிய வள்ளத்தான்
தண் கமழ் நறுந் தேறல் உண்பவள் முகம் போல"[72] கலி.73 (1-4)

என்னும் பாடல் அடிகள் சான்று பகர்கின்றன.

உண்ணும் நீர் எடுக்கும் பொருட்டு மகளிர் நீர்த்துறைக்குச் சென்றனர். நீர்நாய் வாளை மீனை வேட்டையாடும் பொருட்டு நீர் கலங்கி காணப்பட்டது. ஆதலால் அங்கு மகளிர் நீர் கொள்ளாமல் கள்ளைக் குடித்து கணவர்களின் பரத்தையர் ஒழுக்கத்தை மொழிந்து கூத்தாடுவார்கள். இதனை,

"குழற் கால் சேம்பின் கொழுமடல் அகல் இலைப்
பாசிப்பரப்பில் பறழொடு வதிந்த
உண்ணாப் பிணவின் உயக்கம் சொலிய
நாள் இரை தரீஇய எழுந்த நீர் நாய்
வாளையொடு உழப்ப துறை கலுழ்ந்த மையின்
தெண் கட் தேறல் மாந்தி, மகளிர்
நுண் செயல் அம்குடம் இரீஇ"[73] அகம்.336 (1-7)

என்னும் பாடல் அடிகள் மூலம் பாவை கொட்டிலார் என்னும் புலவர் படம்பிடித்துக் காட்டுகிறார்.

மருதநில உழவர்கள் நெற்போரைப் பிரித்து விட்டனர். பிரித்த வைக்கோற் புல்லின் தூசிகள் பறந்து உப்பளத்தில் வீழ்ந்தது. இதனால் சினந்த நுளையர்கள் வயல் உழவருடன் போரிட்டனர். இதனைக் கண்ட மருத நில மக்களின் முதியவர்கள் போரை விலக்கி கள் தெளிவை நுளையர்களுக்கு அளித்தனர். இதனை,

"தீம் பொழி வெள் உப்புச் சிதைதலின் சினைஇ
கழனி உழவரொடு மாறு எதிர்ந்து, மயங்கி

இருஞ் சேற்று அள்ளல் எறி செருக்கண்டு

நரை மூதாளர் கை பிணி விடுத்து

நனை முதிர் தேறல் நுளையர்க்கு ஈயும்

பொலம் பூண் எவ்வி நீழல் அன்ன"[74] அகம்.366 (7-12)

என்னும் பாடல் அடிகள் புலப்படுத்துகின்றன்.

#### 4.4.3.2.3 நறா

நறவு என்னும் சொல்லில் உகரம் கெட்டு அகரம் ஆகாரமாக மாறும்பொழுது நறா வாக கவிதையில் பயின்று வரும் கலித்தொகை பாடல் ஒன்றில் இச்சொல் கள் என்னும் பொருளில் கையாளப்பட்டுள்ளது. இதனை,

"முத்து ஏர் முறுவலாய் நம் வலைப் பட்டது ஓர்

புத்தி யானை வந்தது, காண்பான் யான் தங்கினேன்

ஒக்கும்

அவ் யானை வனப்பு உடையத்தாகவும் கேட்டேன்;

அவ் யானை தான் கண்ண நீறு ஆடி, நறுநறா நீர் உண்டு"[75]

கலி.97 (6-10)

என்னும் பாடல் அடிகளில் யானை நறுமணம் மிக்க கள்ளை அருந்தியதைக் காண்கிறோம்.

#### 4.4.3.2.4 கள்

கள் என்னும் சொல்லையும் மருதத்திணைக் கவிதையைப் படைத்த புலவர்கள் பயன்படுத்தியுள்ளனர். கள் என்பது பனைக் கள்ளையும் குறிப்பதாகும். நீர்த்துறையில் பனங்கள்ளின் ஒழுக்கு காணப்படும். அதனை யாமை என்னும் விலங்கு குடித்து களிப்புடன் வயல்களுக்குச் செல்லும். இதனை,

"பிணங்கு அரில் வள்ளை நீடுஇலைப் பொதும்பில்

மடிதுயில் முனைஇய வள்உகிர் யாமை

நொடி விடு கல்லின் போகி அகன்துறைப்

பகுவாய் நிறைய நுங்கின் கள்ளின்

நுகர்வோர் அருந்து மகிழ்வு இயங்கு நடையொடு”[76] அகம்.256 (1-5)

என்னும் பாடல் அடிகளால் அறியலாம்.

பகன்ற கொடியின் வெள்ளை நிற மலர் கருமையான கள் மணமில்லாமல் இருப்பது போல் காணப்படுகிறது. என்பதனை,

“நீரின் பிரியாப் பரூஉத் திரி கடுக்கும்

பேர் இலைப் பகன்றைப் பொதி அவிழ் வான்பூ

இன்கடுங் கள்ளின் மணம் இல கமழும்

புன்கண் மாலையும் புலம்பும்”[77] குறு.330 (3-5)

என்னும் பாடல் அடிகள் சான்று பகர்கின்றன. இங்கு கள் பூவிற்கு உவமையாக பயின்று வந்துள்ளது. உழவர்கள் வேலைப் பார்க்கும் போது கள் அருந்துபவர். கரும்பினால் வயலுக்கு வேலி அமைப்பர். இதனை,

“வெள்ளி வெண்தோடு அன்ன, கயல் குறித்து

கள் ஆர் உவகைக் கலி மகிழ் உழவர்

காஞ்சி அம் குறுந் தறி குத்தி, தீம்சுவை

மென் கழைக் கரும்பின் நன் பல மிடைந்து”[78] அகம்.346 (4-7)

என்னும் பாடல் அடிகள் புலப்படுத்துகின்றன.

கள் என்பதை வழிபாட்டு பொருட்களுள் ஒன்றாக அடக்குவது சிறுதெய்வ வழிபாட்டில்தான். எல்லைப்புறக் கடவுளான காளி, மாடன், முனி முதலிய தெய்வங்களுக்கு பலிக்குரிய உணவாக கள், கிடா ஆகியவை வைக்கப்பட்டிருக்கும். இங்கு மருத நில கவிதையில் முருகக் கடவுளுக்குக் கள் வழிபாடு செய்வதை,

“பொய்தல் ஆடிப் பொலிக! என வந்து
நின் நகர்ப் பிழைத்த தவறோ பெரும!
கள்ளும் கண்ணியும் கையுறையாக
நிலைக் கோட்டு வெள்ளை நால் செவிக் கிடாஅய்
நிலைத்துறைக் கடவுட்கு உள்ப்பட ஓச்சி”[79] அகம்.156 (11-15)

என்னும் பாடல் அடிகள் சான்று பகருகின்றன. எனவே சங்க காலத்தில் முருகனுக்கு கள் வழிபாடு நிகழ்த்தப்பட்டுள்ளதற்கு இப்பாடல் சான்றாக அமைகிறது. கள்ளை விருந்தோம்புதல் பொருட்டும் கொடுப்பார். வேள் எவ்வி என்னும் மன்னன் பகைவரை அழித்ததன் பொருட்டு “அரிமணவாயில் உறத்தூர்” என்னும் இடத்தில் அம்மன்னன் கள்ளோடு பெருஞ்சோற்றையும் உணவாக அளித்தான் என்பதை,

“வாய் வாள் எவ்வி ஏவல் மேவார்
நெடுமிடல் சாய்த்த பசும்பூண் பொருத்தலர்
அரிமண வாயில் உறத்தூர் ஆங்கண்
கள்ளுடைய பெருஞ்சோற்று எல் இமிழ் அன்ன”[80] அகம்.266 (11-14)

என்னும் பாடல் அடிகளால் பரணர் விளக்குகிறார். பரத்தையர் மகிழ்ச்சியை உண்டாக்கும் பொருட்டு கூத்தை நிகழ்த்தினர். அவர்கள் அழைக்காமலேயே தலைவன் காண வந்து விட்டான். இது தலைவிக்கு ஊடலை ஏற்படுத்திற்று. பரத்தை பெண் ஒருத்தி அதை என்னும் மன்னன் கள்ளுண்ட நிகழ்வை பெருநர்க்கு உரைக்கிறார். அம்மன்னனின் பொருநர் வைத்திருக்கும் மறை ஒலி போல் பெண்டிர் பொறாமையால் இகழ்வார். இதனை,

“மண் கனை முழவொடு மகிழ் மிகத் தூங்க
தண் துறை ஊரன் எம் சேரிவந்தென
இன் கடுங் கள்ளின் அஃதை களிற்றோடு
நன் கலன் ஈயும் நாள் மகிழ் இருக்கை”[81] அகம்.76 (1-4)

என்னும் பாடல் அடிகள் மூலம் சங்க புலவர் பரணர் வெளிப்படுத்துகிறார்.

## 4.5 தொகுப்புரை

சங்க இலக்கியத்தில் பயின்று வந்த மருதத்திணை பாடல்களின் மொத்த எண்ணிக்கை என்பது இருநூற்றி ஐம்பத்தி இரண்டு. இப்பாடல்களை அடிப்படையாக்கி ஆய்வு செய்தபோது கிடைத்த முடிவுகளே இங்கு கொடுக்கப்பட்டுள்ளன.

உணவு உற்பத்தி முறை என்பது குறிஞ்சி நிலக் கவிதைகளில் காணப்படுமாயினும் முழு நிறைவாக காட்சிப்படுவது மருதத்திணையில்தான். வேளாண் நிலமாக காட்சி அளிப்பது மருததிணையின் நிலம் ஆகும். காடுகளை அழித்து சீர்படுத்தியதை முல்லை நில கவிதைகள் படம்பிடித்துக் காட்டுகின்றன. அதன் தொடர்ச்சியாக மருத நிலத்தைக் காணலாம். நெல் விதைத்தல், நெல் விளைதல், நெல் அறுத்தல், அரிசி ஆக்குதல், விற்றல் என அதன் படி நிலைகளை மருதத் திணைக் கவிதைகள் புலப்படுத்துகின்றன. எருமைகளை வேளாண்மைக்கு பயன்படுத்தினர் என்பது முக்கியமான செய்தியாகும். நெல்லோடு திணை, வரகு, வெண்சிறு கடுகு, அவல், கரும்பு, ஐவனநெல், வெண்ணெல், செந்நெல், கிழங்கு போன்றவற்றையும் உற்பத்தி செய்தனர் என்பதை அறியலாம்.

நெல் பண்டமாற்றுவதற்கான அடிப்படைப் பொருளாய் அமைகின்றது. சிறிய மீனை கொடுத்து பெரிய நெல்லை பாணன் மகள் ஈடாக வாங்கும் நிலையை மருதத் திணைப் பாடல்கள் விளக்குகிறது. இதன் மூலம் நாட்டிற்கு வளமாகவும், வீட்டின் செல்வமாகவும் அடையாளமாக அமைகிறது. வழிபாட்டு சடங்குகளில் நெல் பயன்பட்டுள்ளதை அறிந்துக் கொள்ள முடிகிறது.

இறைச்சி உணவை அதிகமாக உழவர்கள் உட்கொள்ளவில்லை. மீன் உழவர் உணவில் முக்கிய பங்கு வகித்தது எனலாம். வாளை மீனை பதப்படுத்தி நறுக்கி வேக வைக்கும் சூழலை நோக்கும் போது சிறந்த உணவு தயாரிப்பாளராக மருதத் திணை தலைவி சுட்டப்படுகிறாள். வயல்களில் மீன்கள் தாரளமாக இருந்தன. அவற்றை செந்நாய்கள் உண்ண வரும். குறிப்பாக, வாளை மீனின்

உணவு குறித்து அதிகம் பேசப்பட்டுள்ளது. முருகப் பெருமானுக்குக் கிடா வெள்ளாட்டு கிடா வைத்து வழிபாடு நடந்ததை மருதத்திணைப் பாடல்கள் படம்பிடித்துக் காட்டுகின்றன.

விலங்குகள் வேட்டையாடி கிடைத்த தசை உணவுகளை மருத நில பாணர்கள் பயன்படுத்தினர். பாணர் என்னும் மக்கள் மீன் பிடித்தலை முக்கியத் தொழிலாக கொண்டனர். உபரி தொழிலாக வேட்டையாடுதலையும் கொண்டனர். பண்டமாற்று உணவுப் பொருட்களில் மீன் முக்கியமான இடத்தைப் பிடித்தது. “சோறுடன் சேர்ந்த இறைச்சி கறியை உண்ட நிகழ்வு சில பாடல்களிலேயே பயின்று வந்துள்ளன்.

நீர் நிலைகளில் காணப்பட்ட மரங்களிலிருந்து பழங்கள் கனிந்து இருந்தன. அவற்றை நீர் வாழும் உயிரினங்களில் ஒன்றான மீன் கவ்வி உண்ணும் பொய்கை ஆறு, அருவி, பழனம், காவிரி, நீர் உண்ணும் துறை ஆகிய நீர் நிலைகளை மருதத் திணைக் கவிதைகள் குறிப்பிடுகின்றன. பழனம் என்னும் நீர்நிலை வயலை ஒட்டி பயின்று வந்துள்ளதை அறிய முடிகிறது. பொய்கை என்பது ஆழமான நீர்நிலையாகும். இலஞ்சி என்னும் சொல் வயலையும், நீரையும் சேர்த்து விளக்கும் பெயராகும்.

நீர் உணவில் எருமைப் பால், தாய்ப்பால், கள் இம்மூன்றும் முக்கிய இடத்தைப் பிடித்துள்ளது. மத்தி, கட்டி, வெளியன், தீத்தன், நெடுஞ்செழியன், கரிகாலன், பாண்டியன் ஆகிய மன்னர்களின் வரலாற்று குறிப்புகளும் அடங்கியுள்ள வளமான பாடல்களாக மருதத்திணைக் கவிதைகள் திகழ்கின்றன என்று கூறினும் ஐயமில்லை.

மருதத் திணையில் மக்களின் பழக்க வழக்கங்கள் விருந்தோம்பல் செய்திகள், அரிசி, தானியம், நீர் உணவுகள் பற்றிய செய்திகள் இடம் பெற்றன. விருந்தோம்பல் விழாவில் உயர்வு தாழ்வுயின்மை இல்லை என்பதை அறியலாம். நானிலம் அடுத்த நிலமான பாலை நிலத்தில் விருந்தோம்பல், உணவு பழக்க

வழக்கங்கள், ஆறலைக் கள்வர்கள் பற்றிய செய்திகளை அடுத்த இயலில் விளக்கமாக காணலாம்.

## குறிப்புகள்

1. புலவர் கருணாநிதி, தொல்காப்பியம், நூ.4, ப.7
2. ச.வே.சு. (ப.ஆ), தொல்காப்பியம், நூ.8, ப.356
3. புலவர் கருணாநிதி, தொல்காப்பியம், நூ.18, ப.10
4. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.46 (1-6), ப.256,
5. முக்கூடற்பள்ளு, பா. 115, பக். 125, 126
6. கா.சுப்பிரமணியன், சங்ககாலச் சமுதாயம், ப.15
7. அ.தெட்சிணாமூர்த்தி (ப.ஆ), ஐங்குறுநூறு, பா.1 (1-6), ப.5
8. மு. சண்முகம் பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, பா.53 (1-4), ப.55
9. அ.தெட்சிணாமூர்த்தி (ப.ஆ), ஐங்குறுநூறு, பா.2 (1-3), ப.9
10. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.180 (1-3), ப.330
11. தா.நீலகண்டபிள்ளை, சங்க தமிழ் வாழ்வியல், ப.20
12. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா. 350 (1-3), ப.648
13. மேலது, பா.400 (1-3), பக்.741, 742
14. மேலது, பா.210 (1-3), பக்.385
15. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.306 (6-8), ப.27
16. மேலது, பா. 376 (2-5), ப.252
17. மேலது, பா.376 (14-18), ப.252-15
18. மு. சண்முகம் பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, பா.34, ப.38
19. சங்க இலக்கியம் வெளிப்படுத்தும் உணவு முறைகள், ப.115
20. மு. சண்முகம் பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, பா. 238 (1-2), ப.24
21. அ.மாணிக்கனார் (ப.ஆ), கலித்தொகை, பா.83 (1-2), ப.485
22. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, ப.60 (1-5), 107
23. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.86 (1-5) ப. 423
24. தொல்காப்பியம், கற்பியல் நூற்பா -

25. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.136 (1-5), ப.68

26. மேலது, பா.196 (4-6), ப.295

27. மேலது, பா.316 (11-14), ப.52

28. தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும், ப.108

29. கந்தையாபிள்ளை (ப.ஆ), தென்னிந்திய குலங்களும் குடிகளும், ப.93

30. மு. சண்முகம் பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, பா.169 (3-5), ப.319

31. மு. சண்முகம் பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, பா.364 (1-2), ப.247

32. அ.தெட்சிணாமூர்த்தி (ப.ஆ), ஐங்குறுநூறு, பா.5 (3-5), ப.35

33. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.120 (1-10), ப.219

34. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.236 (1-5), ப.444

35. மேலது, பா. 386 (1-2), ப. 285

36. அ.தெட்சிணாமூர்த்தி (ப.ஆ), ஐங்குறுநூறு, பா.63 (1-2), ப.140

37. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.126 (5-11), ப.26

38. அ.தெட்சிணாமூர்த்தி (ப.ஆ), ஐங்குறுநூறு, பா.47 (1-3), ப.100

39. கரு.இராமநாதசெட்டியார் (ப.ஆ), சங்க காலத் தமிழர் வாழ்வு, ப.93

40. அ.தெட்சிணாமூர்த்தி (ப.ஆ), ஐங்குறுநூறு, பா.48 (1-3), ப.103

41. மேலது, பா.49 (1-3), ப.106

42. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.6 (4-6), ப.78

43. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.6 (16-18), ப.17

44. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.260 (1-4), ப.96

45. அ.தெட்சிணாமூர்த்தி (ப.ஆ), ஐங்குறுநூறு, பா.45 (1-4)

46. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.200 (1-3)

47. மு. சண்முகம் பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, பா.113 (1-3), ப.107

48. மேலது, பா.271 (1-3), ப.238

49. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.96 (5-7), ப.465

50. அ.தெட்சிணாமூர்த்தி (ப.ஆ), ஐங்குறுநூறு, பா.23 (1-2), ப.54

51. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.36 (8-10), ப.212

52. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா. 230 (8-10), ப.244

53. அ.மாணிக்கனார் (ப.ஆ), கலித்தொகை, பா.66 (11-14), ப.280

54. அ.தெட்சிணாமூர்த்தி (ப.ஆ), ஐங்குறுநூறு, பா.42 (1-4), ப.90

55. மு. சண்முகம் பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, பா.258 (1-2), ப.226

56. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.326 (9-11), ப.84,85

57. மு. சண்முகம் பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, பா. 91 (1-3), ப.88

58. மேலது, பா.8 (1-2), ப.10

59. மேலது, பா.164 (1-3), ப.149

60. அ.தெட்சிணாமூர்த்தி (ப.ஆ), ஐங்குறுநூறு, பா.61 (1-3), ப.64

61. மேலது, பா.28 (1-3)

62. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.380 (1-4), ப.702

63. அ.மாணிக்கனார் (ப.ஆ), கலித்தொகை, பா.83 (1-7), ப.353

64. மேலது, பா.84 (1-9), ப.357

65. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.80 (1-4), ப.143

66. அ.தெட்சிணாமூர்த்தி (ப.ஆ), ஐங்குறுநூறு, பா.3 (1-3), ப.11

67. அ.மாணிக்கனார் (ப.ஆ), கலித்தொகை, பா.99 (1-4), பக்.592

68. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.216 (1-5), - ப.369

69. மேலது, பா.246 (6-9), ப.480

70. மேலது, பா. 196 (1-3), ப.295

71. மேலது பா.36 (13-170), ப.212

72. அ.மாணிக்கனார் (ப.ஆ), கலித்தொகை, பா.73 (1-4), ப.431

73. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.336 (1-7), பக்.116, 117

74. மேலது, பா.366 (7-12), ப.219

75. அ.மாணிக்கனார் (ப.ஆ), கலித்தொகை, பா.97 (6-10), ப.580

76. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.256 (1-5), ப.577

77. மு. சண்முகம் பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, பா.330 (3-5), ப.290

78. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.346 (4-7), ப.152

79. மேலது, பா.156 (11-15), ப.148

80. மேலது, பா.266 (11-14), ப.554

81. மேலது, பா.76 (1-4), ப.383

## இயல் - 5

## நெய்தல் நிலத்தில் விருந்தோம்பல் பண்புகள்

### 5.0 முன்னுரை

பழந்தமிழ் இலக்கியங்களான சங்க இலக்கியம் காதலையும், வீரத்தையும் முதன்மை பொருளாக பாடப்பெற்றுள்ளது. அகத்தையும், புறத்தையும் திணையை அடிப்படையாக்கி புலவர்கள் தம் பாடல்களை இயற்றியுள்ளனர். அகத்திணையில் நெய்தல் பாடல்களும் ஒன்றாகும். இயற்கை எழிலுடன் பாடப்பட்ட நெய்தல் பாடல்களில் பயின்று வந்துள்ள விருந்தோம்பல் கூறுகளை ஆய்வுச் செய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

### 5.1 நெய்தல் நிலம்

நெய்தல் திணையின் நிலத்தைத் தொல்காப்பியம்,

"வருணன் மேய பெருமணல் உலகம்"[1]

என்று உரைக்கிறது. நெய்தல் திணையின் நிலமானது, கடலும் கடல் சார்ந்த இடமாகும். "நிலம் என்பதற்கு இடம், தலம், நெய்தல் நிலம் நானிலத்தின் பொது தேசம், பூமி"[2] எனும் பல பொருள்களை மதுரைத் தமிழ்ப் பேரகராதி குறிப்பிடுகிறது.

"நிலம் என்பதைப் பயிர் செய்யும் இடம், பூமியின் மேற்பரப்பு தரை, நிலவும் இயற்கைச் சூழலைக் கொண்டு பிரிக்கப்பட்ட பரப்பு"[3] எனும் பல பொருள்களை க்ரியாவின் தற்கால தமிழ் அகராதி குறிப்பிடுகிறது.

இந்நிலத்திற்கான பொழுதுகளைப் பகுக்கும் போது, சிறுபொழுது மட்டும் நூற்பா வடிவில் மொழிய பெரும்பொழுதை உரையாசிரியர்கள் ஆறுவகை பெரும்பொழுது என்று குறிப்பிடுகின்றனர். இதனை,

“நெய்தலுக்குப் பெரும்பொழுது ஆறுபருவமும் உண்டு. சிறுபொழுது சூரியன் மறையும் நேரம் ஏற்பாடு - பகற்பொழுதின பிற்கூறு”[2] என்னும் உரைமூலம் அறியலாம்.

நெய்தல் நிலைத்தை கருப்பொருட்களைப் பின்வருமாறு உரைக்கலாம்.

| | | |
|---|---|---|
| “தெய்வம் | - | வருணன் |
| உணவு | - | உப்பும், மீனும் விற்று வாங்கிய உணவு |
| விலங்கு | - | முதலை, சுறாமீன் |
| மரம் | - | புன்னை, கைதை |
| பறவை | - | கடற்காக்கை |
| பறை | - | நாவாய் பறை |
| தொழில் | - | மீன்பிடித்தல், உப்பு விளைத்தல் |
| யாழ் | - | செவ்வழிப் பண் |
| ஊர் | - | பட்டினம், பாக்கம் |
| நீர் | - | கேணி நீர், கடல் நீர் |
| பூ | - | நெய்தல்”[4] |

என்று உரையாசிரியர் உரைக்கிறார். நெய்தல் நிலத்தின் உரிப்பொருள்கள் என்பது இரங்கலும் இரங்கல் நிமித்தமும் ஆகும். சங்க இலக்கியத்தில் நெய்தல் பாடல்களின் எண்ணிக்கை என்பது 347 பாடல்கள். இதில் நற்றிணையில் 102 பாடல்கள், குறுந்தொகையில் 72 பாடல்கள், ஐங்குறுநூறில் 100 பாடல்கள், கலித்தொகையில் 33 பாடல்கள், அகநானூற்றில் 40 பாடல்கள். இப்பாடல்களின் விருந்தோம்பல் பண்புகளை வெளிப்படுத்துவதே முக்கிய நோக்கமாகும். பத்துப்பாட்டில் நெய்தல் நில பாடல்கள் பயின்று வரவில்லை. ஆற்றுப்படை நூல்களில் நாட்டுவளத்தை குறித்த பாடல்கள் பயின்று வந்துள்ளன.

### 5.2 விருந்தோம்பல்

நெய்தல் நில பாடலின் படிந்துள்ள விருந்தோம்பல் பண்புகளைக் கீழ்வரும் தலைப்புகளில் காணலாம்.

1. நெய்தல் நிலம் சுட்டும் மக்கள் பிரிவினர்
2. அரிசி உணவுகள்
3. நெய்தல் நிலமும் மீன் உணவுகளும்
4. நீர் உணவு(கள்)

என்ற நான்கு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

#### 5.2.1 நெய்தல் நிலம் சுட்டும் மக்கள் பிரிவினர் :

தமிழர்கள் தாங்கள் வாழ்ந்தப் பகுதிகளைப் பாகுபடுத்தினர். நில அமைப்புக் கொண்டே அவற்றிகுப் பெயரிட்டனர். "நிலம் என்பதற்கு இடம், தலம், நானிலத்தின் பொது தேசம், பூமி"[5] எனும் பல நெய்தல் நில மக்களின் தொழில் என்பது மீன் பிடித்தலும், உப்பு விற்றலும் ஆகும். சங்க புலவர்கள் மீனவர்களின் தொழிற்திறமைக்கு ஏற்ற வகையில் பல பெயர்களைக் கையாண்டுள்ளனர். சில பெயர்கள் தனித்தனி குலங்களாக மாறின.

சேர்ப்பான், துறைவன், புலம்பன், வலைவர், பரதவர் ஆகிய பெயர்களால் குறிக்கப் பெறுகின்றனர். இப்பெயர்கள் அனைத்தும் நெய்தல் நில மீனவர்களைச் சுட்டியப் பெயராகும். இத்தகைய பெயர் வகைகளைத் தொல்காப்பியம்,

"பெயரும் வினையும் என்று ஆயிருவகைய

திணைதொறு மரீஇய திணைநிலைப் பெயரே"[6]

என்று குறிப்பிடுகிறார். இதற்கு நச்சினார்க்கினியார் உரையெழுதும் போது நெய்தல் நிலத்திற்கு "நுளையர், திமிலர், பரதவர்", என்று ஆண்பாற் பெயரையும், 'நுளைத்தியர், பரத்தியர்,' ஏனைய பெண் பெயரும் வரும்"[7] என்றும் உரையெழுதுகிறார். மேலும் நெய்தல் திணைக்குரிய பெயரை விளக்கும்போது,

“இனி, உரிப்பொருட்குரிய தலைமக்கள் பெயராவன், பெயர்ப் பெயரும் நாடாட்சி பற்றி வரும் பெயருமாம்”, என்று தொடங்கி, “நெய்தற்குக் கொண்கன், துறைவன், சேர்ப்பன், மெல்லம், புலம்பன்; தலைவி பெயர் வந்துழிக் காண்க”[8] என்று கூறியுள்ளார்.

சங்ககாலத் தமிழர் வாழ்வு என்னும் நூலில் இராமநாதன் செட்டியார் நெய்தல் நில மக்களைப் பின்வருமாறு விளக்குகிறார்.

“நெய்தல் நில மக்களுள் உயர்ந்தோர் சேர்ப்பன், புலம்பன், பரத்தி, நுளைச்சி எனப்பட்டனர். பொதுமக்கள் நுளையர், நுளைச்சியர், பரதர், பரத்தியர், அளவர், அளத்தியர் என வழங்கப்பட்டனர்”[9] என்று குறிப்பிடுகிறார்.

### 5.2.1.1 பரதவர்

பரதவர் என்பவர்கள் மீன்பிடிக்கும் தொழிலை உடையவரா, பிறதொழில் தெரிந்தவர்களா என்று சிந்திக்கத் தோன்றுகிறது. பரதவர் இனக்குடிகளாகவே வாழ்ந்து வந்துள்ளனர்.

“பரதவர்கள் மீன் பிடிப்பவர்களாகவோ, அல்லது கடல் கடந்து செல்வதில் வல்லவர்களாகவோ இருந்திருத்தல் வேண்டும் எனத் தெரிகிறது”[10] என்று மொ.அ.துரை அரங்கசாமி தம் நூலில் பதிவு செய்துள்ளார். மேலும்,

“பரதவர் அல்லது பரதர் என்ற சொல் பிங்கலத்தையிலும், கம்பராமாயணத்திலும் காணப்படுகிறது. பரதவர் என்பது கடல்வாழ் மக்களைக் குறிக்கும் என்று நச்சினார்க்கினியர் கருத்தாகும்”[11] என்று கூறுகிறார். இக்கருத்து இங்கு எண்ணத்தக்கதாகும். எனவே பரதவர் கடல் சார்ந்த மக்கள் என்பதை அறியலாம்.

### 5.2.1.2 பரத்தியர்

சங்க காலத்தில் பரத்தையர் என்னும் சொல் ஆடல் இன பெண்களைக் குறிப்பனவாகும். நெய்தல் நில மக்களின் பெண்பாலர்களை பரத்தையர் என்னும்

சொல் கொண்டு குறித்தனர். எனவே ஒரு சொல்லில் இரு இன மங்கையர்கள் குறிக்கப் பெற்றார்களா என்பது ஆராயப்பட வேண்டியதாகும். பரத்தை என்னும் சொல் குறித்து,

"பரத்தையர் என்பதற்கு அயலவா என்று பொருள் கொள்ளப் பெற்றது. பர + ஸ்திரி - பரத்தி - பரத்தை; குற + ஸ்திரி = குறத்தி என்றாள் போலப் பர + ஸ்திரி - பரத்தி, பரத்தை என்றாயிற்று எனப் பரத்தை என்ற சொல்லிற்கு விளக்கம் கூறப்பெற்றுள்ளது"[12].

மீன் விற்கும் மகளிரையோ, கடற்கரையில் வாழும் பெண்களையோ பரத்தை என்று அழைத்தனர். பரதவா் என்ற பெயர் மீன் பிடிப்பவர்களுக்கு குறியீடாயிற்று எனில் பரத்தை என்னும் பெயர் மீன் விற்கும் மகளிர்க்காயிற்று எனலாம்.

### 5.2.1.3 பாணன்

வாயில் கூற்றுகளில் ஒருவரான பாணன் நெய்தல் நில பாடல் ஒன்றில் பாணன் என்னும் இனம் மீன் படித்தலைத் தொழிலாகக் கொண்டவர். இதனை,

"அம்ம வாழி, தோழி! பாணன்

சூழ்கழி மருங்கின் நாண் இரை கொளீஇச்

சினைக் கயல், மாய்க்கும் துறைவன் கேண்மை"[13] ஐங்.11 (1-3)

என்னும் பாடல் அடிகளில் பாணன் என்னும் பெயர் மீன் பிடிக்கும் ஆண்மகனைக் குறிப்பதாயிற்று. துறைவன் என்னும் பெயர் உரிபொருளின் கலைமகன் பெயரைக் குறிப்பதாயிற்று.

### 5.2.1.4 சேர்ப்பன்

நெய்தல் நில தலைமகன் பெயர்களில் ஒன்று சேர்ப்பன் ஆகும். சேர்ப்பன் என்றால் கடற்கரை தலைவன் என்று பொருள்படும். இதனை,

"முழங்கு திரை கொழீஇய மூரி எக்கர்

நுணங்கு துகில் நுடக்கம் போல, கணம் கொள

ஊதை தூற்றும் உரவு நீர்ச் சேர்ப்ப"[14] நற்.15 (1-3)

என்னும் பாடலடிகளால் அறியலாம்.

### 5.2.1.5 புலம்பன்

புலம்பன் என்னும் பெயரும் நெய்தல் நில கவிதைகளில் பயின்று வந்துள்ளன. 'மெல்லம்' என்ற அடைமொழியுடன் சேர்த்து 'மெல்லம் புலம்பன்' என்ற சொல்லாட்சியுடன் கவிதையில் வெளிப்படுவதை,

"உடைதிரைத் திவலை அரும்பும் தீம்நீர்

மெல்லம் புலம்பன் பிரிந்தெனப்

பல்இதழ் உண்கண் பாடு ஒல்லாவே"[15] குறு.5 (3-5)

என்னும் பாடலடிகள் சான்றாகின்றன. புலம்பன் என்னும் சொல்லிற்கு கடற்கரை தலைவன் என்றே உரையாசிரியர்கள் பொருள் கொடுத்துள்ளனர். இங்ஙனம் நெய்தல் நில கவிதைகளில் பெண்கள் குறைவாகவே பயின்று வந்துள்ளதை அறிய முடிகிறது.

### 5.2.2 அரிசி உணவுகள்

நெய்தல் நில மக்கள் விவசாயம் செய்ததாகக் குறிப்புகள் இல்லை. ஆனால் வெந்நெல்லை பண்டமாற்றும் முறையில் இவர்களின் அரிசி உணவுகள் அமையப் பெற்றன என்பதற்கு ஆதாரங்கள் உண்டு. (அறுவடைச் செய்த காட்சியை ஒரு பாடலில் சங்க புலவர் பதிவு செய்துள்ளார்) அவைகளைக் காண்போம்.

கடலில் மீன்பிடித்தும், கரையில் உப்பு விளைவித்தும் வாணிபம் செய்யும் நெய்தல் நில மக்கள் இப்பொருட்களை விற்று உணவிற்குத் தேவையான பொருட்களை வாங்கினர். அவற்றுள் நெல்லரிசிகள் குறிப்பிடத் தகுந்த உணவு பொருளாக விளங்கிற்று.

நெய்தல் நிலத்தில் கடற்கரை ஓரத்தில் வெண்ணெல் விவசாயம் செய்யப்பட்டிருந்தது. இந்த நெல் உற்பத்தி தேவைக்கும் குறைவாகவே காணப்படுகிறது. எனவே நெய்தல் நிலத்தில் வேளாண்மை குறித்த செய்தியை பாடல் அறிய முடிகிறது. இதனை,

"தண் நறு நெய்தல் தளை அவிழ் வான்பூ

வெண் நெல் அரிநர் மாற்றினர் அறுக்கும்

மெல்லம் புலம்பன் மன்ற"[16] ஐங்.190 (1-3)

என்னும் பாடல் அடிகள் புலப்படுத்துகின்றன.

நெய்தல் நிலத்தில் எடுக்கப்பெற்ற உப்பை விலைக் கூறி விற்று அதன் மூலம் வெண்ணெலை வாங்கியதை, உப்பு விற்பதற்காக உப்பளத்தில் தாய் சென்றதை,

"உப்பை மாறி வெண்ணெல் தரீஇய

உப்புவிளை கழனிச் சென்றனள் அதனால்

பனி இரும் பரப்பின் சேர்ப்பதற்கு"[17] குறு.269 (5-7)

என்னும் குறுந்தொகை கவிதை அடிகள் சான்று காட்டுகின்றன. உப்புவிற்று நெல் வாங்கி சமைத்து உண்பதை அகநானூறு விரிவாக விளக்குகிறது. பரதவனின் மகன் உப்பு விற்று அதன் மூலம் கிடைத்த நெல்லரிசியை வேக வைத்து அயிலை மீனை சேர்த்து, மீன் கருவாட்டு கறியுடன் தந்தைக்கு உண்ணக் கொடுப்பாள். இப்பாடலடியின் மூலம் மீனுக்குப் புளி இட்டுச் சமைக்கும் வழக்கம் இருந்துள்ளதை அறிய முடிகிறது. அக்காலத்து மக்கள் உணவு சமைக்கும் முறையை இன்னும் பின்பற்றி வருகின்றனர். இதனை,

"பெருங்கடற் பரப்பில் சேயிறா நடுங்க

கொடுந் தொழில் முகந்த செங் கோல்அவ் வலை

நெடுந் திமில் தொழிலொடு வைகிய தந்தைக்கு

உப்பு றொடை நெல்லின் மூரல் வெண்சோறு

அயிலை துழந்த அம் புளிச் சொரிந்து

கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும்”[18] அகம்.60 (1-6)

என்னும் பாடல் அடிகள் மூலம் குடவாயிற் கீழந்தனார் என்னும் புலவர் விளக்குகிறார். இப்பாடலடியின் மூலம் மீனுக்குப் புளி இட்டுச் சமைக்கும் வழக்கம் இருந்துள்ளதை அறியமுடிகிறது. உணவு சமைக்கும் முறையை இன்னும் பின்பற்றி வருகின்றனர்.

### 5.2.2.1 சிறுசோறு சமைத்தல்

குழந்தை பருவத்தில் வீடுகட்டி விளையாடுதல், கடற்கரை மணலில் பெயர் எழுதி விளையாடுதல், பனை ஓடுகளை சக்கரம்போல் செய்து விளையாடுதல் போன்ற விளையாட்டுகளை கடற்கரை சூழ்ந்த வாழ்விடங்களை கொண்டவர்கள் களித்து மகிழ்வர். அதேபோன்று ஒரு விளையாட்டு சிறுசோறு சமைத்து விளையாடுதல் என்பதாகும். நெய்தல் நில சிறுமிகள் கடற்கரை மணலில் சிறுவீடு கட்டி சிறுசோறு சமைத்து விளையாடிய நிகழ்வை,

“தொடலை ஆயமொடு கடல் உடன் ஆடியும்

சிற்றில் இழைத்தும் சிறு சோறு குவைஇயும்”[19] அகம்.100 (6-7)

என்னும் பாடலடியில் நன்கு உணரலாம். அங்கு தலைவன் வந்தான். தலைவனுக்கு கொழுமீன் சதையால் ஆன சிறு சோறை உண்ண ஆவல் ஏற்படுகிறது. தலைவி வேண்டாம் இந்த மீன் சிறுசோறு கெட்ட மீன்களல் ஆகியது என்று கூறி தவிர்க்கிறாள். விருந்தினர்களுக்கு நல்ல உணவைக் கொடுக்கும் செவ்வியல் பண்பை புலவர் வெளிப்படுத்துவன,

“மெல் இலைப் பரப்பின் விருந்து உண்டு, யானும் இக

ஆல்லென் சிறுகுடித் தங்கின் மற்று எவனோ?

என மொழிந்தனனே, ஒருவன், அவற்கண்டு

இறைஞ்சிய முகத்தெம் புறம் சேர்பு பொருந்தி

‘இவை நுமக்கு உரிய அல்ல; இழிந்த

கொழு மீன் வல்சி’, என்றனம்”[20] அகம்.110 (12-17)

என்னும் பாடல் அடிகளால் விளக்குகிறார்.

களவு காலத்தில் தலைவன் - தலைவி பிரிவு என்பது இயல்பானதும், கொடுமையானதும் ஆகும். இரவுக் குறியில் தலைவியின் இல்லத்தில் தங்கும்படி தோழியானவள் தலைவனிடம் உரைக்கும் போது உன் குதிரைக்கும் விருந்தளிப்போம், மீனை விற்றுப் பெற்ற வெந்நெல்லின் மாவைத் தயிரிட்டு பிசைந்த கூழினை உணவாகக் கொடுப்போம் என்று கூறுவதை,

“நின் திறத்து அவலம் வீட, இன்று இவண்

சேப்பின் எவனோ - பூக் கேழ் புலம்ப!

பசுமீன் நொடுத்த வெண்நெல் மாஅத்

தயிர் மிதி மிதவை ஆர்த்துவம் நினக்கே”[21] அகம்.340 (12-15)

என்னும் பாடல் அடிகள் மூலம் புலவர் நக்கீரர் விளக்குகிறார். உப்பு விற்று நெல் வாங்கும் வாணிபத்தைச் சித்தரிக்கும் பாடல் அகநானூறு தொகுப்பு ஒன்றில் விரிவாக எடுத்தாளப்பட்டுள்ளது. தலைவி நெய்தல் இடத்தை சேர்ந்தவளாக இருந்தாள். தலைவன் இயற்கை புணர்ச்சி ஆற்றிய பின், தன் இல்லம் நோக்கி சேர்ந்தான். சிறிது நாள் கழித்து தலைவன் உடம்பில் ஏற்பட்ட மாறுபாடு குறித்து பாங்கன் வினவும்போது தலைவன் நெய்தல் நில பண்டமாற்று வாணிபம் குறித்து விரிவாகக் கூறுவதை,

“உவர் விளை உப்பின் கொள்ளை சாற்றி

அதர்படு பூழிய சேண் புலம் படரும்

ததர் கோல் உமணர் பதிபோகு நெடுநெறிக்

கணநிரை வாழ்க்கைதான் நன்று கொல்லோ?

வணர் சுரி முச்சி முழுதும் மன் புரள

ஐது அகல் அல்குல் கவின் பெறப்புனைந்த

பல்குழைத் தொடலை ஒல்குவயின் ஒல்கி

"நெல்லும் உப்பும் நேரே, ஊரீர்!

"கொள்ளீரோ" எனச்சேரி தொறும் நுவலும்

அவ்வாங்கு உந்தி அமைத்தோளாயீ!"[22] அகம்.390 (1-10)

என்னும் பாடல் அடிகள் மூலம் புலவர் அம்மூவனார் தெளிவுப்படுத்துகிறார்.

### 5.2.2.2 உப்பு வாணிகம்

உப்பு வாணிகம் செய்பவர்கள் மருத நிலத்தில் இருந்தனர். நெய்தல் நிலத்து விளைந்த உப்புக்களை மருத நில உப்பு விற்கும் உமணர்கள் உப்பை வாங்கி பதிலாக நெல்லை நெய்தல் நில உமணர்களுக்குக் கொடுப்பர். இதனை,

"jம் நாட்டு விளைந்த வெண்ணெல் தந்து

பிற நாட்டு உப்பின் கொள்ளை சாற்றி

நெடு நெறி ஒழுகை நிலவு மணல் நீந்தி

அவண் உறை முனிந்த ஒக்கலொடு புலம் பெயர்ந்து"[23] நற்.183 (1-4)

என்னும் பாடல் மூலம் சங்க புலவர் தெளிவுப்படுத்துகிறார்.

### 5.2.2.3 குதிரை உணவு

நெய்தல் நிலத்தில் குதிரைக்கு நெல் உணவு சமைத்து உண்ணக் கொடுத்தலை நற்றிணை நெய்தல் பாடல் விளக்குகிறது. களவுகாலத்தில் இரவு குறியில் தலைவியின் இல்லம் முன் தலைவன் வந்து நிற்கிறான். தலைவனிடம் கூறுவது போல் தோழி தன் நெஞ்சிற்குக் கூறும்போது தலைவனை தலைவியின் வீட்டில் இரவு தங்குமாறு அழைப்பு விடுக்கும் பாடல் ஒன்றில் நெய்தல் நில மக்கள் உப்பு விற்றதத்திற்கு ஈடாக தலைவனின் குதிரைக்குக் கொடுக்கும் நிகழ்ச்சியை,

"உமணர் தந்த உப்பு நொடை நெல்லின்

அயினி மா இன்று அருந்த, நீலக்

கணம் நாறு பெருந்தொடை புரளும் மார்பின்

துணை இலை தமியை சேக்குவை அல்லை”[24] நற்.254 (6-9)

என்னும் பாடலடிகளால் புலவர் உலோச்சனார் குறித்துள்ளார். இங்ஙனம் நெய்தல் நில மக்கள் தம் அடிப்படை உணவிற்கு வேண்டி உப்பை சீர்ப்படுத்தி விற்று நெல்லை வாங்கி அதனைப் பக்குவப்படுத்தி, வேகவைத்து உணவு உண்டு வாழ்ந்ததை மேற்குறிப்பிட்ட பாடல்கள் மூலம் நன்கறியலாம்.

### 5.2.3 நெய்தல் நிலமும், மீன் உணவுகளும்

கடலும் கடல் சார்ந்த இடமான நெய்தல் நிலத்தில் மீன் உணவுகளின் பங்களிப்பு மிக முக்கியமான ஒன்றாக நெய்தல் நில கவிதையில் குறிப்பிடப் பெற்றுள்ளன.

#### 5.2.3.1 மீன் வேட்டை

மீன் பிடித்தல் என்பதை விட மீன் வேட்டை என்னும் சொல்லே கையாளப்பெற்றுள்ளன. மீனவர்களின் வீட்டில் வலைகள் இருந்தன. மரக்கலங்களிலும், கட்டுமரங்களிலும் சென்று வலை வீசி ஆழ்கடலில் மீன்பிடிப்பதையும், சங்க கவிதை பதிவு செய்துள்ளது. மீன்பிடிக்கும் படகுகளை புலவர்கள் திமில், தோணி, ஓடம், கலம் என்னும் சொற்களால் குறித்துள்ளனர். திமிலில் வலைகளைக் கொண்டு மீன் பிடித்தலை

“கொடுந்திமிற் பரதவர் கோட்டுமீன் எறிய

நெடுங்கரை இருந்த குறுங்கால் அன்னது

வெண்தோடு இரியும் வீததை கானல்”[25] குறு.304 (4-6)

என்னும் பாடலடிகள் மூலம் புலப்படுத்தப்படுகின்றன. இங்கு திமில் என்பது பயணம் செய்யும் ஒரு பொருள் என்னும் பொருளில் வந்துள்ளது. மீன்பிடி கலங்களாக தோணியும் பயன்பட்டதை,

"கடல்பாடு அவிந்து தோணி நீங்கி

நெடுநீா் இருங்கழிக் கடுமீன் கலிப்பினும்;

வெவ் வாயப் பெண்டிா் கௌவை தூற்றினும்"[26] அகம்.50 (1-3)

என்னும் பாடலடிகள் மூலம் கருவூர்ப் பூதஞ்சேந்தனா் குறிப்பிட்டுள்ளாா்.

சுறா போன்ற பல மீன்களைப் பிடிக்கும் நிலையை புலவா்கள் மீன் வேட்டை என்று வருணித்துள்ளனா். இதனை,

"இன்னும் வாராா்; வரூஉம்

பல்மீன் வேட்டத்து என்னையா் திமிலே"[27] குறு.123 (4-5)

என்னும் பாடல் அடிகள் மூலம் ஐயூா் முடவன் என்னும் சங்கப்புலவா் தம் கவிதையில் குறித்துள்ளாா். மீன் பிடித்தல் என்பதை மீன் வேட்டை என்று கூறிய முறை புலவரின் ஆளுமை தன்மையை விளக்குகிறது.

### 5.2.3.2 இரவு பொழுதில் மீன் பிடித்தல்

மீன் பிடிக்கும் பரதவா்கள் இரவு பொழுதிலும் மீன் பிடிக்க ஆழ்கடலுள் சென்றனா். அப்போது வடிவத்தில் பெரிதும் அளவற்ற வகையிலும் சுறாமீன்கள் அகப்பட்டன. வைகறைப் பொழுதில் மீன் வளத்தோடு கரை திரும்பினா் என்பதை,

"வளை நீா்க்

கடுஞ்சுறா எறிந்த கொடுந் திமிற் பரதவா்

வாங்குவிசைத் தூண்டில் ஊங்கு ஊங்கு ஆகி

வளி பொரக் கற்றை தாஅய், நளிசுடா்

நீல்நிற விசும்பின் மீனொடு புரைய"[28] நற்.199 (5-9)

என்னும் பாடல் அடிகள் மூலம் புலவா் பேரி சாத்தனாா். தம் கவிதையில் பதிவு செய்துள்ளாா்.

இரவில் மீன் வேட்டைக்குச் சென்றால் தீப்பந்தங்களைக் கொண்டு சென்றனா் என்பதை மேற்குறிப்பிட்ட பாடலின் இறுதி அடி நன்கு விளக்கும். மற்றொரு

பாடலில் கடலில் மீன்பிடிக்கச் சென்ற திமிலில் விளக்கின் சுடர் எரிந்து கொண்டிருந்தது. கரையில் இருந்து காணும் போது உதய சூரியனுக்கு முன்னோடியா என்று தோன்றும் அளவிற்கு காட்சியளிப்பதாகத் தம் கவிதையில் பரிவு செய்துள்ளார் புலவர் தாயங்கண்ணனார். இதனை,

“சிறுகால்

அலவனொடு பெயரும் புலவுத் திரை நளிகடல்

பெரு மீன் கொள்ளும் சிறுகுடிப் பரதவர்

கங்குல் மாட்டிய கனை கதிர் ஒண் சுடர்

முதிரா ஞாயிற்று எதிர் ஒளி கடுக்கும்

கானல்அம் பெருந்துறைச் சேர்ப்பான்”[29] நற்.219 (4-9)

என்னும் பாடல் அடிகள் புலப்படுத்துகின்றன. மகளிரும் தம் இல்லத்தில் விளக்கேற்றினர். இவ்விளக்கின் எரியும் எண்ணெய்யானது மீனின் கொழுப்பு ஆகும். இதனை,

“நெடுங்கடல் அலைத்த கொடுந் திமிற் பரதவர்

கொழு மீன் கொள்ளை அழி மணல் குவைஇ,

மீன் நெய் அட்டிக் கிளிஞ்சில் பொத்திய

சிறு தீ விளக்கில் துஞ்சும், நறு மலர்”[30] நற்.175 (3-4)

என்னும் பாடல் அடியில் மீனின் கொழுப்பால் நெய்யப்பெற்ற நெய் இருந்தது எனவும், அந்நெய் விளக்கெரிக்கப் பயன்பட்டது என்பதை உணர்த்துகிறது.

நெய்தல் நில மகளிரில் சிலர் மாளிகையில் வாழ்ந்தனர். மாலை பொழுதில் மீன் கொழுப்பை சேர்த்து உருக்கி கிடைத்த நெய்யை கிளிஞ்சலில் இட்டு விளக்கேற்றுவர். இதனை,

“புலம்பு வந்து இறுத்த புண்கண் மாலை

இலங்கு வளை மகளிர் வியல் நகர் அயர

மீன் நிணம் தொகுத்த ஊன் நெய் ஒண்சுடர்

நீல் நிறப் பரப்பில் தயங்கு திரை உதைப்ப”[31] நற்.215 (3-6)

என்னும் பாடல் அடிகள் புலப்படுத்துகின்றன.

### 5.2.3.3 மீன் உணக்கல்

கடலில் பிடித்த மீன்களைக் கடற்கரையில் கீழே குவித்து விற்பர். விற்றது போக மீதி மீன்களைத் தாங்கள் இல்லத்திற்கு எடுத்துச் சென்று வெயிலில் உணக்குவர். உணக்கிய மீனைத்தான் கருவாடு என்றழைப்பர். சங்க காலத்திலேயே மீன்களைப் பதனீடு செய்யும் பழக்கம் இருந்துள்ளதை,

“பெருங்கடற் பரதவர் கோள்மீன் உணங்கலின்

இருங்கழிக் கொண்ட இறவின் வாடலொடு

நிலவுநிற வெண்மணல் புலவ பல உடன்

எக்கர் தொறும் பரிக்கும் துறைவனொடு”[32] குறு.320 (1-4)

என்னும் பாடல் அடிகள் வெளிப்படுத்துகின்றன. பெரிய சுறா மீன்களை வெட்டி துண்டுகளாக்கி உப்பிலிட்டு உலர்த்தி வைப்பர். வெயிலில் உலர்த்தும் போது பறவையினங்கள் உண்ணாமல் இருக்க பரதவ மகளிர் காவல் காப்பர். இதனை,

“மீன் எறி பரதவர் மகளே; நீயே,

நெடுங் கொடி நுடங்கும் நியம மூதூர்க்

கடுந் தேர்ச் செல்வன் காதல் மகனே,

நினச் சுறா அறுத்த உணக்கல் வேண்டி

இனப் புள் ஒப்பும் எமக்கு நலன் எவனோ?”[33] நற்.45 (3-7)

என்னும் பாடலடியால் அறியலாம்.

### 5.2.3.4 மீன் விற்றல் - மகளிர்

மீனவர்களில் கணவன் கடலிலிருந்து மீன் பிடித்து வந்தால் மனைவியானவள் மீன்களை விற்க செல்வாள். இதன்மூலம் மனையையும், மக்களையும் போற்றி

காப்பதோடு, தாமும் உழைத்து பொருள் திரட்டுவதிலேயே கண்ணும் கருத்துமாயிருப்பர். மனைவி மட்டுமல்ல பிற நெய்தல் நில மகளிரும் மீன் விற்பர். சகோதரன் மீன் பிடித்தால் சகோதரி மீன் விற்க செல்வாள். இதனை,

“ஓங்கு திரைப் பரப்பின் வாங்கு விசைக்கொளிஇ

திமிலோன் தந்த கடுங்கண் வய மீன்

தழை அணி அல்குல் செல்வத் தங்கையர்

விழவு அயர் மறுகின் விலை எனப் பகரும்”[34] அகம்.320 (1-4)

என்னும் பாடலடிகள் திருவிழாக் காலங்களில் வீதிகளில் மக்கள் மீன் வாங்கிக் கொண்டதையும் சித்தரித்துக் காட்டியுள்ளது.

மீன் பிடிக்கச் சென்றபோது கடுமையான சுறாமீன் ஒன்று தாக்கியதில் காயமடைந்த தந்தை காயம் ஆறும் வகையில் இல்லத்தில் வீற்றிருந்தான். இதனால் அவன் மனைவியும் வேலைக்குச் செல்லவில்லை. தந்தையின் உடல் பேணி கடலுக்கு மீன் பிடிக்கச் சென்றாள். அதன்பின் தாயும் உப்பை விற்று நெல்லை வாங்கி வர சென்றாள். இதனை,

“வயச்சுறா எறிந்த புண்தணித்து எந்தையும்

நீல்நிறப் பெருங்கடல் புக்கனன்; யாயும்

உப்பை மாறி வெண்ணெல் தரீஇய

உப்பு விளை கழனிச் சென்றனள்”[35] குறு.269 (3-6)

என்னும் பாடல் அடிகள் படம் பிடித்து காட்டுகின்றன. இதன்மூலம் நெய்தல் மகளிர் உப்பு விற்றலையும் தொழிலாக செய்து வந்துள்ளதை அறியலாம்.

### 5.2.3.5 மீன் உணவு

கடலில் பிடித்த மீன்களை விற்றது போக மீதியைத் தம் இல்லத்திற்கு எடுத்துச் செல்வர் பரதவர். அங்கு கறி வைத்து சமைத்தது போக, மீதியிருந்தால் சுற்றத்தாருக்கும், விருந்தினர்க்கும் கொடுப்பர்.

சுறா மீன் மட்டுமின்றி இறால் மீனையும் பிடிப்பர். இறால் மீனை உண்ண முதிய கொக்கு காத்திருக்கும். அந்த அளவிற்கு தொண்டி என்னும் நகரம் மீன் வளமையாய் இருந்துள்ளது. இதனை,

"சிறுநணி வரைந்தனை கொண்மோ - பெருநீர்

வலைவர் தந்த கொழுமீன் வல்சிப்

பறை தபு முதுகுருகு இருக்கும்

துறைகெழு தொண்டி அன்ன இவள் நலனே"[36] ஐங்.180 (1-4)

என்னும் பாடலடியால் சங்க புலவர் அம்மூவனார் விளக்குகிறார்.

தொண்டி என்னும் கடற்துறையில் அயிரை மீன்கள் குவிந்து கிடக்கும். அதனை உண்ண நாரை என்ற பறவை காத்துக் கொண்டிருக்கும். இதனை,

"குணகடற் திரையது பறைதபு நாரை

திண்தேர்ப் பொறையன் தொண்டி முன்துறை

அயிரை ஆர்இரைக்கு அணவந்தா அங்கு"[37] குறு.128 (1-3)

என்னும் பாடல் அடிகளால் பரணர் விளக்குகிறார். வெண்நிறத்தைக் கொண்ட காக்கைகள் நீர்வற்றிய கழியில் காணும் சிறு மீன்களை விரும்பி உண்ணும். இதனை,

"பெருங்கடற்கரையது சிறுவெண் காக்கை

அறு கழிச் சிறுமீன் ஆர மாந்தும்"[38] ஐங்.165 (1-2)

என்னும் ஐங்குறுநூறு பாடல் சான்றாகின்றது. இதே போன்று கொற்கை துறைமுகத்தில் செந்நிறம் கொண்ட இறா மீன்களைக் கவர்ந்து உண்பதை பறவையினம் உண்டு செல்லும். இதனை,

"இருங் கழிச் சேயிறா இனப்புள் சூரும்

கொற்கை கோமான் கொற்கை அம் பெருந்துறை"[39] ஐங்.188 (1-2)

என்னும் பாடல் அடிகள் மூலம் அறியலாம்.

மீன் பிடித்து வந்த பரதவர்கள் மீன்களை கரைகளில் கொட்டி விடுவர். அதிலிருந்து இரந்தவர்களின் பாத்திரத்தில் நிறைத்துக் கொடுப்பர். எஞ்சிய மீன்களை விற்கச் செல்வர். இங்ஙனம் இல்லாதவர்களுக்குக் கொடுக்கும் தன்மையை,

"நெடுங்களிறு வலந்த குறுங் கண் அவ் வலை
கடல்பாடு அழிய, இன மீன் முகந்து
துணை புணர் உவகையர் பரதமாக்கள்
இளையரும் முதியரும் கிளையுடன் துவன்றி
உப்பு ஒய் உமணர் அருந்துறை போக்கும்
ஒழுகை நோன் பகடு ஒப்பக் குழீஇ
அயிர் திணி அடைகரை ஒலிப்ப வாங்கி
பெருங்களம் தொகுத்த உழவர் போல
இரந்தோர் வறுங்கலம் மல்க வீசி"[40] அகம்.30 (1-9)

என்னும் பாடல் வரிகள் சான்று பகர்கின்றன. இங்ஙனம் உரியவர்களுக்கு மீனைத் தானம் செய்யும் மிக சிறந்த பண்பு பரதவ மக்களிடம் காணப்பட்டன. மீன் பிடித்து வரும்போது அதிகமான மீன் கிடைத்தால் அதற்குக் காரணமான வலையை பரதவர்கள் பாராட்டி, கொண்டு வந்த அயிலை மீனைப் பலர்க்கும் பகுத்துக் கொடுத்து மகிழ்ந்தனர்.

"கொடுந் திமிற் பரதவர் வேட்டம் வாய்த்தென
இரும் புலாக் கமழும் சிறுகுடிப் பாக்கத்துக்
குறுங் கண்அவ் வலைப் பயம் பாராட்டி
கொழுங் கண் அயிலை பகுக்கும் துறைவன்"[41] அகம்.70 (1-4)

என்னும் பாடல் வரிகளால் பரதவர்களின் பகுத்துக் கொடுக்கும் முறையைப் புலவர் விளக்கியுள்ளார்.

மீன் உண்பதில் உயர்ந்தோர், தாழ்ந்தோர் என்ற பாகுபாடு இல்லை. அனைவரும் மீன் உண்டனர். மாளிகையில் வாழும் செல்வந்தர் முதல் குடிசையில் வாழும் வறுமையோர் வரை மீன் முக்கிய உணவாக அமைந்தது. நற்றிணை நெய்தல் பாடல் ஒன்றில் தோழி பாணற்கு வாயில் மறுக்கிறாள். அப்போது தலைவனின் நிலைக்குறித்து உரைக்கும்போது,

"கொழு மீன் ஆர்கைச் செழு நகர் நிறைந்த

கல்லாக் கதவர் தன் ஐயர் ஆகவும்"[42] நற்.127 (4-5)

என்னும் பாடலடிகளால் குறிப்பாக உணர்த்துகிறான். தலைவனும் தலைவியும் களவு வாழ்க்கை மேற்கொள்கின்றனர். தலைவி தலைவனைக் காணாமல் இல்லத்தில் இருக்க முடியவில்லை. பகற்பொழுதில் ஆற்றாமையைக் கூறி விரைவில் மணம்புரிய வேண்டுகிறாள். தலைவியின் வீட்டில் கொழுப்பு மிகுந்த மீன் உணவு உண்ண வருக என்று கூறினாலும் வரமாட்டாள் என்று உரைப்பதை,

"வளி சீத்து வரித்த புன்னை முன்றில்

கொழு மீன் ஆர்கைச் செழு நகர்ச் செலீஇய

"எழு" எனின் அவளும் ஒல்லாள் யாமும்"[43] நற்.159 (6-8)

என்னும் பாடலடிகள் மூலம் சங்கபுலவர் கண்ணம்புல்லனார் விளக்குகிறார். இக்கவிதையில் குறிப்பிட்ட தலைவி நெய்தல் நிலத்தினைச் சேர்ந்தவள் என்றும், அங்கு மீன் உணவே மிக சிறந்த உணவு என்று அறிந்து கொள்ளலாம்.

மீன்களைச் சுட்டு உண்கின்றனர் நெய்தல் நில மக்கள். இதனால் இல்லங்களிலிருந்து வெளிவரும் புகை நெய்தல் நில பாடலில் பெருமையாக வருணிக்கப்படுவதை,

"இருங் கழிச் செறுவின் வெள் உப்பு விளையும்

அழியா மரபின் நம் மூதூர் நன்றே

கொழு மீன் சுடு புகை மறுகினுள் மயங்கி

சிறுவீ ஞாழல் துறையுமார் இனிதே!"[44] நற்.311 (4-7)

என்னும் பாடல் அடிகளால் உலோச்சனார் என்ற சங்க புலவர் குறிப்பிட்டுள்ளார்.

உயர்ந்த மணலையுடைய அடைகரையில் தாம் பிடித்துக் கொண்டு வந்த மிகுந்த சுராமீனைப் பலருக்கும் பகுத்துக் கொடுக்கும் வழக்கம் உண்டு என்பதை,

"மோட்டுமணல் அடைகரைக் கோட்டுமீன் கொண்டி

மலை கமழும் பார்கத்து மகிழும்"[45] அகம்.10 (11-12)

என்னும் அகநானூறு பாடலடியின் மூலம் அறியலாம்.

மேற்கூறிய தலைப்புகளில் அரிசி உணவுகள், சிறுசோறு சமைத்தல் குதிரை உணவளித்தல், மீன் உணவுகள், மீன் வேட்டை, மீன் உணக்கல், மீன் உணவுகளை சமைத்தல் போன்ற செய்திகள் இப்பகுதியில் விளக்கப் பெற்றன. இச்செய்திகள் வழி என்னென்ன உணவுமுறைகள் நெய்தல் நில மக்களிடத்து பயின்று வந்துள்ளன என்பதனை அறிய முடிகின்றது. மேலும் தம் நிலத்து விளையும் விளைப்பொருட்கள் தான் மட்டும் உண்டு வாழாது பிறரும் உணவின்றி வாழ்தல் கூடாது. ஆதலால் மற்றவர்களுக்கும் பகிர்ந்துக் கொடுத்து உண்டு வாழ்ந்தனர் என்பதும் இங்கு எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

### 5.2.3.6 விருந்தோம்பலில் மகளிர் மாண்புகள்

நெய்தல் நிலத்தை சார்ந்த மகளிர் விருந்தினர்களை எதிர்கொண்ட விதமும் விருந்து கொடுத்த விதமும் நெய்தல் கவிதையில் பதிவுச் செய்யப்பட்டுள்ளது. பரதவ மக்கள் விருந்தினரை அன்புடன் வரவேற்று, இன்சொல் கூறி இனிது பேணிப் பகுத்துண்டு வாழும் பண்புடையவர். இவர்கள் காலத்தையோ, பொழுதையோ, நோக்காத விருந்தோம்பும் பண்புடையவர்கள்.

"சங்க காலத்தில் ஊன் உண்ணும் வழக்கம் பழந்தமிழர்களிடையே பரவியிருந்தது. "வெள்ளாடு, செம்மறியாடு, மான், முயல், ஆமை, மீன் வகைகள்,

நண்டு, ஈயல், கோழி, காட்டுக்கோழி, காடை, உடும்பு முதலியவற்றின் இறைச்சியைத் தனியாகவோ, பாலும் அரிசியுங் கூட்டியோ சமைப்பார்கள்"[10] என கே.கே.பிள்ளை தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் என்ற நூலில் புலால் உணவு குறித்துத் தெளிவுப் படுத்துகின்றார்.

வெப்பம் அதிகம் தோன்றும் பகற்பொழுதில் விருந்தினரை வரவேற்பதற்காக நெய்தல் நில மகளிர் உணவு சமைத்து வைத்தனர். அதில் ஒரு கவளம் காக்கைக்கு பலியாக இட்டனர்.

அதை காகம் உண்டுவிட்டு மீன் கடையில் விற்பதற்காக வைத்த மீனை கவர்ந்துண்ணும். காக்கைக்கும் சோறு படைக்கும் வழக்கம் மிகவும் பழமையானது. மேலும் காக்கைக்கு பலியுணவாகப் படையலிட்டு விருந்தினர்க்கு உணவளித்து உபசரித்து மகிழும் வழக்கம் பண்டைக் காலத்தே நம் தமிழகத்தில் இருந்ததை இதன் வாயிலாக அறிய முடிகிறது. இத்தகைய விருந்தோம்பு பண்புகள் நிறைந்த இடமாக நெய்தல் நிலம் காட்சியளிப்பதை,

"கதிர்கால் வெம்பக் கல்காய் ஞாயிற்றுத்
திருவுடை வியல் நகர் வரு விருந்து அயர்மார்
பொற்றொடி மகளிர் புறங்கடை உகுத்த
கொக்கு உகிர் நிமிரல் மாந்தி எல் பட,
அகல் அங்காடி அசை நிழல் குவித்த
பச்சிறாக் கவர்ந்த பசுங் கட் காக்கை"[46] நற்.258 (3-8)

என்னும் பாடலடிகளால் சங்க புலவர் நக்கீரர் நெய்தல் நில விருந்தோம்பலைப் பதிவுச் செய்துள்ளார்.

விருந்தோம்பல் நடைபெறும் இடமே மகிழ்ச்சியானவை என புலவர்கள் நினைத்தனர். அழகிய குடியிருப்புகள் அங்கு காணப்பட்டன. அங்குள்ள மக்கள் வரும் விருந்தினர்களுக்கு அளவுக்கு அதிகமான உணவு பொருட்களைக் கொடுத்து உபசரித்தனர். விருந்தினர்க்குப் பகுத்துண்டு மகிழும் தன்மையும் விளங்குகிறது.

மகளிர் பல்வேறு பணிகளுக்கிடையிலும் விருந்தினரைக் எதிர்நோக்கிக் காத்திருப்பதை அரிய முடிகிறது. இச்சிற்றூரை பின் வரும் நெய்தல் திணை கவிதை காட்டுவதை,

"தூங்கல் ஓலை ஓங்கு மடற் பெண்ணை
மா அரை புதைத்த மணல் மலி முன்றில்
வரையாத் தாரம்மொடு வருவிருந்து அயரும்
தன் குடி வாழ்நர் அம் குடிச்சீறூர்
இனிது மன்றம்ம தானே"[47] நற்.135 (1-5)

என்னும் பாடல் அடிகள் விளக்குகின்றன. ஞாயிறு மறையும் மாலை வேளை வந்தது. பரதவர் மகள் ஒருத்தி விருந்தினர்களை எதிர்பார்த்துக் காத்திருந்தாள். மீனின் கொழுப்பால் ஆன நெய்யை ஊற்றி விளக்கேற்றி மனைக்கு ஒளியூட்டினாள். அகமும் முகமும் அன்புற மலர்ந்து விருந்தினர் வருகையை விரும்பி நோக்கிக் கொண்டிருந்தனர். இதனை,

"குண கடல் இவர்ந்து, குரூஉக் கதிர் பரப்பி
பகல் கெழு செல்வன் குடமலை மறைய
புலம்பு வந்து இறுத்த புன்கண் மாலை,
இலங்கு வளை மகளிர் வியல் நகர் அயர
மீன் நிணம் தொகுத்த ஊன் நெய் ஒண்சுடர்
கரை சேர்பு இருந்த கல்லென் பாக்கத்து"[48] நற்.215 (1-6)

என்னும் பாடல் அடிகள் மூலம் மதுரைச் சுள்ளம் போதனார் என்னும் சங்க புலவர் தண்டமிழ் வழங்க விளக்குகிறார்.

இல்லத்திற்கு விருந்தினர் வரவேண்டும் என்ற எண்ணத்தையும் அவ்விருந்தினருக்கு இனிய உணவு அளிக்க வேண்டும் என்ற விருப்பத்தையும் கொண்டிருப்பர்.

"…… மனை இருந்து

இருங் கழி துழவும் பனித் தலைப் பரதவர்

திண்திமில் விளக்கம் எண்ணும்"[49] நற்.372 (10-12)

பாடலில் மீன்வேட்டைக்குச் சென்ற தலைவன் விரைவில் திரும்பி வரவேண்டும் என்று எதிர்நோக்கிக் காத்திருக்கும், செய்தியும், இரவில் விருந்தினர் வந்தாலும் தலைவி சேர்ந்து மகிழ்ச்சியுடன் வரவேற்று விருந்து படைக்கும் செய்தியும் நற்றிணையில் இடம் பெற்றுள்ளதை அறிய முடிகிறது.

விருந்தோம்பலில் மகளிர் என்னும் இத்தலைப்பில் இந்நில மக்கள் விருந்தினரை உபசரிப்பதில் மிகவும் விருப்பத்துடன் காணப்பட்டனர். பரதவ மக்கள் காலத்தையோ, பொருளையோ நோக்காது விருந்தினரை இன்சொல்லோடு வரவேற்றனர். அதுமட்டுமன்றி விருந்தினருக்காக சமைத்து வைத்து காத்திருக்கும் மகளிர் அதில் ஒரு கவளத்தை காக்கைக்கு பலி உணவாக கொடுக்கும் நிகழ்வு காணப்படுகிறது.

இதன் முற்தலைப்பில் குதிரைக்கு உணவளித்தல் இடம் பெற்றது. இங்கு காக்கைக்கு உணவளித்தல் இடம் பெற்றுள்ளது. இப்போக்கு அம்மக்கள் அ.்.றிணை உயிர்களிடத்தும் அன்புடையராய் இருந்தனர் என்பதை தெளிவுப்படுத்துகிறது.

### 5.2.4 நீர் உணவு

நெய்தல் நிலத்து நீர் உணவு என்பது கள் ஆகும். பால் ஓரிடத்தில் மட்டும் பயின்று வந்திருக்கிறது. கடல் என்னும் நீரினால் சூழப்பட்ட நெய்தல் நிலத்தில் நீர் உணவு பயின்று வந்துள்ளது. குடிநீருக்கென்று தனி துறை உண்டு. இது நீர் உண்ணும் துறை என்று அழைக்கப்பட்டது. இதனை இயற்கைக் காட்சிகளுடன் புலவர் சித்தரிப்பதை,

"முன் நாள் போகிய துறைவன், நெருநை

அகல் இலை நாவல் உண்துறை உதிர்த்த

கனி கவின் சிதைய வாங்கிக் கொண்டுதன்

தாழை வேர் அளை, வீழ் துணைக்கு இடுவ”[50] அகம்.380 (3-6)

என்னும் பாடலடிகள் மூலம் மருதநில நாகனார் பதிவுச் செய்துள்ளார்.

### 5.2.4.1 பால்

பால் என்னும் நீருணவு மரம் வளர்வதற்கு பயன்பட்டது. தலைவி சிறுபருவத்தில் இருக்கும்போது வெள்ளிய மணலில் விளையாடினாள். அம்மணலில் புன்னை மரத்தின் விதையை அழுத்தினாள். அவ்விதை வேரூன்றி செடியாக முளைத்தது. அதனைக் கண்ட தலைவி நெய்யோடு கலந்த பாலை ஊற்றி இனிதாக வளர்த்த நிகழ்வை,

“விளையாடு ஆய்மொடு வெண் மணல் அழுத்தி,

மறந்தனம் துறந்த காழ் முளை அகைய

‘நெய் பெய் தீம் பால் பெய்து இனிது வளர்த்தது

நும்பினும் சிறந்தது. நுவ்வை ஆகும்’ என்று

அன்னை கூறினாள், புன்னையது நலனே”[51] நற்.172 (1-5)

என்னும் பாடல் வரிகள் புலப்படுத்துகின்றன.

### 5.2.4.2 கள்

“பொதுவாகக் கள் என்பது தென்னை பனை ஆகிய மரங்களிலிருந்து பெறப்படும் ஒரு வகை சாறாகும். அக்காலத்தில் வீடுகளிலேயே சமைத்த ஒரு வகைக் கள் ‘தோப்பி’ என வழங்கப்பட்டது”[52].

கள் உணவை பரதவ மக்கள் உண்டு களித்தனர். கடலில் சென்று மீன் பிடித்து வரும் பரதவர்களுக்கு இன்பமும், புத்துணர்ச்சியும் கள்ளில் தான் அடங்கியுள்ளது. அக்கள்ளில் பனைக்கள் மிகவும் முக்கியமானதாகக் கருதப்பட்டது. மீன் வேட்டை சென்றவர்க்கு மழை பொய்க்காமல் பெய்யும். அதனால் வலைகள் சிறப்பாக வலிமையாக இருக்கும். அதனால் கிடைத்தவற்றைப்

பரதவர் விற்பனைக்கு எடுத்து செல்வர். விற்று முடிந்தபின் பனைக்கள்ளை உண்பர். இதனை,

“வேட்டம் பொய்யாது வலைவளம் சிறப்ப

பாட்டம் பொய்யாது பரதவர் பகர,

இரும் பனந் தீம் பிழி உண்போர் மகிழும்”[53] நற்.38 (1-3)

என்னும் பாடல் அடிகள் மூலம் உலோச்சனார் என்னும் புலவர் பதிவு செய்துள்ளார். கள் குடிப்பவரை உவமையாகப் பயன்பட்டிருப்பதை,

“சுறவு மருப்பு அன்ன முட் தோடு ஒசிய

இறவு ஆர் இனக் குருகு இறை கொள இருக்கும்

நறவு மகிழ் இருக்கை நல் தேர்ப் பெரியன்,

கள் கமழ் பொறையாறு அன்ன”[54] நற்.131 (5-9)

என்னும் பாடலடிகள் மூலம் அறியலாம். கள் குடித்தல் பரதவர்களுக்குப் பெருமையாகும் என்பது இதன் மூலம் பெறப்படுகிறது.

மாலை வேளையில் பகலில் மீன் விற்ற பிறகு கிடைத்த கள்ளைக் குடித்து மகிழ்ந்து பொழுதை போக்குவர் பரதவர் மக்கள் இதனை,

“ஞான்ற ஞாயிறு குடமலை மறைய

மான்ற மாலை மகிழ்ந்த பரதவர்

இனிது பெறு பெரு மீன் எளிதினின் மாறி

அலவன் ஆடிய புலவு மணல் முன்றிற்

காமர் சிறுகுடிச் செல்நெறி வழியின்”[55] நற்.239 (1-5)

என்னும் பாடலடிகள் மூலம் குன்றியனார் என்னும் சங்கப் புலவர் விளக்குகிறார். களவுக்காலத்தில் பகற்குறியில் தலைவன் - தலைவி சந்திப்பு தடையுறும் வகையில் அமைந்தால் இரவுக்குறியீட்டில் சந்திப்பர். அச்சூழலைப் பதிவு செய்ய

விரும்பியப் புலவா் இரவில் பரதவா் கள் குடித்துக் களித்து உறங்கினா். இதனால் நெய்தல் நிலத்தின் ஊா்களும் உறங்கி அமைதியாயிற்று, இதனை,

"ஒலி அவிந்து அடங்கி, யாமம் நள்ளென
கலி கெழு பாக்கம் துயில் மடிந்தன்றே"[56] நற்.303 (1-2)

என்னும் அடிகளால் ஆலம்பேரிசாத்தனாா் நயப்படுத்துகிறாா். மற்றொரு பாடலில் பரதவா் தமது இல்லத்திற்கு அருகில் காணப்பட்ட புன்னைமர நிழலில் தங்கி இன்பம் பயக்கும் கள்ளை அருந்தி மகிழ்ச்சியடைவதை,

"கடல் மீன் தந்து, கானற் குவைஇ,
ஓங்கு இரும் புன்னை வரி நிழல் இருந்து
தேம் கமழ் தேறல் கிளையோடு மாந்தி
பெரிய மகிழும் துறைவன்"[57] நற்.388 (6-9)

என்னும் பாடல்வழிப் புலவா் பெருங்கண்ணனாா் புலப்படுத்துகிறாா். இங்ஙனம் பரதவ மக்கள் கள்ளருந்திக் களித்து சுயநலம் மறந்து மகிழ்ச்சியாக இருந்தனா்.

நீா் உணவு என்னும் தலைப்பின் வழி நீராகார உணவுகளை அம்மகள் விருந்தினருக்கு அளித்தனா் என்பதும் அந்நீா் உணவுகள் என்னென்ன என்பதும் இப்பகுதியில் கண்டுணா்ந்து சொல்லப்பட்டுள்ளது. பால், கள் என்ற இரண்டு நீா் உணவுகளும் இங்கு மிகுதியாக விருந்தில் இடம் பெற்றுள்ளன.

**5.2.4.3 மன்னா்களின் ஈகை சிறப்பு :**

நெய்தல் நில கவிதையில் மன்னா், குறுநில வேளீா்கள், வள்ளல்கள் ஆகியோாின் ஈகைகள் விளக்கப்படுகின்றன. இதற்கு காரணம் நெய்தல் நிலம் போா்க்களமாக இருந்ததே. இதனை,

"தும்பை தானே நெய்தலது புறனே"[58] தொல்.

என்னும் தொல்காப்பிய நூற்பா விளம்புகிறது.

#### 5.2.4.3.1 பெரியன்

அகநானூறு நூறாம்பாடல் புறந்தை என்னும் கடற்கரை நகரைக் குறிப்பிடும் போது பெரியன் என்னும் குறுநில மன்னன் குறித்து பாடுகிறது. அதில் தன்னைப் பாடி வருவபரைப் பரிவுடன் உபசரித்து பரிசுகள் பல வழங்கும் வள்ளல் பெருந்தகை ஆவான் என்று பதிவுச் செய்ததை,

“ஓடை ஒண்சுடர் ஒப்பத் தோன்றும்
பாடுநர்த் தொடுத்த கைவண் கோமான்
பரியுடை நல்தேர்ப் பெரியன். விரி இணர்ப்
புன்னைஅம் கானல் புறந்தை முன்துறை”[59] அகம்.100 (10-13)

என்னும் பாடலடிகள் சான்றாகின்றன.

நெய்தல் நிலத்தில் போர் நிகழ்ந்தன என்ற செய்தியினை இப்பகுதியில் கண்டுணர்ந்து சொல்லப் பெற்றுள்ளன. அப்போர் நிகழும் இடத்தில் வந்து பாணர்களும், புலவர்களும் மன்னர், வேளிர், வள்ளல் ஆகியோரிடத்து பாடிப் பரிசில் பெறும் நிலையும் இங்கு வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

## 5.3 தொகுப்புரை

நெய்தல் இலக்கியத்துள் கருப்பொருள் மிகுதியாக அமைந்துள்ளது. தலைவி, தலைவன், தோழி, தாய், தந்தை, தமக்கை என்று நீண்ட பாத்திர வகைகளின் கூற்றுக்கள் நயம்பட வந்துள்ளன. களவு கைக்கோளில் புனைந்த பாடல்கள் அனைத்தும் கவிதைச் சுவை நிரம்பியதாகக் காணப்படுகின்றன. நீலத்திரை என்று சொல்லும் அளவிற்கு கடலும் கடல் சார்ந்த இடமே நெய்தல் கவிதையின் பின்னணியாக அமைந்து சிறப்பு செய்கிறது. கடல் அலையை, கானலை மரஞ்செடி கொடிகளை, பூக்களை, புள்ளினங்கள் ஆகிய இயற்கைப் பொருட்களை இயல்பு மாறாமல் படைத்து கவிதையை புலவர் சிறப்பாக செய்துள்ளனர்.

நெய்தல் நில விளைப் பொருளைப் பண்டமாற்று முறையில் வாணிபம் செய்து அதன் மூலம் கிடைத்தப் பொருட்களைக் கொண்டுவந்து விருந்தினர்களுக்கு உணவு கொடுத்தனர். அவற்றுள் நெல் உணவு முக்கியமானதாகக் கருதப்பட்டது. அரிசி சோற்றோடு மீன் கலந்து உண்ட நிலையை நற்றிணை நெய்தல் கவிதைகள் படம்பிடித்துக் காட்டுகின்றன. உப்பு, மீன் போன்ற பொருட்களை வறியவர்களுக்குக் கொடுத்த பின்னே விற்கச் செல்லும் நிலையையும் புலவர்கள் தம் கவிதைகளில் சித்தரித்துள்ளனர்.

இறைச்சி உணவாக மீன்களே நெய்தல் நிலத்தில் திகழ்ந்தன. குறிப்பாக சுறாமீன், இறாமீன் பொறித்த நிலை கூறாவிட்டாலும் சுட்டநிலையை நெய்தல் இலக்கியம் சுட்டுகிறது. மீன் கருவாட்டை “மீன்காய்தல்” என்று இலக்கியப்படுத்தியிருப்பது புலவர்களின் கவி திறமே ஆகும். பரதவர்களின் இரவு நேரங்களிலும் மீன் பிடிப்பர். விளக்கு எரிப்பொருள் என்பது மீனின் கொழுப்பாகும் வரும் விருந்தினர்களுக்கு மீன் உணவு வழங்கப்பட்டிருந்தது.

மற்ற நிலத்தைப் போலவே பரதவ மக்களும் கள் அருந்தினார்கள். வேலை செய்த களைப்பை மறப்பதற்கும் இனிமையாக புத்துணர்ச்சியாக இருப்பதற்கும் கள்

பயன்படுத்தப்பட்டிருந்தன. குறுநில மன்னர்களின் ஈகை திறமும் நெய்தல் பாடல் வழி அறியலாம். நெய்தல் நில மக்கள் அன்றாட உணவிற்கு வேண்டி வாணிபம் செய்து திரைகடல் ஓடி திரவியம் தேடு என்னும் பழமொழிக்கேற்ப வாழ்ந்தனர் என்று கூறினும் ஐயமில்லை.

நீர் உணவு என்னும் தலைப்பின் வழி நீராகார உணவுகளை அம்மகள் விருந்தினருக்கு அளித்தனர் என்பதும் அந்நீர் உணவுகள் என்னென்ன என்பதும் இப்பகுதியில் கண்டுணர்ந்து சொல்லப்பட்டுள்ளது. பால், கள் என்ற இரண்டு நீர் உணவுகளும் இங்கு மிகுதியாக விருந்தில் இடம் பெற்றுள்ளன.

நெய்தல் நில மக்களின் விருந்தோம்பல் சிறப்பாக நடைபெற்றதை அறிய முடிகிறது. ஐந்திணையின் கடைசியாக உள்ள பாலைத் திணையில் நிலத்தின் தன்மைகள், அரிசி உணவுகள் நீர் உணவுகள், மக்களின் விருந்தோம்பல், வீரர்களின் விருந்தோம்பல் செய்திகள் கூறப்படுகின்றன.

# குறிப்புகள்

1. ச.வே.சு (ப.ஆ) தொல்காப்பியம் தொகுதி - 2 - ப.7
2. மதுரைத் தமிழ்ப் பேரகராதி இரண்டாம் பாகம் - ப.101
3. க்ரியாவின் தற்கால தமிழ்கராதி - ப.627
4. ச.வே.சு.தொல்காப்பியம் - ப.8
5. மேலது - பக்.10, 11
6. மேலது - ப.11
7. துரை. அரங்கசாமி (ப.ஆ) சங்ககாலச் சிறப்பு பெயர்கள் - ப.270
8. ச.வே.சு (ப.ஆ) தொல்காப்பியம் பொருளதிகாரம் பவானந்தம் பிள்ளை பதிப்பு - ப.56
9. இராமநாத செட்டியார் (ப.ஆ) சங்ககாலத் தமிழர் வாழ்வு - ப.62
10. துரை. அரங்கசாமி (ப.ஆ) சங்ககாலச் சிறப்பு பெயர்கள் - ப.271
11. மேலது - ப.277
12. ந. செல்வராசு (ப.ஆ) சங்க இலக்கியம் வாசிப்பு - ப.165.
13. அ.தெட்சிணாமூர்த்தி (ப.ஆ) ஐங்குறுநூறு - பா.111 (1-3), ப.245
14. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ) நற்றிணை - பா 15 (1-3), ப. 26
15. மு.சண்முகம்பிள்ளை (ப.ஆ) குறுந்தொகை - பா. 5 (3-5), ப. 6
16. அ.தெட்சிணாமூர்த்தி (ப.ஆ) ஐங்குறுநூறு - பா. 190 (1-3), ப.402
17. மு.சண்முகம்பிள்ளை (ப.ஆ) குறுந்தொகை - பா.269 (5-7), ப.236
18. அ.மாணிக்கனார் (ப.ஆ) அகநானூறு - பா. 60 (1-6), ப. 315
19. மேலது - பா. 100 (6-7), ப. 527
20. மேலது - பா.110 (12-17), ப.177
21. மேலது - பா.340 (12-15), ப 132
22. மேலது - பா.390 (1-10), பக்.300, 301

23. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.183 (1-4), பக்.335, 336

24. மேலது, பா.254 (6-9), ப.467

25. மு.சண்முகம்பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, பா.304 (4-6), ப.268

26. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.50 (1-3), ப.272

27. மு.சண்முகம்பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, பா.123 (4-5), ப.240

28. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.199 (5-9), பக்.364, 365

29. மேலது, பா.219 (4-9), ப. 402

30. மேலது, பா.175 (3-4), ப. 32

31. மேலது, பா.215 (3-6), ப.395

32. மு.சண்முகம்பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, பா.320 (1-4), ப. 282

33. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.45 (3-7), ப. 78

34. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.320 (1-4), ப. 65

35. மு.சண்முகம்பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, பா.269 (3-6), ப. 236

36. அ.தெட்சிணாமூர்த்தி (ப.ஆ), ஐங்குறுநூறு, பா.180 (1-4), ப.378

37. மு.சண்முகம்பிள்ளை (ப.ஆ), குறுந்தொகை, பா.128 (1-3), ப.248

38. அ.தெட்சிணாமூர்த்தி (ப.ஆ), ஐங்குறுநூறு, பா.165 (1-2), ப. 325

39. மேலது, பா.188 (1-2), ப. 398

40. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.30 (1-9), ப. 18

41. மேலது, பா.70 (1-4), ப. 357

42. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.127 (4-5), ப. 232

43. மேலது, பா. 159 (6-8), ப. 292

44. மேலது, பா. 311 (4-7), ப. 573

45. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.10 (11-12), ப.12

46. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா. 258 (3-8), ப. 475

47. மேலது, பா.135 (1-5), பக்.247, 248

48. மேலது, பா.215 (1-6), பக்.394, 395

49. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.372 (10-12), ப. 686

50. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா. 380 (3-6), ப. 268

51. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா. 172 (1-5), ப. 315

52. மேலது, பா. 38 (1-3), ப. 66

53. மேலது, பா. 131 (5-9), ப. 240

54. மேலது, பா. 239 (1-6), ப. 439

55. மேலது, பா. 303 (1-2), ப. 556

56. மேலது, பா. 388 (6-9), ப. 716

57. ச.வே.சு. (ப.ஆ), தொல் பொருள், புறத்.14, ப. 33

58. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.100 (10-13), ப.486

# இயல் - 6

## பாலை நிலத்தில் விருந்தோம்பல் கூறுகள்

### 6.0 முன்னுரை

தொல்காப்பியர் காலத்திற்கு முன் தமிழகத்துப் புலவர்கள் நிலத்தை குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நானிலமாகப் பகுத்துப் பாடினர். தொல்காப்பியர் காலத்தில் நடுவண் திணை என்று குறிக்கப்பெறும் திணையே பாலை ஆகும். பாலைக்கு நிலம் கூறவில்லை. பொழுது, உரிப்பொருள் கருப்பொருள் போன்றவற்றைக் கூறியுள்ளதாக அறிய முடிகிறது. இப்பாலை திணையின் பாடல்களை அடிப்படையாக்கி அப்பாடல்களில் பயின்று வந்த விருந்தோம்பல் கூறுகளை ஆய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

### 6.1 பாலை நிலத்தோற்றம்

ஐந்தாவது நிலமாக குறிக்கப்பேறும் 'பாலை நிலம்' தன்னிலமன்று வன்நிலம். அது இயற்கையான நிலப்பரப்பன்று. கோடையின் கடும் வெப்பத்தால் முல்லையும், குறிஞ்சியும் திரிந்து செயற்கையாக உருப்பெறும் நிலமே பாலை நிலமாகும். இவ்வாறு இந்நிலப்பரப்பு உருவாவதை,

பாலை நிலத்தோற்றம் குறித்த செய்திகளை தொல்காப்பியம் பயிலவில்லை. பிற்காலத்தில் தோன்றிய சிலப்பதிகாரம் பின்வருமாறு கூறுகிறது.

"முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து
நல்லியல்பு இழந்து நடுங்குதுயர் உறுத்துப்
பாலை என்பதோர் படிவங்கொள்ளும்"[1] சிலம்பு : காடுகாண் (64-66)

என்னும் சிலப்பதிகாரம் அடிகளால் உணரலாம்.

### 6.2 பாலை திணையின் முப்பொருட்கள்

பாலை திணையின் முதற்பொருளில் ஒன்றான நிலம் "மணலும் மணல் சார்ந்த இடமும்".

### 6.3 பாலைத் திணையின் கருப்பொருட்கள்

| | | |
|---|---|---|
| தெய்வம் | - | கொற்றவை |
| உணவு | - | வழிப்பறி செய்த உணவுப்பொருட்கள் |
| விலங்கு | - | வலிமையற்ற யானை, வலிமையற்ற புலி |
| மரம் | - | பாலை, இருப்பை, கள்ளி, சூரை |
| பறவை | - | கழுகு, பருந்து |
| பறை | - | ஆறலைப் பறை |
| தொழில் | - | வழிப்பறி செய்தல் |
| யாழ் | - | பாலைப் பண் |
| ஊர் | - | குறும்பு |
| நீர் | - | நீர் அற்ற கேணி, நீர் அற்ற சுனை |
| பூ | - | மரா அம்பூ"[2] தொல் (64-66) |

என்னும் உரை விளக்கத்தால் அறியலாம். பாலைத் திணையின் உரிப்பொருள் என்பது "பிரிதலும் பிரிதல் நிமித்தமும்". சங்க இலக்கியத்தில் பாலைத் திணைப் பாடல்கள் மொத்தம் எட்டுத் தொகையில் 530 பாடல்களும், பத்துப்பாட்டில் பட்டினப்பாலை என்னும் தலைப்பில், 301 அடிகளைக் கொண்ட பாடல் ஒன்றும் காணப்படுகிறது. சங்க அக இலக்கியத்தில் அதிகமாக பதிவு செய்யப்பட்ட பாடல்களும் திணை பாலைத் திணை என்பதில் எவ்வித ஐயமுமில்லை. இப்பாலைத் திணையில் பயின்று வந்த பாடல்களில் காணும் விருந்தோம்பல் கூறுகளை ஆய்வுச் செய்வதாக இப்பகுதி அமைகிறது.

### 6.4 சங்க இலக்கியங்கள் பதிவுச் செய்யப்பட்ட பாலை நிலம்

பாலைத் திணைக்கு முதற்பொருளில் நிலத்தைச் சுட்டாமல் பொருளையும், உரிப்பொருளையும் சுட்டியுள்ளார். தொல்காப்பியர் நடுவண் திணை என்னும் சொல்லாட்சியைத் தொல்காப்பியத்தில் காணமுடிகிறது. இதனை,

"நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு

முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே"[3] தொல் (ப.8)

என்னும் நூற்பாவுக்கு உரையாசிரியர்கள் அனைவரும் பாலைத் திணையைக் குறிப்பிடுவதாக சுட்டுவதும் இங்கு கவனிக்கபபடும் கருத்தாகும். இங்ஙனம் தொல்காப்பியர் காலத்தில் நடுவுநிலைத் திணை அறிமுகமாகி சங்க காலத்தில் பாலைத் திணையாக உருப்பெற்றுது என்று கூறலாம். சங்க இலக்கியங்களில் பாலைத் திணையின் நிலத்தை மூன்று வகையாகப் பிரிக்கலாம்.

1. குறிஞ்சி மலைப்பகுதி
2. முல்லைக் காடுப்பகுதி
3. பாலை நில மக்கள்

என்பனவாகும்.

### 6.4.1 குறிஞ்சி மலைப்பகுதி

பாலைத்திணை கவிதையில் குறிஞ்சி நிலப்பகுதி விரவிவந்துள்ளது. குறிஞ்சி நிலத்தில் செடிகள், கொடிகள், மரங்கள், காய்கனிகள் போன்றவை குறிக்கப்பட்டுள்ளன. எட்டுத்தொகை, அக இலக்கியங்கள் காட்டும் பாலைத்திணைக்கு பத்துப்பாட்டு உணர்த்தும் பாலைத் திணைக்கும் எடுத்துரைப்பு முறையிலும், பாடுப்பொருள் முறையிலும் வேறுபாடுகள் உண்டு என்பதை அறியலாம்.

பாலைப்பாடலில் குறிஞ்சி நிலம் பயின்று வந்துள்ளதை,

"அழுந்துபட வீழ்ந்த பெருந் தண் குன்றத்து,

ஒலி வல் ஈந்தின் உலவைஅம் காட்டு

ஆறு செல் மாக்கள் சென்னி எறிந்த"[4] நற் பா.2 (1-3)

என்னும் நற்றிணை பாடலில் குறிஞ்சி நிலம் இடம் பெற்றுள்ளது. குன்றம் என்பது மலைச் சார்ந்த பகுதியாகும். மேலும் அகநானூறு பாடலும்,

"கான யானை கவின்அழி குன்றம்

இறந்து பொருள் தருதலும் ஆற்றாய்; சிறந்த"[5] அகம் பா.4 (4-5)

என்னும் அடிகளும் சான்றாக அமைகின்றன. குறிஞ்சி நிலத்தில் தலைவியின் களமாகவும், பிரிதல் உரிப்பொருளில் தலைவனின் களமாகவும் காட்சிப்படுத்தப் பட்டுள்ளது. எனவே குறிஞ்சி நிலத்தின் பழக்கவழக்கங்களும் பாலைத் திணை பாடல்களில் காணப்படுகிறது.

### 6.4.2 முல்லைக் காட்டுப்பகுதி

பாலைத்திணை பாடல்களில் முல்லைத் திணை காட்டு நிலப்பகுதியும் சுட்டப்பட்டுள்ளதை,

"பாயல் கொண்ட பனிமலர் நெடுங்கண்

பூசல் கேளார் சேயர் என்ப

இழை நெகிழ் செல்லல் உறீஇ

கழை முதிர் சோலைக் காடு இறந்தோரே"[6] ஐங்-315 (1-4)

என்ற ஐங்குறுநூறு பாடல் நயமாக விளக்குகிறது. காட்டின் கடுமையைப் பின்வரும் கலித்தொகைப் பாடல் விளக்கும்,

"பாஅல் அம்செவிப் பணைத் தாள் மாநிரை

மாஅல் யானையொடு மறவர் மயங்கித்

தூறு அதர்ப்பட்ட ஆறு மயங்கு அருஞ்சுரம்

இறந்து, நீர் செய்யும் பொருளினும்"[7] கலி-5 (1-4)

என்னும் பாடல் அடிகள் சான்று காட்டுகிறது. 'அருஞ்சுரம்' என்று கடுமையான காட்டைப் புலவர் விளக்கியுள்ளார். இங்ஙனம் சங்க இலக்கியம் காட்டும் பாலைத் திணைப் பாடல்கள் குறிஞ்சி திணையையும், முல்லைத் திணையையும் அடிப்படையாகக் கொண்டு அமைகின்றன.

### 6.4.3 பாலை நில மக்கள்

பாலை நிலத்துக்கு உரிய மக்களை அழைக்கும் முறைமைகளை,

“இந்நிலத்து வாழ்ந்த மக்களில் உயர்ந்தோர் விடலை, காளை, மீளி, எயிற்றி எனப் பெயர் பெற்றனர். பொதுமக்கள் எயினர், எயிற்றியர், மறவர், மறத்தியர்”[8] என வழங்கப் பெற்றனர் என்று இராமநாதன் செட்டியர் குறிப்பிடுகிறார். சங்க இலக்கியத்தில் பயின்று வந்த பாலை நில மக்களில் மன்னர்களும், எயினர் தலைவர்களும் குறிக்கப் பெற்றுள்ளனர்.

#### 6.4.3.1 மழவர்கள்

நற்றிணைப் பாடல் மூன்றில் மழவர் என்றும் இனமக்கள் குறிக்கப் பெற்றுள்ளனர். கவிதையில் “உழவர்” என்றும் அதற்கான விளக்கவுரையில் மழவர் என்றும் குறிக்கப் பெற்றுள்ளனர். இதனை,

“வில் ஏர் உழவர் வெம் முனைச் சீறூர்ச்
சுரன்முதல் வந்த உரன் மாய் மாலை
உள்ளினென் அல்லெனோ”[9] நற்.3 (5-7)

என்னும் பாடல் அடிகள் மூலம் உழவர்கள் ஏர் உழுபவர்கள் மழவர்கள் என்றும் அழைக்கப்படுவதை அறியலாம்.

#### 6.4.3.2 உழவன்

குறுந்தொகை நூற்றி முப்பத்தொன்பதாம் பாடலில் ‘ஓரேருழவன்’ என்ற குறிப்பு காணப்படுகிறது.

இப்பாடலில் உவமையாக உழவன் என்னும் சொல் காணப்பட்டாலும் பாலை நிலத்து பயின்று வந்த மக்களாகவே காணப்படுவர். காரணம் திணை மயக்கம் ஆகும். வந்த திணையின் பயன் என்பதால் இங்கு பாலைத்திணையின்கண் அடங்கலாம்.

“நெடுஞ்சேண் ஆர்இடை யதுவே நெஞ்சே

ஈரம்பட்ட செவ்விப் பைம்புனத்து

ஓர்ஏர் உழவன் போல”[10] குறு-131 (3-6)

என்னும் பாடல் அடி மூலம் உணரலாம்.

### 6.4.3.3 மறவர்கள்

சங்க இலக்கிய பாலைத் திணைப் பாடல்களில் அதிகமாக குறிக்கப் பெற்ற மக்கள் மறவர் இனத்தவரே. மறவர் இனத்தவர் திருநெல்வேலி, மதுரை போன்ற மாவட்டங்களில் வாழ்கின்றனர். பிராமணர் மக்களிடம் சிறிதும் தொடர்பில்லாதவர். மறவர்கள் குறித்து, ந.சி. கந்தையாப்பிள்ளை பின்வருமாறு கூறுகிறார்.

“மறவர் என்னும் சொல் மறம் என்னும் அடியாக பிறந்தது. கள்ளரின் உட்பிரிவில் மறவரும் காணப்படுகின்றனர். மறவரின் தலைவன் சேதுபதி எனப்படுபவன். மறவர் பெரும்பாலும் அரசரின் கீழ் போர் வீரராக விருந்தனர்”[11] என்று மறவர்களின் நிலைக்குறித்து பதிவு செய்துள்ளார். அகநானூறு பாடல் ஒன்று மறவர் இன மக்களைக் குறிப்பிடுவதை,

“மன்று நிறை பைதல் கூர, பல உடன்

கறவை தந்த கடுங்கால் மறவர்

கல்லென் சீறூர் எல்லியின் அசைஇ”[12] அகம்.63 (11-13)

என்னும் பாடல் அடிகள் கந்தையாப்பிள்ளையின் உரைநடையுடன் புலப்படுத்துவதாக அமைகிறது. மறவர்களை அரசனுக்கு ஈடாக போற்றும் பழக்கம் இருப்பதை அறிய முடிகிறது.

### 6.4.3.4 உப்பு வணிகர்

பாலை நிலத்தில் உப்பு வணிகர்கள் குறித்த குறிப்புகள் விரவிக் காணப்படுகின்றன. நெய்தல் நிலத்தின் தொழிலில் ஒன்று உப்பு விளைத்தலும், அதை விற்று உணவு சேகரித்தல் என்பதுமாகும். பாலைத் திணையில் குறிப்பிடும்

உப்பு வணிகர்கள் நெய்தல் நிலத்தவராக இருக்கலாம். அவர்கள் எருது பூட்டிய வண்டியில் அமர்ந்து வாணிப போக்குவரத்து நிகழ்த்தினர். இவர்களை உமணர்கள் என்றும் அழைப்பர். இதனை,

"கோடை ஓற்றினும் வாடா தாகும்

கவணை அன்ன பூட்டுப்பொருது அசாஅ

உமண் எருத்து ஒழுகைத் தோடுநிரைத்தன்ன"[13] குறு-388 (2-4)

என்னும் குறுந்தொகை அடிகள் தெளிவுறுத்துகிறது. இதைத் தவிர பிற வணிகரும் பாலை நிலத்தில் வந்துள்ளதை,

"வேற்றுமுனை வெம்மையின் சாத்து வந்து இறுத்தென

வளைஅணி நெடுவேல் ஏந்தி

மிளைவந்து பெயரும் தண்ணுமைக் குரலே"[14] குறு-390 (3-5)

என்னும் பாடல் அடிகள் மூலம் பாலை நிலத்தில் ஆறலை கள்வர்கள் செல்வது அல்லாமல் பிறவணிககரும், பாணர்களும் பாலை நிலத்தை பயன்படுத்தியதை அறியமுடிகிறது.

### 6.4.3.5 ஆறலை கள்வர்கள்

இயற்கையின் தன்மைக்கு ஏற்ப தொழில் செய்ய முடியாமல் வருந்தும் ஆடவர்கள் பாலை நிலம் வழி செல்வோரின் பொருட்களைக் கவர்ந்திழுப்பர். இவர்களை பாலைநில கவிதைகள் ஆறலை கள்வர்கள் என்று குறிப்பிடுகிறது. பாலை நில மக்களின் தொழில் இதுவாகும். இதுகுறித்து,

"கள்வர் ஆக்களைக் கவர்தலையே"[15]

தமது தொழிலாக உடைய ஒரு குடியினர். அவர்களுடைய காட்டில் யாரேனும் அறியாமல் புகுந்துவிட்டால் எளிதில் அதிலிருந்து மீண்டுவர முடியாது என்னும் உரைநடை மூலம் விளக்குகிறார். இங்ஙனம் பாலைநில மக்களின் நிலையை அறியலாம். கள்வர் குறித்து அகநானூறு பாடல் பின்வருமாறு பதிவு செய்வதை,

“கழல் புனை திருந்து அடிக் கள்வர் கோமான்

மழ புலம் வணக்கிய மா வண்புல்லி

விழவுடை விழுச் சீர் வேங்கடம்”[16] அகம்-61 (11-13)

என்னும் பாடல் அடிகள் மூலம் வேங்கடம் என்னும் இடத்தில் வாழ்ந்து வந்தனர் என்பதை உணர்த்துகிறது. பாலை நிலத்தில் செல்லும் போது வழி தவறிச் செல்லும் நிலை ஏற்படும். அங்கு மக்கள் செல்லும் வழியில் ஆறலை கள்வர்கள் பொருட்களை கவர்ந்து சென்றால் அவர்களை பிடிப்பது கடினம் என்பதும் பாலை நிலத்தில் கள்வர்கள் மட்டுமே வாழ்ந்து வந்தனர் என்பதை அறிய முடிகிறது.

## 6.5 பாலை நிலத்தில் உணவு வகைகள்

பாலை நிலத்தில் உணவு வகைகளான இறைச்சிகள், அரிசி சோறு, பலி உணவுகள் போன்றவை குறிப்பிடத்தக்கன. இவ்வுணவுகளைத் தாமும் உண்டு பிறர் உண்ணும்படி மீதி உணவுகளை திறந்து வைப்பர். இங்ஙனம் பாலை நில மக்களின் உணவு முறைகள் அமைந்துள்ளன. உணவுகளை அடிப்படையாக்கி பாலை நில விருந்தோம்பல் கூறுகளை மூன்று வகையாகப் பிரிக்கலாம். அவை,

1. அரிசி உணவுகள்
2. இறைச்சி உணவுகள்
3. நீர் உணவுகள்

என்பனவாகும்

### 6.5.1 அரிசி உணவுகள்

பாலை நிலத்தில் அரிசி உணவுகள் குறித்த பதிவுகள் சிறிய அளவிலேயே காணப்படுகின்றன. பெரும்பாலான பாலை நிலக்கவிதைகள் புலால் உணவையே சித்தரித்துக் காட்டுகின்றன. உணவு உற்பத்தி பாலை நிலப்பகுதியில் இடம் பெற்றதாக பாடல்கள் பயின்று வரவில்லை. ஆனால் பட்டினப்பாலை சோறு வடித்த

நிகழ்வைப் படம் பிடித்துக் காட்டும். இன்று "சாதம்" என்று நாகரீகமாக அழைக்கப்படும் சோறு சங்க இலக்கியங்களில் பின்வருமாறு அழைக்கப்பெற்றதை,

"சோறு என்பதற்கு அடிசில், அழினி, கூழ், அவிழ், கொன்றி, நிமிரல், புழுங்கல், பொம்மன், மிதவை எனப் பல சொற்கள் இருந்தன. பச்சரிசியால் பொங்கப்பட்ட சோற்றைப் பொங்கல் என்றும் புழுங்கல் அரிசியால் பொங்கப்பட்ட சோற்றைப் புழுங்கல் என்றும் அழைக்கப்பட்ட வழக்கம் இருந்திருக்கிறது"[17] என்று அ.கா.பெருமாள் தம் நூலில் நயமாக பதிவு செய்துள்ளார். சோறு 'பரிசோறு' என்று அழைக்கப்பட்டிருந்தது என்பதை "பெருஞ்சோற்று உதிய சேரலாதன்" என்னும் சொல்லாட்சியால் அறியலாம். "சிறுச்சோறு" என்பது சிறுமிகளால் ஆக்கப்பட்ட சோறு எனவும் பொருள் கொள்ளலாம் என்று தோன்றுகிறது. நற்றிணை பாடல் ஒன்றில் யானை வெண்ணிற நெல்லை தின்ற காட்சியை,

"வெண்ணெல் அருந்திய வரிநுதல் யானை
தண் நறுஞ் சிலம்பில் துஞ்சும்
சிறியிலைச் சந்தின வாடு பெருங் காட்டே"[18] நற். பா.7 (7-10)

என்னும் பாடல் அடிகள் மூலம் நல்வெள்ளியார் காட்சிப்படுத்துகிறார். இக்கவிதையில் யானை நெல் உண்ணும் அளவிற்கு சிறந்த நிலமாக பாலை நிலம் காட்சிப்படுத்தப் பட்டுள்ளது.

சங்க கவிதையில் சோற்றிறைக் குறித்து கூறும்போது பின்னேட்டாக பல பெயர்கள் பயின்று வந்துள்ளன. இதனை உணவு பண்பாடு என்னும் நூலில்,

| | | |
|---|---|---|
| "ஊண்சோறு | : | ஊனும் சோறும் |
| கொழுஞ்சோறு | : | கொழுப்பு நிணம் கலந்து ஆக்கியது |
| செஞ்சோறு | : | சிவப்பு அரிசிச் சோறு |
| நெய்ச்சோறு | : | நெய் கலந்த சோறு |
| புளிச்சோறு | : | புளிக்குழம்பு கலந்தசோறு |

பாற்சோறு : பால் கலந்த சோறு

வெண்சோறு : வெள்ளிய அரிசிச் சோறு”[19]

என்று விளக்குகிறார்.

அரிசி வகைகளுள் ஒன்று மூங்கில் அரிசி. மூங்கிலில் விளைவதால் மூங்கிலரிசி என்றழைக்கப்படுகிறது. பாலை நிலத்தில் இயற்கையாகவே நெற்கதிர்கள் காணப்படுகின்றன. இங்கு மூங்கில் நெற்கள் குறித்து மாமூலனார் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளதை,

“அழல் போல் வெங்கதிர் பைது அறத்தெறுதலின்
நிழல் தேய்ந்து உலறிய மரத்த; அறை காய்பு
அறுநீர்ப் பைஞ் சுனை ஆம் அறப் புலர்தலின்
உரு நெல் பொரியும் வெம்மைய”[20] அகம்-1 (10-13)

என்னும் பாடல் அடிகளால் பதிவுச் செய்கிறார். பாலை நிலத்தில் நெற்கதிர்கள் தானாகவே வளர்ந்துள்ளதை,

“பைம் புறப் புறவின் செங் காற் சேவல்
களரி ஓங்கிய கவை முடக்கள்ளி
முளரி அம் குடம்பை ஈன்று இளைப்பட்ட
உயவு நடைப் பேடை உணீஇய, மன்னர்
முனை கவர் முது பாழ் உகு நெற் பெறூஉம்”[21] நற்-384 (1-5)

என்னும் கவிதை அடிகளால் பாலை பாடிய பெருங்கடுங்கோ சித்திரித்துள்ளார்.

### 6.5.1.1 புல்லரிசி

புல்லில் விளையும் அரிசி புல்லரிசி. பாலை நில மக்கள் புல்லரிசியை பயன்படுத்திய முறைமையை,

“கோடை நீடலின், வாடு புலத்து உக்க
சிறு புல் உணவு, நெறி பட மறுகி

நுண்பல் எறும்பி கொண்டு அளைச்செறித்த

வித்தர் வல்சி, வீங்கு சிலை மறவர்"[22] அகம்-377 (1-4)

என்னும் நற்றிணை பாலைத் திணைப் பாடல் பறைச் சாற்றவதாக அமைகிறது. பாலை நில மக்கள் நெல்லைக் குத்தி அரிசியாக்கி, அதனை சுனை நீருடன் சேர்த்து மண் பானையில் ஏற்றுவர். அரிசி வெந்தவுடன் அதனுடன் பால் சேர்த்து, வருபவர்களுக்கு அளிப்பர். இதனை,

"பண்ணை வெண்பழத்து அரிசி ஏய்ப்ப

சுழல்மரம் சொலித்த சுளகு அலைவெண்காழ்

தொடிமாண் உலக்கை ஊழின் போக்கி

உரல்முகம் காட்டிய சுரைநிறை கொள்ளை

ஆங்கண் இருஞ்சுனை நீரொடு முகவர

களிபடு குழிசிக் கல்அடுப்பு ஏற்றி

இணர்ததை கடுக்கை ஈண்டிய தாதின்

குடவர் புழுக்கிய பொங்கு அவிழ்ப் புன்கம்

மதர்வை நல்ஆன் பாலொடு பகுக்கும்"[23] அகம்-393 (9-17)

என்னும் பாடல் வரிகளால் அறியலாம்.

### 6.5.1.2 செந்நெற்சோறு

பாலை நில மக்கள் செந்நெல்லினால் பெறப்பட்ட அரிசியில் இருந்து சோறு சமைத்து உண்டனர். இச்சோற்றுடன் நெய்கலந்து உண்பதை,

"ஆசுஇல் தெருவின் நாய்இல் வியன்கடை

செந்நெல் அமலை வெண்மை வெள் இழுது

ஓர்இல் பிச்சை ஆரமாந்தி"[24] குறு-277 (1-3)

என்னும் பாடல் அடிகளால் அறியலாம். மேலும் உணவை பிச்சையிடும் வழக்கம் இருந்ததை அறியலாம். நெய் கலந்த சோற்றை பிச்சை இடுவதன் மூலம்

வளமையான உணவுகளைப் பாலை நில மக்கள் பெற்றிருந்தனர் என்பதை அறியலாம். இங்ஙனம் பாலை நில மக்கள் அரிசி உணவுகளை உண்டும், பிறருக்கும் கொடுத்தும் வாழ்ந்தனர்.

### 6.5.2 இறைச்சி உணவுகள்

பாலை நில கடவுளான காளிக்குப் பலியிடும் பழக்கத்தை அந்நில மக்கள் மேற்கொண்டிருந்தனர். அதில் சைவ உணவு, அசைவ உணவு என இரண்டும் கலந்திருந்தது. பெரும்பாலும் ஆடு, மாடுகளை வெட்டி தங்கள் கோரிக்கைகளை முன்வைத்தனர். மழை பெய்தல் வேண்டியும் பலி நிகழ்த்தப்பட்டதைப் பாலை நில பாடல்கள் பதிவுச் செய்துள்ளன. பேய் பலிச்சோற்றை உண்பதை,

"வேனில் முருக்கின் விளை துணர்அன்ன
மாணா விரல வல் வாய்ப் பேஎய்
மல்லல் மூதர் மலர்ப் பலி உணீஇய"[25] நற்-73 (1-3)

என்னும் பாடல் அடிகளால் பலிச்சோறு ஊன் கலந்து காணப்படும் என்பது புலனாகின்றது. பேய் உண்பது அக்கால மக்களின் நம்பிக்கை ஆகும்.

#### 6.5.2.1 பலிச்சோற்றைக் காக்கை உண்ணுதல்

காகம் நம் முன்னோர்கள் என்பது இந்து மத சமய நம்பிக்கைகளின் ஒன்றாகும். நற்றிணைப்பாடலில் காக்கை பலி சோறு உண்பதை விளக்க வந்த புலவர் அதை சோழ நகரத்தோடு இணைத்து ஆவணப்படுத்துவதை,

"மாசு இல் மரத்த பலி உண் காக்கை
வளி பொரு நெடுஞ் சினை தளியொடு தூங்கி
வெல் போர்ச் சோழர் கழா அர்க் கொள்ளும்
நல் வகை மிகு பலிக் கொடையோடு உருக்கும்
அடங்காச் சொன்றி, அம்பல் யாணர்
விடக்குடைப் பெருஞ் சோறு உள்ளுவன் இருப்ப"[26] நற்-281 (1-6)

என்னும் பாடல் அடிகள் காக்கைக்குச் சோறு தின்னும் முறையை சோழரின் கழார் என்னும் ஊரோடு தொடர்புபடுத்தி புலவர் உனரக்கிறார்.

### 6.5.2.2 பலியிடும் குயவன்

பலியிடும் போது அங்கு குலம், பொருளாதாரம் போன்றவற்றை நினைப்பதில்லை. நற்றிணை, பாலைத்திணை பாடலில் குயவன் பலியிட்ட முறை குறித்த செய்தி வருகின்றது. பலியிட்டப்பின் காக்கைக்கு பலிச்சோறு கொடுக்கும் பழக்கம் இருந்ததை,

"மணிக் குரல் நொச்சித் தெரியல் சூடி
பலிக் கள் ஆர் கைப் பார் முது குயவன்
இடு பலி நுவலும் அகன்தலை மன்றத்து"[27] நற்-293 (1-3)

என்னும் பாடல் அடிகளால் கயமனார் காட்சிப்படுத்துகிறார். சிலப்பதிகார வேட்டுவ வரியில் பாலை நிலத்து மறவர்கள் அந்நில தெய்வமான காளியின் முன்பு பலியிட்ட செய்தியை விரிவாகவும் விளக்கமாகவும் கூறுவதை,

"சுடரொடு திரிதரு முனிவரும் அமரரும்
இடர்கெட அருளும் நின்இணை அடிதொழுதேம்
அடல்வலி எயினர் நின்அடி தொடு கடன் இது
மிடறுஉகு குருதி, கொள், விறல் தருவிலையே"[28] சிலம்பு-வே.வ (18-20)

எனவும்

"துடியொடு சிறுபறை வயிரொடு துவைசெய
வெடிபட வருபவர் எயினர்கள் அரைஇருள்
அடுபுலி அனையவர்; குமரி நன் அடிதொடு;
படு கடன் இது; உகுபலி முகமடையே"[29] சிலம்பு-வே.வ (4-16)

எனவும் இளங்கோவடிகள் விளக்குகிறார். இங்ஙனம் பாலை நிலத்தில் பலியிடும் உணவாக இறைச்சி, சோறு முதலிய உணவுப் பொருட்கள் பயன்படுத்தப்பட்டன.

### 6.5.2.3 வெட்சி வீரருக்கும் கரந்தை வீரருக்கும் கொடுக்கும் பலி

புறத்திணையின் முதல்திணை என்பது வெட்சியும், கரந்தையும் ஆகும். பிறநாட்டு ஆநிரைகளைக் கவா்வதும், கவா்ந்த ஆநிரைகளை பங்கீட்டு கொடுப்பதும், பின் எதிரிநாட்டு வெட்சி வீரா்கள் இவா்தம் ஆநிரைகளைக் கவா்வதும் என மாறி மாறி நடந்து கொண்டிருக்கும். இதில் ஆநிரைகளை எடுப்பவா் வெட்சி வீரராகவும் ஆநிரைகளைத் திருப்பி தம் நாட்டிற்குக் கொண்டு செல்பவா் கரந்தை வீரா் என்றும் கூறுவா்.

அகநானூற்று பாலைத் திணை பாடல் ஒன்றில் கரந்தை வீரருக்கு நினைவாக ஆட்டை வெட்டி பலிகொடுக்கும் நிகழ்வை காணமுடிகிறது. வெட்சித்திணை, கரந்தைத்திணை என்பவை எல்லாம் புறத்திணைச் சாா்ந்தவை. பாலை நிலம் சாா்ந்த தெய்வத் தொடா்பால் இப்பாடல் அகநானூற்றில் அமைந்துள்ளது எனலாம். சிலப்பதிகார வேட்டுவவரி என்னும் பகுதியில் காணப்படும் பலியிடும் நிகழ்வும் வெட்சி கரந்தை வீரா்களுக்குச் செய்யப்படும் பலியாகவே காணமுடிகிறது. காளி என்னும் தெய்வத்திற்கு குறிஞ்சி நிலக்கடவுளான முருகனுக்கும், முல்லை நிலக்கடவுளான திருமாலுக்கும் ஏதேனும் தொடா்பு இருக்கிறதா என்பது ஆய்விக்குரியது.

குறிஞ்சி நிலத்தில் ‘வேலன் வெறியாட்டு’ என்னும் துறையில் முருகன் சிலை முன் ஆடு வெட்டுதல் குறித்தான பதிவுகள் இருக்க, பாலை நிலத்தில் காளித் தெய்வத்திற்கு முன்பு பலியிடுதலை பாலை நிலப் பாடல்கள் சுட்டுகின்றன. இங்கு வெறியாட்டும், பலியும் ஒன்று என்று கூறமுற்படவில்லை. வெறியாட்டு முடிந்த பின்பு பலி நிகழ்த்துதல் குறிஞ்சி நிலத்தின் இயல்பாகும். இச்சூழலில் பாலைநில பலி மறவா் இனத்தைச் சாா்ந்த வெட்சி வீரருக்கும், கரந்தை வீரருக்கும் நினைவாக அகநானூற்று பாடல் பதிவுச் செய்துள்ளதை

“தனி மணி இரட்டும் தாளுடைக் கடிகை

நுழை நுதி நெடுவேல், குறும்படை, மழவா்

முனை ஆத் தந்து, முரம்பின் வீழ்த்த
வில் ஏர் வாழ்க்கை விழுத் தொடை மறவர்
வல் ஆண் பதுக்கைக் கடவுட் பேண்மார்
நடுகல் பீலி சூட்டி, துடிப்படுத்து
தோப்பிக் கள்ளொடு துரூஉப் பலி கொடுக்கும்
போக்கு அருங் கவலைய புலவுநாறு அருஞ்சுரம்
துணிந்து பிறள் ஆயினள் ஆயினும்"[30] அகம்.35 (3-11)

என்னும் பாடல் அடிகள் மூலம் குடவாயில் கீரத்தனார் பதிவுச் செய்கிறார். இப்பாடலில் பாலைத் திணையின் கொடுமைகளைச் சித்தரிக்க வேண்டி பலியிடும் நிகழ்வைப் பதிவுச் செய்கிறார். இப்பாடலில் பயின்று வந்த பதுக்கை என்பது போர் முடிவில் இறந்த மறவரின் நினைவாக 'நடுகல்' நடப்பட்டுள்ளன. இதனை,

"முதலாவது சங்க இலக்கியங்களை குறிப்பிடும் பதுக்கைகள் கண்டறியப்பட்டுள்ளன. நிலத்திற்கு அடியில் கற்களைக் கொண்டு இப்பதுக்கைகள் உருவாக்கப்பட்டிருக்க வேண்டும் என்பதை அறிய முடிகின்றது. இரண்டாவது வளர்நிலையாகக் கற்பதுக் கைகளுடன் நெடுங்கற்கள் நடப்பட்ட நிலையை அறிய முடிகிறது. மூன்றாவதாக கற்பதுக்கைகளைத் தவிர்த்து நெடுங்கற்கள் நடப்பட்டுள்ளன. நான்காம் நிலையாக நெடுங்கற்கள் அளவில் சிறுத்து நடுகற்களாக நடப்பட்டுள்ளன.

இவ்வாறான பதுக்கைகளையும், நெடுங்கற்களையும் ஆராய்ந்த ராஜன் (2004) இந்நினைவுச் சின்னங்களின் பெரும்பகுதி வெட்சிப் போரில் ஆநிரை கவர்ந்து / மீட்டு (தொறுமீட்டு) மாண்ட மறவர்க்கு நடப்பட்ட நிலையைச் சங்க இலக்கியச் சான்றுகள் வழியே விரிவாக ஆராய்ந்துள்ளார்"[31] என்னும் உரைநடை வழி மேற்குறிப்பிட்ட அகநானூறு பாடல் சான்றாக அமைகிறது. மேலும் பாலை நிலம் வழியாகத்தான் வெட்சி வீரர்கள் பிடித்த பசுக்களைக் கொண்டு வருவர் என்பதற்கு,

“கன்று காணாது புன் கண்ண, செவிசாய்த்து

மன்று நிறைபைதல் கடர, பல உடன்

கறவை தந்த கடுங்கால் மறவர்

கல்லென் சீறூர் எல்லியின் அசைஇ

முதுவாய்ப் பெண்டிர் செதுகாற்குரம்பை”[32] அகம்-63 (10-14)

என்னும் பாடல் அடிகளால் நன்கு அறியலாம்.

கரந்தை வீரருக்கும் வெட்சி வீரருக்கும் நடைபெற்ற போரில் வெட்சி வீரரால் கரந்தை வீரர் கொல்லப்பட்டு வீழ்ந்தனர். அவ்வீரர்களை மண்ணில் புதைத்து பதுக்கைகள் ஆக்கினர். அதில் பெயரும், வீரச் சிறப்பும் பொறிக்கப்பட்டு உள்ளதை,

“யான் எவன் செய்கோ? தோழி பொறி வரி

வானம் வாழ்த்தி பாடவும், அருளாது

உறை துறந்து எழிலி நீங்கலின், பறைபு உடன்

மரம் புல்லென்ற முரம்பு உயர் நனந்தலை

அரம் போழ் நுதிய வாளி அம்பின்

நிரம்பா நோக்கின், நிரயம் கொண்மார்

நெல்லி நீளிடை எல்லி மண்டி

நல் அமர்க் கடந்த நாணுடை மறவர்

பெயரும் பீடும் எழுதி, அதர்தொறும்

பீலி சூட்டிய பிறங்கு நிலை நடுகல்

வேல் ஊன்று பலகை வேற்றுமுனை ஒடுக்கும்

மொழிபெயர் தேஎம் தருமார் மன்னர்

கழிப்பிணிக் கறைத்தோல் நிரை கண்டன

உவல் இடுபதுக்கை ஆள் உகு பறந்தலை”[33] அகம்-67 (1-14)

என்னும் அகநானூற்று பாடல் விரிவாக கல்பதுக்கை குறித்து விளக்குகிறது.

### 6.5.2.4 மழவர்களின் பாதீடு

வெட்சி வீரர், கரந்தை வீரர்களைத் தவிர்த்து மழவர் என்னும் பிரிவினரும் ஆநிரைகளைக் கவர்ந்து செல்வர். இவரை சேரமன்னர்களுக்கு அடங்காத குடிகளுள் சேர்ப்பர் துரை. அரங்கசாமி இது குறித்து, "எந்த அரசனின் ஆணைக்கும் அடங்கி நடக்க முடியாத மழவர் குடியைச் சார்ந்த மற்றவர் தமிழ்நாட்டில் வடக்கே திருவேங்கட மலை வரையில் சுற்றித் திரியலாயினர். பிறகு அவர்கள் சோழநாட்டில் நிலையாகத் தங்கி வாழத் தலைப்பட்டனர். அவர்கள் வாழ்ந்த பகுதி மழநாடு எனப்பட்டது. மழவர்கள் அங்கு பெருஞ்சிறப்போடு வாழ்ந்தனர்"[34] என்று குறிப்பிடுகிறார்.

மேலும்,

"மழவர்கள், கட்டுப்பாடு ஒன்றும் இல்லாதவர்கள், ஆநிரைகளைக் கவர்தல், வழிப்போக்கர்களை மறித்து, இரக்கமின்றிக் கொன்று அவர்களிடமுள்ள பொருள்களைக் கொள்ளையடித்தல் - இவற்றைத் தம் வாழ்க்கைத் தொழில்களாகக் கொண்டிருந்தவர்கள்"[35] எனவும் உரைக்கிறார். இவ்வுரைநடைகள் பாலை நில மக்களுள் ஒரு குடியாக சித்தரிக்கப்பட்டுள்ளதை விளக்குகிறது. மழவர் தோற்றம் குறித்து,

"தகர் மருப்பு ஏய்ப்பச் சுற்றுபு கரிந்த
சுவல் மாய் பித்தை, செங்கண் மழவர்
வாய்ப்பகை கடியும் மண்ணொடு கடுந்திறல்
தீப்படு சிறு கோல் வில்லொடு பற்றி"[36] அகம்-101 (4-7)

என்னும் அகநானூற்று பாடல் அடிகள் மூலம் மழவர்களின் உடல் வருணையை குறிக்கிறது. சிறந்த வில் வீரர்களும் மழவர் பிரிவில் அடங்குவர். நன்கு வளர்ந்த தலைமயிரினையும், சிவந்த கண்களையும் உடையவர் என்று மேற்கூறிய அகநானூற்றுப்பாடல் பறைசாற்றுகிறது. இப்பாடலின் பின்வரும் அடிகள் இவர்கள்

ஆநிரை கள்வர்கள் என்று உரைக்கிறது. இதுகுறித்து துரை அரங்கசாமி பின்வருமாறு கூறுகிறார்.

"மழவர்கள் எல்லோருமே ஆறலை கள்வர்கள் என்பதற்கில்லை. அவர்களில் பெரும்பாலோர் அரசரிடம் தலைமைசால் வீரராய் அமர்ந்திருந்தனர். அதியன், "மழவர் பெருமகன்" என்றழைக்கப்படுதலினின்றும் இது தெரிகிறது. சேரர்களிடமும், ஓரியினடமும் இவர்கள் வீரர்களாயிருந்தனர்"[37] என்று திண்ணமாக உரையப்படுத்துகிறார். மழவர் ஆநிரைகளைக் கவர்ந்து தமக்குள் பங்கிட்டுக் கொள்வதை,

"நுரை தெரி மத்தம் கொளீஇ நிரைப் புறத்து

அடிபுதை தொடுதோல் பறைய ஏகி

கடி புலம் கவர்ந்த கன்றுடைக் கொள்ளையர்

இனம் தலைபெயர்க்கும் நனந்தலைப் பெருங்காட்டு"[38] அகம்.103 (8-11)

என்னும் பாடலடிகள் மூலம் அறியலாம்.

### 6.5.2.5 மழவர்களின் உணவு

மழவர்கள் இறைச்சி உணவு உண்டனர். வேக வைத்த இறைச்சியை உண்டனர். இவர் தம் வேக வைத்த அடுப்பு என்பது உப்பு வணிகர் கூட்டம் சமைத்த அடுப்பாகும். இதனை,

"நெறி அயல் திரங்கும் அத்தம், வெறிகொள

உமண் சாத்து இறந்த ஒழிகல் அடுப்பில்

நோன் சிலை மழவர் ஊன் புழுக்கு அயரும்"[39] அகம்-119 (7-9)

என்னும் பாடல் அடிகள் வெளிப்படுத்துகின்றன.

### 6.5.2.6 வெட்சி வீரரின் உணவு

மழவர் உண்ட நிகழ்வினை ஒத்த நிலையை வெட்சி வீரரும் செய்தனர். வெட்சி வீரர்களும் ஊன் என்று சொல்லப்படுகின்ற இறைச்சியை உப்பு வணிகரின் அடுப்பில் வேக வைத்து உண்டதை,

"தெண்கழி விளைந்த வெண்கல் உப்பில்
கொள்ளை சாற்றிய கொடுநுக ஒழுகை
உரனுடைச் சுவல பகடுபல பரப்பி
உமண் உயிர்த்து இறந்த ஒழிகல் அடுப்பின்
வடிஉறு பகழிக் கொடுவில் ஆடவர்
அணங்குடை நோன்சிலை வணங்க வாங்கி
பல் ஆன் நெடுநிரை தழீஇ கல்லென
அருமுனை அலைத்த பெரும்புகல் வலத்தர்
கனைகுரற் கடுந்துடிப் பாணி தூங்கி
உவலைக் கண்ணியர் ஊன் புழுக்கு அயரும்"[40] அகம்-154 (1-10)

என்னும் பாடல் அடிகள் சான்று பகர்கின்றன. இவ்வடிகள் மூலம் உப்பு விற்கும் வணிகர்கள் பாலை நிலம் வழி சென்றனர் என்பதனையும் அறியலாம்.

### 6.5.2.7 மறவர்கள் உணவு உண்ணும் முறை

பாலை நிலம் வழி செல்லும் வணிக பெருமக்களின் பொருட்களைக் கவர்ந்து உண்பர். இதனை,

"தூத்து எறிந்து
அதர்கூட் டுண்ணும் அணங்குடைப் பகழிக்
கொடுவில் ஆடவர் படுபகை வெரீஇ
ஊர் எழுந்து உலறிய பீர்எழு முதுபாழ்"[41] அகம்.167 (11-14)

என்னும் பாடல் வழி மூலம் உணரலாம். மறவர்களின் கொலை, கொள்கைக் காரணமாக ஊரிலுள்ள மக்கள் அனைவரும் மற்றொரு நிலத்திற்குச் சென்றனர் என்னும் குறிப்பும் காணக்கிடக்கிறது.

### 6.5.2.8 உப்பு வணிகர்களும் உணவு முறைகளும்

உப்பு விற்பவரை உமணர் என்றும் உப்பு வணிகன் என்றும் அழைப்பர். வேற்று நிலத்திலிருந்து பாலை நிலம் வழியாக உப்பு விற்க செல்லும் உப்பு வணிகர்கள் பாலை நிலத்தில் தங்கி உணவு உண்டதை அகநானூற்றுப் பாடல்கள் விளம்புகின்றன. உப்பு வணிகரின் தோற்றம் குறித்து விளக்கும் போது இலவம்பூ, தாழம்பூ ஆகியவற்றைக் கொண்ட மாலையை அணிந்தவர். காலில் செருப்பு உடையவர், எருதுகளை உடையவர் என்று உமணர்களின் வருணனையை விளக்குவதாக கீழ்காணும் பாடல் அமைகிறது.

"அந்தப் பாதிரித் துய்த்தலைப் புதுவீ,
எரிஇதழ் அலரியொடு இடைபட விரைஇ
வண்தோட்டு தொடுத்த வண்டுபடு கண்ணித்
தோல்புதை சிரற்று அடி, கோலுடை உமணர்
ஊர்கண் டன்ன ஆரம் வாங்கி
அருஞ்சுரம் இவர்ந்த அசைவு இல் நோன்தாள்
திருந்து பகட்டு இயம்பும் கொடுமணி, புரிந்து அவர்
மடிவிடு வீனையொடு, கடிது எதிர் ஒடி
ஓமைஅம் பெருங்காட்டு வரூஉம் வம்பலார்க்கு
ஏமம் செப்பும் என்றூழ் நீள்இடை"[42] அகம்-191 (1-10)

என்னும் பாடலடியால் நன்கு அறியலாம். மேலும் உமணர்கள் வாணிகம் செய்யும் முன்பு நிமித்தம் பார்த்துப் படைக்கலங்கள் அமைத்து கொண்டு கழுதைகள் மேல் உப்புமூட்டைகளை ஏற்றிக் கொண்டு செல்வதை,

"அணங்குடை முந்நீர் பரந்த செறுவின்

உணங்குதிறம் பெயர்ந்த வெண்கல் அமிழ்தம்

குடபுல மருங்கின் உய்ம்மார், புள்ஓர்த்துப்

படை அமைத்து எழுந்த பெருஞ்செய் ஆடவர்

நிரைப்பரப் பொறைய நறைப்புறக் கழுதைக்

குறைக் குளம்பு உதைத்த கல்பிறழ் இயவின்"[43] அகம்-207 (1-6)

என்னும் பாடல் அடிகள் சான்று பகர்கின்றன. வண்டிகளில் செல்லும் போது எருதுகளையும் பயன்படுத்தினர். பாலை நில மேடுகளில் செல்லும் போது எருதுகளை அடித்து ஒட்டிச் செல்வர். இதனை கண்டு காட்டிலுள்ள மான்கள் அஞ்சி ஓடும். இதனை,

"பலபுரி

வார்க்கயிற்று ஒழுகை நோன்சுவற் கொளீஇ

பகடுதுறை ஏற்றத்து உமண்விளி வெரீஇ

உழைமான் அம்பினை இனன்இரிந்து ஓட"[44] அகம்.173 (8-11)

என்னும் பாடல் அடிகள் காட்சிப்படுத்துகின்றன. பாலை நிலத்தில் உப்பு வணிகர் விலங்குகளால் வேட்டையாடப்பட்ட பிற விலங்குகளின் இறைச்சியை தீயில் வாட்டி உண்டு, மீதமுள்ள இறைச்சியை உலையில் வேகின்ற சோற்றுடன் கூட்டி உண்பர். இதனை,

"ஞெலிகோற் சிறுதீ மாட்டி, ஒலிதிரைக்

கடல்விளை அமிழ்தின் கணம்சால் உமணர்

சுனைகொள் தீம்நீர்ச் சோற்று உலைக் கூட்டும்

சுரம்பல கடந்த நம்வயின் படர்ந்து; நனி"[45] அகம்-169 (5-8)

என்னும் பாடல் அடிகள் மூலம் உமணர்களின் உணவு முறையை அறிந்து கொள்ளலாம்.

### 6.5.2.9 எயினர்களின் உணவு

பாலை நிலத்தில் வாழும் எயினர்கள் பன்றியைச் சமைத்து உண்டனர். ஐங்குறுநூறுப் பாடல் ஒன்று இதனைத் தெளிவுறுத்துவதை,

"முளவு மா வல்சி எயினர் தங்கை

இளமா எயிற்றிற்கு, நின் நிலை அறிய"[46] ஐங்-364 (1-3)

என்னும் பாடல் அடிகளில் பன்றி இறைச்சி உண்ட எயினரின் தங்கை என்று கூறுவதால் எயினர் குடும்பத்தினர் முள்ளம்பன்றியை இறைச்சிக் கறி சமைத்து உண்பர் என்று தெரிகிறது. எயினர்கள் வேட்டை ஆடி கிடைத்த உணவை தம் இல்லத்திற்குக் கொணர்வர் என்பதை,

"கண மா தொலைச்சித் தன்னையர் தந்த

நிண ஊன் வல்சிப் படுபுள் ஒப்பும்

நலம் மாண் எயிற்றி போலப் பலமிகு" [47] ஐங்-365 (1-3)

என்னும் பாடல் அடிகள் சான்று பகிர்கின்றன. இங்கு பாலை நில மக்கள் உண்ணுகின்ற உணவு வேட்டையின் மூலம் பெறப்படுகிறது என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

### 6.5.2.10 ஆறலை கள்வரின் உணவு

ஆறலை கள்வர் என்பவர் பாலை நிலத்தில் வாழும் ஓர் இன மக்கள் வழியில் வருவோரையும் செல்வோரையும் கொன்று அவர்களுடைய பொருட்களைக் கொள்ளையிடுவதால் ஆறலைக் கள்வர் என்று அழைக்கப்படுவர். இவர்களின் உணவு இறைச்சியும், பிறவும். இவர்கள் கனிகளையும், மரப் பட்டைகளையும் மென்று தின்றனர் என்பதை,

"புறவுப் புறத்தன்ன புன்கால் உகாஅத்து

இறவுச்சினை அன்ன நளிகனி உதிர

விடுகணை வில்லொடு பற்றிகோடு இவர்பு

வருநர்ப் பார்க்கும் வன்கண் ஆடவர்

நீர்நசை வேட்கையின் நார்மென்று தணியும்"[48] குறு-274 (1-5)

என்னும் குறுந்தொகைப் பாடல் அடிகள் வெளிப்படுத்துகின்றன.

### 6.5.2.11 விலங்குகளின் வேட்டை உணவுகள்

உணவற்ற பாலை நிலத்தில் கடுமையான விலங்குகள் தம்மில் உணவு பசியில் பயங்கரமாக மோதிக்கொள்ளும். இதில் இறந்த விலங்கின் இறைச்சியை உயிர் உள்ள விலங்கு உண்டு விட்டு, மீதி இறைச்சி சதையை அங்கு இட்டு செல்லும். அதனை அவ்வழி செல்வோர்களான மறவர் இனத்தவரும், எயினர் இனத்தவரும், உப்பு விற்க செல்லும் உமணரும் உண்பர். எனவே பாலை நில விலங்குகளின் வேட்டை உணவு குறித்த செய்திகள் விளக்குவது முக்கியத்துவம் வாய்ந்தவையாகும்.

சங்ககால புலவர்களின் கற்பனைகளுள் ஒன்று. ஐங்குறுநூற்றில் பாலைத் திணை பாடலில் செந்நாய் ஒன்று தன் கருவுற்ற பிணைவிற்கு உணவு தேட காட்டுக்குள் மரத்தின் பின்னால் நின்று கொண்டு இரைக்கு உணவாக பன்றி வரும் என்று பதுங்கி எதிர்பார்த்து நிற்கும். இதனை,

"வள் எயிற்றுச் செந்நாய் வயவு உறு பிணவிற்குக்

கள்ளி அம் கடத்திடைக் கேழல் பார்க்கும்

வெஞ்சுரக் கவலை நீந்தி"[49] ஐங்-323 (1-3)

என்னும் பாடலடியால் அறியலாம். பெண் நாய் பசியோடிருக்கும் என எண்ணி இரங்கி ஆண் நாய், ஆண் பன்றியை தாக்கி வீழ்த்தும். அதன் இறைச்சியைத் தன் இனைக்குக் கொடுக்கும். இதனை,

"இருங் கல் விடரகத்து, ஈன்று இளைப்பட்ட

மென் புனிற்று அம்பிணவு பசித்தென பைங்கட்

செந்நாய் ஏற்றை கேழல் தாக்க

இரியற் பிணவல் தீண்டலின் பரீஇச்"[50] அகம்-21 (16-19)

என்னும் பாடல் அடிகளால் உண்ணாலம். இங்கு ஆண் நாய் தான் வேட்டையாடும் விலங்கின் சதையைத் தாமே உண்ணலாம். ஆனால் அதன் நோக்கம் தன் இணைக்கு விருந்தோம்புதலே மேலானது என்று நினைக்கின்ற பண்பாகும்.. பாலை நிலத்தில் செந்நாயின் விருந்தோம்பல் பண்பு வெளிப்பட்டுள்ளது.

நற்றிணைப் பாலைத்திணை பாடல் ஒன்றில் செந்நாய் வாடிய மனரயாவின் நசையை செல்வோர் உண்பர். இதனை,

"துகில் விரித்தன்ன வெயில் அவிர் உருப்பின்

என்றூழ் நீடிய குன்றத்துக் கவாஅன்,

ஒய்பசிச் செந்நாய் உயங்குமரை தொலைசச்சி

ஆர்ந்தன ஒழிந்த மிச்சில் சேய் நாட்டு

அருஞ்சுரம் செல்வோர்க்கு வல்சி ஆகும்"[51] நற்-43 (1-5)

என்னும் பாடல் அடிகளால் புலவர் எயினந்தையர் ஓவியமாக்கி தீட்டுகிறார். செந்நாயின் வேட்டையால் இறைச்சி உணவை மற்ற விலங்குகள் உண்டு மகிழ்ந்தனர். எனவே விருந்தோம்பல் என்னும் பண்பானது அந்நில விலங்குகளிடமும், பறவைகளிடமும் காணப்படுகிறது.

### 6.5.2.12 யானையும் உணவும்

சங்க இலக்கியத்தில் யானைக்குச் சிறப்பிடம் உண்டு. வளமையின் அடையாளம் யானை. பரிசிலாகவும் யானைகள் வழங்கப்பட்டன என்பது வரலாறு. மலையில் நீர் இல்லாத காரணத்தால் காய்ந்த பாசியை உண்ணும் நிலையை,

"விளங்கு பகல் உதவிய பல்கதிர் ஞாயிறு

வளம்கெழு மா மலை பயம் கெடத் தெறுதலின்

அருவி ஆன்ற பெருவரை மருங்கில்

சூர்ச் சுனை தழைஇ நீர்ப்பயம் காணாது

பாசி தின்ற பைங் கண் யானை"[52] அகம்-91 (1-5)

என்னும் பாடல் அடிகளில் பாலைத் திணையின் வெப்பத்தையும், வறட்சியையும் தெளிவுறுத்தினாலும் யானைக்கும் பாசியும் உணவாயிற்று என்று நோக்கும் போது இயற்கை உணவு குறித்த முக்கியத்துவத்தை விலங்கின் வாயிலாக வெளிப்படுத்துவது புலவரின் கற்பனைத் திறனாகும். மற்றொரு பாடலில் யானை நடந்து செல்லும்போது குழியில் விழுந்துவிடுகிறது. இதை கண்ட யானையின் குட்டியானது அழுதுகொண்டு செல்லும். அங்ஙனம் செல்லும் போது எருமையின் முலையிலுள்ள பாலை அருந்தும் இதனை,

"கயந்தலை மடப்பிடி பயம்பில் பட்டென

களிறு விளிப் படுத்த கம்பலை வெரீஇ

ஒய்யென எழுந்த செவ்வாய்க் குழவி

தாதுஎரு மறுகின் மூதூர் ஆங்கண்

எருமை நல்ஆன் பெறுமுலை மாந்தும்"[53] அகம்-165 (1-5)

என்னும் பாடலடியால் அறியலாம். இங்கு விருந்தோம்பலின் மகத்துவத்தைப் புலவர் குறிப்பாகச் சுட்டுகிறார். யானை எருமையின் பாலைக் குடிப்பது என்பது வேறுபாடுகளைத் தவிர்த்து ஒற்றுமையை வெளிப்படுத்துவதின் நோக்கமாகும். இது விருந்தின் தலையாய நோக்கமாகும்.

யானையின் விருந்தோம்பல் பண்பை கலித்தொகை மிகச்சிறப்பாக புனைந்துக் காட்டுகிறது. குடிப்பதற்கு சிறய நீரை ஆண் யானை முதலில் உண்ணாமல், பெண் யானைக்கு உண்ணக் கொடுக்கும். அதன் பின் ஆண்யானை உண்ணும். இதனை,

"அடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்

பிடி ஊட்டி, பின் உண்ணும், களிறு"[54] கலி-11 (8-9)

என்னும் பாடலடிகளில் அறியலாம். மேலும்,

பெண் யானை உண்ணும் பொருட்டு ஆண் யானை மரப்பட்டைகளை பற்களால் கிழித்து தான் உண்ணாது கொடுக்கும். இதனை,

"உள்ளுதொறும் நகுவேன் - தோழி - வள் உகிர்ப்
பிடி பிளந்திட்ட நார் இல் வெண் கோட்டுக்
கொடிறு போல் காய வால் இணைர்ப் பாலை
செல் வளி தூக்கலின், இலை தீர் நெற்றம்"[55] நற்-107 (1-4)

என்னும் பாடல் அடிகள் மூலம் யானைகள் விருந்தோம்பி உணவு உண்டதை புலவர் படம் பிடித்துக் காட்டுகிறார். ஓமை என்னும் மரத்தை பிடியானையின் பசியைப் போக்க களிற்றுயானை முறித்துத் தள்ளும் என்பதை,

"கயந் தலை மடப் பிடி உயங்கு பசி களை இயர்
பெருங் களிறு தொலைத்த முடத் தாள் ஓமை
அருஞ் சுரம் சொல்வோர்க்கு அல்குநிழல் ஆகும்"[56] நற்-137 (6-8)

என்னும் பாடல் அடியில் களிற்று யானை முறித்த மரமானது அவ்வழி செல்வோர்க்கு நிழலைக் கொடுக்கும் என்று கூறம் பாங்கு சிறப்பானது. யானை தன் பிடிக்கும், கன்றுக்கும் உணவிற்கு வேண்டி புலியுடன் போர் செய்யும். பின் தன் கன்றையும் பிடியையும் தழுவி நிற்கும். வேங்கை மரத்தின் பூக்கொத்தாகிய உணவை விருந்தாக ஊட்டி விடும். இக்கருத்தைப் பின்வரும் பாடல் நயமாக உணர்த்தும்.

"புலி பொரச் சிவந்த புலால் அம் செங்கோட்டு
ஒலி பல் முத்தம் ஆர்ப்ப, வலி சிறந்து
வன் சுவல் பராரை முருக்கி, கன்றொடு
மடப் பிடி தழீஇய தடக் கை வேழம்
தேன் செய் பெருங் கிளை இரிய வேங்கைப்
பொன் புரை கவளம் புறந்தருபு ஊட்டும்"[57] நற்-202 (1-6)

என்னும் பாடல் அடிகள் யானையின் விருந்தோம்பும் பண்பைச் சுட்டிக்காட்டுவதாக அமைகின்றன. பெண் யானையின் பசியைப் போக்கும் படி ஆண்யானை வேங்கை மரத்தின் பட்டையை உரித்துக் கொண்டிருக்கும் இதனை,

"பிடி பசி களைஇய பெருங்கை வேழம்

மென்சினை யாஅம் பொளிக்கும்"[58] குறு-37 (1-2)

என்னும் அடிகளால் பாலை பாடிய பெருங்கடுங்கோ விளக்குகிறார். இதை கருத்தினை ஒத்த பாடலை,

"பொந்து இல் காழ அத்த யாஅத்துப்

பொரிஅரை முழுமுதல் உருவக்குத்தி

மறம்கெழு தடக்கையினன் வாங்கி உயங்கு நடைச்

சிறுகட் பெருநிரை உறுபசி தீர்க்கும்

நடமருப்பு யானை கண்டனர் தோழி"[59] குறு-255 (1-5)

என்னும் பாடல் அடியால் விளங்கலாம்.

### 6.5.2.13 மானின் உணவும் விருந்தோம்பும் பண்பும்

குறுந்தொகை பாலைத்திணை பாடல்களில் நான்கு இடங்களில் மானின் உணவு வகைகள் குறித்து பேசப்பட்டுள்ளன. மானும் உணவைத் தன் குட்டிக்குக் கொடுத்து அது உண்ட பின்னே தானும் உண்ணும். அவற்றின் உணவு என்பது மரப்பட்டை. இதனை,

"கவைத்தலை முதுகலை காலின் ஒற்றிப்

பசிப்பிணிக்கு இறைஞ்சிய பரூஉப்பெருந் ததரல்

ஒழியின் உண்டு அழிவுஇல் நெஞ்சின்

தெறித்து நடை மரபின் தன்மறிக்கு நிழல் ஆகி

நின்று வெயில் கழிக்கும் என்ப"[60] குறு-213 (2-6)

என்னும் பாடல் அடிகளால் மானின் விருந்தோம்பல் பண்புகளை முழுமையாக விளக்குகிறார். மற்றொரு குறுந்தொகை பாலைத் திணை பாடலில் ஆண் மான் வயிறார உண்ட காட்சியை ஊண்பித்தை இயற்கை உணவாகிய அறுகம் புல்லை பெண் மானோடு சேர்ந்து ஆண் மான் உண்ட நிகழ்வை,

"மணி வார்ந்தன்ன மாக்கொடி அறுகைப்
பினுங்கு அரில் மென்கொம்பு பிணையொடும் மாந்தி
மான் ஏறு உகளும் கானம் பிற்பட"[61] குறு-256 (1-3)

என்னும் பாடல் அடிகளால் உணரலாம்.

### 6.5.2.14 பிணங்களைத் திண்ணும் விலங்குகள்

பாலைத் திணை பாடல்களில் பிணங்கள் என்னும் சொல் பயின்று வந்துள்ளன. ஆறலைக் கள்வர்கள் கொள்ளையர்களாக மட்டுமின்றி கொலை புரிபவர்களாகவும் சித்தரிக்கப்பட்டுள்ளனர். கொலை செய்தபின், தோண்டிய குழியில் கொண்டு இடுவர். இதை பிணகுவியல் என்று சங்க இலக்கியங்கள் குறிக்கின்றன. இன்றைய மருத்துவமனையில் பிணவறை - பிணக்கிடங்கு என்று அழைக்கும் அறைக்கு ஒப்பாக சங்க இலக்கியங்களில் கூறப்பட்டுள்ளன. இதில் வேறுபாடு என்னவென்றால் பதனிடுபடுத்துவதாக குறிப்புகள் இல்லை எனலாம்.

ஆறலைக் கள்வர்கள் பாலைநிலம் வழியாக செல்பவர்களைக் கொல்வர். கொன்ற உடலை ஓரிடத்தில் இடுவர். இட்ட இடத்தில் பிணத்தை தீ உண்ணும் பொருட்டு வந்த நரி அங்கு முடநாற்றம் வீசுவதை அறிந்து செல்ல தயங்கி திருப்பி ஓடும். இத்தகைய கொடூரமான பிண குவியல்கள் இருக்குமிடமாக பாலைத்திணை கூறப் பட்டுள்ளதை,

"செங்கோல் வாளிக் கொடு வில் ஆடவர்
வம்ப மாக்கள் உயிர்த் திறம் பெயர்த்தென
வெங் கடற்று அடை முதல் படு முடை தழீஇ
உறு பசிக் குறு நரி குறுகல் செல்லாது"[62] நற்-165 (6-9)

என்னும் நற்றிணைப் பாடல் படம்பிடித்துக் காட்டுகிறது. ஆறலைப் போர் கொலைத் தொழில் காரணமாக பாலை நிலத்தில் வாழும் கழுகுகள் சிவந்த வாயை உடையதாக காணப்படும். தான் மட்டும் பிணங்களின் சதையை உண்ணாமல் தன் குஞ்சுக்கு கொடுக்கும். சதை அதிகமாக உள்ளதால் குஞ்சின் வாயினின்று விழும் சதை துண்டை நரி உண்ணும். இத்தகைய இறைச்சி உணவுகளைப் பாலை நில விலங்குகள் உண்டு வாழும் இயல்பை உடையது என்பதை,

"வில் ஏர் உழவர்
பெருநாள் வேட்டம், கிளைஎழ வாய்த்த
பொருகளத்து ஒழிந்த குருதிச் செவ்வாய்ப்
பொறித்த போலும் வால்நில எருத்தின்
அணிந்த போலும் செஞ்செவி எருவை
குறும்பொறை எழுந்த நெடுந்தாள் யாஅத்து
அருங்கவட்டு உயர்சினைப் பிள்ளை ஊட்ட
விரைந்து வாய் வழுக்கிய கொழுங்கண் ஊன்தடி
தொல்பசி முதுநரி வல்சி ஆகும்"[63] அகம்-193 (2-10)

என்னும் அகநானூறு பாலைத் திணைப்பாடலில் மருதனிளநாகனார் உரைக்கிறார். நற்றிணை பாலைத்திணை உண்ண வந்த கழுகை, நரியானது விரட்டும். பின் நரி உணவு அருந்தும் போது தண்ணீர் இல்லாமல் தவிக்கும். இதனை,

"இலை மாண் பகழிச் சிலை மாண் இரீஇய
அன்பு இல் ஆடவர் அலைத்தலின், பலருடன்
வம்பலர் தொலைந்த அஞ்சுவரு கவலை
அழல் போல் செவிய சேவல் ஆட்டி,
நிழலொடு கதிக்கும் நிணம் புரி முது நரி
பச்சூன் கொள்ளை மாந்தி, வெய்துற்று
தேர் திகழ் வறும் புலம் துழைஇ, நீர் நயந்து"[64] நற்-352 (1-7)

என்னும் பாடல் வழி சங்கப்புலவர் விளக்குகிறார். இவ்வாறு பாலைநில விலங்குகள் விருந்தோம்பல் பண்புகளுக்கு எடுத்துக்காட்டாய் திகழ்கின்றது.

பாலை நிலத்தில் வறட்சிக் காரணமாக உணவு தட்டுப்பாடு ஏற்படும். அதனால் விலங்குகள் ஒன்றுடன் ஒன்று மோதிக் கொண்டும் அப்போது இறந்த விலங்குகள் மற்ற விலங்குகளுக்கு உணவாக பயன்பட்டது. மக்கள் இதை பார்த்த விலங்குகளை வேட்டையாடி உணவு உண்டான் என்ற செய்தியை அறிய முடிகிறது. பாலை நிலத்தில் உணவு, வேட்டையாடுதலும், கவர்தலும் அறிய முடிகிறது.

### 6.5.3 நீர் உணவு

பாலை நிலத்தில் நீர் வளம் என்பது நீரின்மை குறிப்பதாகும். நீரற்ற அருவியும், சுனையும் என்பது உரையாசிரியர்களின் விளக்கம் ஆகும். ஆனால் சங்க இலக்கிய பாலைத்திணை பாடல்கள் பாலை நிலத்தில் நீர் இருந்துள்ளதைச் சுட்டுகிறது. எனவே திணை மயக்கம் ஏறபட்டிருக்கலாம். அல்லது பருவமாறுபாடுகளாக அமையலாம். பாலைத் திணையில் நீருள்ள உணவாக கள், கரும்புச்சாறு, சுனை நீர், கலங்கிய நீர் போன்றவற்றை நீருள்ள உணவாகக் கொள்ளலாம்.

#### 6.5.3.1 குடிநீர்

தண்ணீர் கிடைக்கவில்லை அரிய நிலம் என்பது பாலை ஆகும். சங்க புலவர்கள் பாலை நிலத்தில் நீர் இருந்துள்ளமையைத் தம்பாடல்கள் வழி நின்று சுட்டிக் காண்பித்துள்ளனர். நீர் இல்லாத இடத்தில் சிறிது நீர் கிடைத்தால் அவ்நீர் மயக்கும் கள்ளிற்கு சமமாக புலவர்கள் உவமித்திருந்தனர். தலைவன் மேல் உள்ள அன்பால் தலைவி பாலை நிலம் நோக்கிச் செல்ல துணிந்தாள். தோழி தலைவியிடம் பாலை நிலத்தில் கலங்கிய நீர் தான் கிடைக்கும். யானையால் கலங்கிய அந்நீரை பெண் யானையை முதலில் குடிக்க, அதன் பிறகே ஆண்

யானை குடிக்கும். சிறுநீரை கொண்டதாக இருந்தாலும் யானையின் அன்புணர்வின் மூலம் விருந்தோம்பல் முறை பாலை நிலத்தில் விளக்கப்படுகிறது.

பாலை நில கவிதையில் பயின்று வரும் தலைவி வேற்று நிலத்தில் உள்ளவனாகவே சித்தரிக்கப்படுகின்றது. சான்றாக சிறுகுடி என்னும் ஊர் அகநானூறு பாலைத்திணைப் பாடலில் குறிக்கப்படுகின்றது. இது குறிஞ்சி நில ஊராகும். இங்கு சிலப்பதிகார அடிகளை எண்ணிப் பார்த்து வழுவமைதி ஏற்படுத்திக் கொண்டாலும் சங்க இலக்கியத்தில் அதிகமாக புனையப்பட்ட நிலம் பாலை நிலமாகும். எனவே பாலை நிலத்திற்கான வரமுறையை திணைமயக்கம் தவிர்த்து காண வேண்டிய ஒன்றாகும். தலைவியின் கூந்தல் அலங்காரம் சிறுகுடி ஊரின் அருகேயுள்ள காட்டாற்று நீர்க்கு உவமையாவதை,

"தன் ஒரன்ன தகைவெங் காதலன்
வெறி கமழ் பல்மலர் புனையப் பின்னுவிட,
சிறுபுறம் புதைய நெறிவு தாழ்ந்தன்கொல்
நெடுங்கால் மாஅத்து ஊழுறு வெண்பழம்
கொடுத்தாள் யாமை பார்ப்பொடு கவரும்
பொய்கை சூழ்ந்த பொய்யா யாணர்
வாணன் சிறுகுடி வாடஅது
தீம் நீர் கான்யாற்று அவிர் அறல் போன்றே"[65] அகம்-117 (12-19)

என்னும் பாடலடிகள் மூலம் அறியலாம்.

### 6.5.3.2 நீர் தோண்டுதல்

பாலை நில மக்கள் நீர் தோண்டுவதை பலப்பாடல்களில் பதிவு செய்துள்ளன. அவை கிணற்று நீர், நிலத்தடி நீர் என்றழைக்கப்படும். ஆநிரைகள் குடிப்பதற்காக தோண்டும்போது கிடைத்த நீரை யானைகள் குடிக்கும் இதனை,

"கல்லாக் கோவலர் கோலின் தோண்டிய
ஆன் நீர்ப் பத்தல் யானை வௌவும்" [66] ஐங்-304 (1-2)

என்னும் பாடலில் கோவலர் கோல்களால் தோண்டி நீர் பெற்றதை அறியமுடிகிறது. அகநானூற்று பாலைத்திணை பாடலும் ஆநிரைக்கு வேண்டி கல்லை உடைத்து நீரை வெளிப்படுத்த செய்தார்கள். ஆயர், கோவலர் என்னும் பெயர்கள் ஆநிரைகளை மேய்த்தவர்களின் குலங்களாகும். இங்கு குறிஞ்சி, முல்லை நிலங்களின் கருப்பொருள்கள் வெளிப்படுகின்றன. ஆயர் நீர் தோண்டியதை,

"கன்றுடை மடப்பிடி களிறொடு தடவரும்
புன் தலை மன்றத்து அம்குடிச் சீறூர்"[67] அகம்-321 (9-10)

என்னும் அகநானூற்றுப்பாடல் வழி உணரலாம். தீப்பொறி பறக்க பாறைகளை வெட்டி கிணறு அமைப்பர். மிகவும் உவர்ப்பு சுவையுடைய நீரைக் குடிப்பதற்கு பசுக்கள் செல்லும் நிலையை

"தோட் பதன் அமைத்த கருங்கை ஆடவர்
கனை பொறி பிறப்ப நூறி, வினைப்படர்ந்து
கல்லுறுத்து இயற்றிய வல் உவர்ப்படுவில்
பார் உடை மருங்கின் ஊறல் மண்டிய
வன்புலம் துமியப் போகி, கொங்கர்
படு மணி ஆயர் நீர்க்கு நிமிர்ந்து செல்லும்"[68] அகம்-79 (1-6)

என்னும் பாடல் வழி நன்குணரலாம். இப்பாடல்களிலிருந்து பாலை நிலத்தில் நீர்நிலை தொடங்குவதற்கு ஆயர்கள், கோவலர்கள், கொங்கர்கள் ஆகியோர் பணிசெய்ததை அறியலாம்.

### 6.5.3.3 கலங்கிய நீர்

நீர் வரத்தொடங்கிய தொடக்கத்திலும் நீர் நிலைகளில் நீர் குறைய தொடங்கிய இடத்திலும் காணப்படும் நீர் கலங்கிய நீர் ஆகும். கலங்கிய நீரை உண்டு வாழ்ந்த நிலையை பாலைத்திணைப் பாடல்கள் பதிவுச் செய்துள்ளன. விலங்குகளும் கலங்கிய நீரை உண்டன என்பதையும் அறியமுடிகிறது. தலைவனும்

தலைவியும் உடன்போக்கு நிகழ்ந்த இடத்தும் கலங்கிய நீரை உண்பது தேனுக்கு நிகராக உவமிக்கப்பட்டதையும் பாலை நில கவிதைகள் வெளிப்படுத்துகின்றன.

வேட்டைக்குச் செல்லும் செந்நாய் தன் தாகத்திற்கு வேண்டி தோண்டியதும் காணப்பெற்ற சிறிய நீரை உண்டும், மீதி நீரில் காட்டு மல்லி அழுகிய நிலையில் காணப்படும். அத்தகைய கலங்கிய நீரைத் தலைவி தன்னொடு வந்தால் உண்டு விடும் நிலையை நினைத்து தலைவன் வருந்தும் நிலையை,

"வேட்டச் செந்நாய் கிளைத்தூண் மிச்சில்

குளவி மொய்த்த அழுகற் சில் நீர்

வளையுடைக் கையள் எம்மொடு உணீஇயர்

வருகதில் அம்ம தானே;

அனியளோ அனியள்எம் நெஞ்சு அமர்ந்தோளே"[69] குறு-56 (1-4)

என்னும் பாலைத்திணைப் பாடல்வழி புலவர் சிறைக்குடி ஆந்தையார் வெளிப்படுத்துகிறாா. மழைநீரை பாலை நிலத்தவரான ஆறலைக் கள்வர் கண்டதில்லை. கலங்கிய நீரை உண்டு வாழ்ந்துவந்ததை,

"படு சுடர் அடைந்த பகு வாய் நெடுவரை,

முரம்பு சேர் சிறுகுடி பரந்த மாலை,

புலம்பு கூட்டுண்ணும் புல்லென் மன்றத்து

கல்லுடைப் படுவில் கலுழி தந்து,

நிறை பெயர் அறியாக் குறைத்து ஊண் அல்லில்

துவர்செய் ஆடைச் செந் தொடை மறவர்"[70] நற்-33 (1-6)

என்னும் நற்றிணை பாடல்வழி அறியலாம்.

பாலை நிலத்தில் மழை பெய்வதில்லை. அங்கு சிறு குழியில் கிடைக்கும் கலங்கிய நீரை குடித்தனர் என்ற செய்தியை இப்பாடல் மூலம் அறிய முடிகிறது.

தலைவனும் தலைவியும் உடன்போக்கு சென்றனர். அங்கு ஆண் யானையின் காலடியில் கலங்கிய நீரை அத்தலைவனுடன் உண்டதை,

“உணல் ஆயந்திசினால் அவரொடு சேய்நாட்டு
விண்தொட நிவந்த விலங்கமலைக் கவாஅன்
கரும்புநடு பாத்தி அன்ன
பெருங்களிற்று அடிவழி நிலைஇய நீரே”[71] குறு-262 (5-8)

என்னும் கவிதை மூலம் பாலை பாடிய பெருங்கடுங்கோ படம் பிடித்துக் காட்டுகிறார். தலைவன் தலைவியின் மேல் உள்ள அன்பை வெளிப்படுத்தும் விதமாக யானைகள் கலங்கிய நீரை தலைவனுடன் உண்டதை அறிய முடிகிறது. பாலை நிலத்தில் தலைவி தேன் கலந்து பால் அருந்துவார் என்றும் அங்கு பாலை உணவுப் பொருளாக பயன்படுத்தியதை அறிய முடிகிறது. வெப்பமான பாலை நிலத்தில் குளிர்ச்சியான பால் அருந்துவதன் மூலம் அவருடைய கோபம் குறையும் என்பதை அறியலாம்.

தலைவி தலைவன் மீது மையல் கொள்கிறாள். தலைவி தன் இல்லத்தில் இருக்கிறாள். பொன்னால் ஆன பாத்திரத்தில் பொரியும் பாலும் உள்ளது. ஆனால் தலைவி உண்ணாதவளாய், நீர் இல்லாத பாலை நிலத்தில் வெப்பமான கலங்கிய நீரை உண்ண தலைவி விருப்பப்பட்டாள் என செவிலித்தாய் மூலம் விளக்குவதை,

“நிழல்ஆன்று அவிந்த நீர்இல் ஆர்இடைக்
கழலோன் காப்பக் கடுகுபு போகி
அறுசுனை மருங்கின் மறுகுபு வெந்த
எவவெங் கலுழித் தவ்வெனக் குடிக்கிய
யாங்கு வல் லுநள்கொல் தானே ஏந்திய
செம்பொற் புனைகலத்து அம்பொரிக் கலந்த
பாலும் பல என உண்ணாள்”[72] குறு-356 (1-7)

என்னும் பாடல் அடிகள் மூலம் கயமன் என்னும் புலவர் விளக்குகிறார்.

### 6.5.3.4 பால் உணவு

பால் உணவு என்பது பால், பாலிலிருந்து கிடைக்கும் தயிர், வெண்ணெய், நெய் போன்ற உணவுகளையும் குறிப்பதாகும். பாலை திணைப் பாடல்களில் பால் உணவு பயின்று வந்த திறத்தை அறிவது முக்கிய நோக்கமாக கொள்ளப்படுகிறது.

தலைவனுடன் காதல் கொண்டு பிரிந்த பின் தலைவிக்கு தம் இல்லத்தில் கொடுக்கும் பால் உணவுடன் தேன் கலந்து கொடுத்த போது மனம் இல்லாமல் இருப்பதை

“பிரசம் கலந்த வெண் சுவைத் தீம் பால்
விரி கதிர்ப் பொற்கலத்து ஒரு கைஏந்தி
புடைப்பின் சுற்றும் பூந்தலைச் சிறுகோல்,
‘உண்’ என்று ஓக்குபு பிழைப்ப”[73] நற்-110 (1-4)

என்னும் பாடல் வழி போதனார் என்னும் புலவர் கவிமொழியில் வெளிப்படுத்துகிறார். பாலில் தேன்கலந்து குடிக்கும் பழக்கம் சங்க காலத்திலேயே தோன்றிவிட்டது எனலாம். இதே கருத்தை அகநானூறு பாலைத்திணை பாடலும் வெளிப்படுத்துகிறது. இதனைப் பின்வரும் பாடல் உணர்த்தும்,

“மெல்லென் சேவடி மெலிய ஏக
வல்லுநர் கொல்லோ தானே - தேம்பெய்து
அளவுறு தீம்பால் அலைப்பவும் உண்ணாள்”[74] அகம்-80 (9-14)

என்னும் பாடல் அடியால் உணரலாம். இவ்விரண்டு பாடலும் பாலைத் திணையை அடிப்படையாகக் கொண்டு தோன்றிய செவிலித்தாய் கூற்றாக அமைந்தவையாகும். குறுந்தொகை செவிலித்தாய் பாடல் ஒன்றில் தலைவி பால் உண்ணாமல் இருந்த சூழலை,

“பாலும் உண்ணாள் பந்துடன் மேவாள்”[75] குறு-396 (1)

என்னும் தொடர் வெளிப்படுத்துகிறது. தலைவனை பிரிந்து தலைவி தன் இல்லத்திற்கு சென்றாள். அங்கு தாய் தேன் கலந்த பாலை கொடுத்தும் உண்ணாத நிலையை,

"பிறைநுதல் வியர்ப்ப உண்டனள் கொல்லோ
தேம் கலந்து அளைஇய தீம்பால் ஏந்திக்
கூழை உளர்ந்து மோழைமை கூறவும்
மறுத்த சொல்லள் ஆகி
வெறுத்த உள்ளமொடு உண்ணா தோளே"[76] அகம்-207 (13-17)

என்னும் பாடல் அடிகளால் அறியலாம்.

### 6.5.3.5 கரும்புச்சாறு

பாலைநில நீர் உணவுகளில் கரும்புச்சாறும் ஒன்றாகும். அவலுடன் கரும்புச்சாறு கலந்து பாணர் முதலியவர்களுக்கு கொடுக்கும் தன்மைக் கொண்டவர்கள் கூறையூர் நகர் மக்களாவர் என்பதை,

"செந்தீ அணங்கிய செழுநிணக் கொழுங்குறை
மென்திணைப் புன்கம் உதிர்ந்த மண்டையொடு
இருங்கதிர் அலமரும் கழனிக் கரும்பின்
விளைகழை பிழிந்த அம்தீம் சேற்றொடு
பால்பெய் செந்நெற் பாசவல் பகுக்கும்
புனல்பொரு புதவின் உறந்தை எய்தினும்"[77] அகம்-237 (9-14)

என்னும் பாடல் மூலம் புலவர் தாயங் கண்ணனார் சுட்டுகிறார்.

### 6.5.3.6 கள்

பாலை நிலத்தில் கள் உணவு பெரிதும் உண்ணப்பட்டதும். கள் பானங்கள், தேன் சேர்ந்த கள், கள்ளின் தெளிவு போன்ற கள் பாணங்களை குடித்தனர். கள் வீட்டில் பாதுகாக்கப்பட்டு விற்கப்பட்டது. விற்பனையாளர்களில் மகளிரும்

இடம்பெற்றனர். மன்னர்கள் முதல் கடைநிலைக் குடிமக்கள் வரை கள்ளுண்டனர். மன்னர் கள்ளுண்டதை,

"இன் கடுங் கள்ளின் இழை அணி நெடுந் தேர்க்

கொற்றச் சோழர் கொங்கர்ப் பணீஇயா"[78] நற்-10 (5-6)

என்னும் பாடல் அடியால் அறியலாம். இப்பாடலில் சோழர் என்னும் சொல் பயின்று வந்ததால் அது சோழ மன்னர் என்பதை அறியலாம்.

மிகவும் களிப்பைத் தரக்கூடிய கள்ளினை உழவர் என்னும் குடியினத்தைச் சேர்ந்தவர் உண்ட நிகழ்வை,

"மறந்து, அவண் அமையார் ஆயினும், கறங்கு இசைக்

கங்குல் ஓதைக் கலி மகிழ் உழவர்"[79] அகம்-37 (1-2)

என்னும் பாடல் அடிகளால் அறியலாம்.

### 6.5.3.7 பண்டமாற்று முறையில் கள்

ஒரு பொருளைக் கொடுத்து மறுபொருளை வாங்கும் முறையே பண்டமாற்று முறை என அறியப்படுகிறது. சங்க காலத்தில் கள்ளை பண்டமாற்றி நெல்களை வாங்கினர். இதனை,

"அருநிறத்து அழுத்திய அம்பினர் பலருடன்

அண்ணல் யானை வெண்கோடு கொண்டு

நறவு நொடை நெல்லின் நாள் மகிழ் அயரும்"[80] அகம்-61 (8-10)

என்னும் பாடல் அடிகளாலும்

"அரியற் பெண்டிர் அல்குல் கொண்ட

பகுவாய்ப் பாளைக் குவிமுனை சுரந்த"[81] அகம்-157 (1-2)

என்னும் பாடலடிகளாலும் அறியலாம்.

இல்லங்களிலும் கள்ளை விற்றனர் என்பதை,

"அரிய லாட்டியர் அல்குமனை வரைப்பில்

மகிழ்தொடை பெறாஅ ராகி, நனைகவுள்

கான யானை வெண்கோடு சுட்டி

மன்று ஒரு புதல்வன் புன்தலை நீவும்" [82] அகம்-245 (9-12)

என்னும் பாடல் அடிகளில் கள் விற்பவள் மகளிர் என அறியலாம். யானை கொம்பை விற்று கள்ளருந்தும் நிலைமையை பாலைத் திணை மக்கள் பெற்றிருந்தனர் என்பதனையும் அறிந்துக் கொள்ள முடிகிறது.

### 6.5.3.8 பாணர்களின் கள்

பாட்டுகள், கருவிகள் இசைக்கும் பாணர்கள் கள்ளை அருந்திய களிப்பால் தெருக்களில் இசைக் கருவிகளை முழக்கம் செய்து மகிழ்ந்ததை,

"மனைமருண்டு இருந்த என்னினும் நனைமகிழ்

நன்னராளர் கூடுகொள் இன்இயம்

தேர்ஊர் தெருவில் ததும்பும்

ஊர்இழந்தன்று தன் வீழ்உறு பொருளே"[83] அகம்-189 (12-15)

என்னும் பாடலடிகளால் அறியலாம்.

### 6.5.3.9 கள்ளைப் பலி செலுத்துதல்

பலி செலுத்தும் போது இரண்டு முறை உண்டு. ஒன்று நினைத்த காரியம் நடந்தேறியபின் பலி கொடுத்தல். மற்றொன்று காரியம் நடக்குமுன் பலி செலுத்திவிட்டு செல்லல். கள்ளைப் பலிக் கொடுக்கும் நிகழ்வில் ஆநிரையைக் கவரும் முன் கொடுக்கின்றனர். இதனை,

"இகல்முனைத் தரீஇய ஏறுடைப் பெருநிரை

நனைமுதிர் நறவின் நாட்பலி கொடுக்கும்

வால்நிணப் புகவின் வடுகர் தேஎத்து"[84] அகம்-213 (6-8)

என்னும் பாடலடிகள் மூலம் புலவர் தாயங் கண்ணனார் வெளிப்படுத்துகிறார்.

### 6.5.3.10 மகிழ்ச்சி வெளிபாட்டில் கள்

வாழ்வில் இன்பம் வரும் வேளைகளில் கள் அருந்துவது வழக்கம். குறிப்பாக திருமணம் விழாவின் போது உறவினர்கள் கள் அருந்தி மகிழ்வர். இச்சூழலை பின்வரும் பாடல்வழி அறியலாம்.

"நனைவிளை நறவின் தேறல் மாந்திப்
புனைவினை நல்இல் தருமணல் குவைஇப்
பொம்மல் ஒதி எம் மகள் மணன் என
வதுவை அயர்ந்தனர் நமரே"[85] அகம்-221 (1-4)

என்னும் பாடல் விளக்குகிறது.

### 6.5.3.11 வேடர்கள் கள் அருந்திய நிலை

பாலை நில வேடவர்கள் புலி யானையைக் கொன்றபின் கள்ளை அருந்துவர். கள்ளை அருந்துவர். கள்ளை உண்டதால் ஏற்பட்ட களிப்பின் மூலம் தெருக்களில் துடி என்னும் கருவி மூலம் ஒலி எழுப்பி செல்வர். இதனை,

"அருஞ்சுரத்து அல்கியேமே இரும்புலி
களிறு அட்டுக் குழுமம் ஓசையும் களிப்பட்டு
வில்லோர் குறும்பில் ததும்பும்
வல்வாய்க் கடுந்துடிப் பாணியும் கேட்டே"[86] அகம்-261 (12-15)

என்னும் பாடலடியால் அறியலாம். கள்ளில் ஒரு வகை தோப்பி என்னும் பெயர் பெற்ற கள்ளாகும். இக்கள்ளை ஊனை உண்றபின் எயின மறவர் குடித்தனர் இதனை,

"விளர்ஊன் தின்ற வேட்கை நீங்கத்
துகள் அற விளைந்த தோப்பி பருகி
குலாஅ வல்வில் கொடுநோக்கு ஆடவர்"[87] அகம்.48 (2-3)

என்னும் பாடல் அடிகள் புலப்படுத்துகின்றன. இங்ஙனம் கள்ளின் களிப்பை பாலை நில மக்கள் பருகி வாழ்ந்து வந்தனர்.

### 6.6 பாலை நில மக்களின் விருந்தோம்பல் பண்புகள்

பாலை நில மக்கள் விருந்தோம்பல் சிந்தனைகள் காணப்படுவதை. பாலைத் திணைப் பாடல்கள் புலப்படுத்துகின்றன. விருந்தோம்பலில் தலைவனின் பங்கும், தலைவியின் பாங்கும் முக்கியத்துவம் வாய்ந்தவையாகக் கூறப்பட்டுள்ளது. இக்கருத்தை விளக்குவதே இங்கு முக்கிய நோக்கமாகும்.

#### 6.6.1 பெண்களின் கடமை:

பொருள் ஈட்டுவது ஆண்மகனின் கடமை ஆகும். வீட்டிலிருந்து விருந்தினரை உபசரிப்பது பெண்டீரின் கடமை ஆகும்.

"வினையே ஆடவர்க்கு உயிரே வாள்நுதல்

மனைஉறை மகளிர்க்கு ஆடவர் உயிர் என"[88] குறு-135 (1-2)

என்னும் குறுந்தொகை பாலைத்திணை பாடல் சுட்டிக்காட்டுகிறது. பொருள் என்பது நிலையாமை. எனவே பொருளை விரும்புதல் தவறு. மனைவி வரும் விருந்தினரை உபசரித்து கூடி இருக்கும் போது கிடைக்கும் இன்பமே பெரிது என்பதை,

"ஒழிதல் வேண்டுவல் சூழின் பழிஇன்று

மன்னவன் புறந்தர வரு விருந்து ஓம்பி

தன் நகர் விழையைக் கூடின்

இன் உறல் வியன் மார்ப"[89] கலி-8 (19-22)

என்னும் பாடல் அடிகள் புலப்படுத்துகின்றன.

இல்லறம் நடத்தும் வேளையில் இரவலர் கேட்கும் போது குறைவிலாது கொடுப்பவரின் செல்வம் குறையாமல் வளரும் என்னும் சிந்தனையை,

"ஈதலில் குறை காட்டாது, அறன் அறிந்து ஒழுகிய

தீதிலான் செல்வம் போல், தீம் கரைமரம் நந்த"[90] 27(1-2)

என்னும் பாடல் அடிகளால் அறியலாம்.

தலைவனும் தலைவியும் களவு வாழ்க்கை வாழ்ந்து கற்பு வாழ்க்கை வாழத் துணிந்தனர். அதற்கு முடியாமல் போக தலைவனும் தலைவியும் உடன்போக்கு மேற்கொண்டனர். இவர்கள் சென்ற நாடானது துளுநாட்டைப் போல விருந்தினர்களை உபசரிக்கும் தன்மையை போன்றது என்பதை,

"பாகல் ஆர்கைப் பறைக் கட்பீலித்

தோகை காவின் துளுநாட்டு அன்ன

வறுங்கை வம்பலர்த் தாங்கும் பண்பின்

செறிந்த சேரிச் செம்மல் மூதூர்

அறிந்த மாக்கட்டு ஆகுகதில்ல"[91] அகம்-15 (4-8)

என்னும் பாடலடியால் உணரலாம். பொருள் பிரிவு என்பது ஆடவர்க்குரியதாகும். தலைவியின் விருந்தோம்பல் பண்புகளை நினைத்தாவது பிரியாமல் இருப்பாய் என உரைப்பதாய் அமைந்த பாலைத்திணை பாடல் பின்வருமாறு,

"ஏந்து முலை முற்றம் வீங்க, பல்ஊழ்

சேயிழை தெளிர்ப்பக் கனவ இந்நாளும்

மனை முதல் வினையொடும் உவப்ப

நினை - மாண் நெஞ்சம்; - நீங்குதல் மறந்தே" [92] அகம் 51(11-14)

என்னும் பாடல் அடிகள் மூலம் பெருந்தேவனார் வெளிப்படுத்துகிறார். ஒரு இல்லத்தில் விருந்து என்பது ஒரு நாட்டின் நகர்வளத்துக்கு உவமையாக்கப்பட்டுள்ளதை,

"வளம்கெழு கோசர் விளங்குபடை நூறி

நிலம்கொள வெ∴கிய பொலம்பூண் கிள்ளி

பூவிரி நெடுங்கழி நாப்பண், பெரும்பெயர்க்

காவிரிப் படப்பைப் பட்டினத்தன்ன

செழுநகர் நல்விருந்து அயர்மார் ஏமுற"[93] அகம். 205 (9-13)

என்னும் பாடலில் புலவர் நக்கீரர் வெளிப்படுத்துகிறார். இங்ஙனம் பாலைத்திணைப் பாடலில் உணவு முறைகள் பலவிதமான முறையில் பயின்று வந்துள்ளதை அறியலாம். பாலைநில மக்களின் உணவு பழக்கத்தை வெளிப்படுத்துகின்றன.

### 6.7 பத்துப்பாட்டில் பாலைநில விருந்தோம்பல் கூறுகள்

பத்துப்பாட்டில் பாலைத்திணைப் பாடல்கள் ஆற்றுப்படை நூலைத் தவிர்த்து நோக்கினால் பட்டினப்பாலை என்னும் அகநூல் மட்டுமே பாலைத்திணைக் குறித்த அகநூலாகும். எனவே இங்கு பட்டினப் பாலை நூலை பாலைத்திணைப் பாடலாக எடுக்கப்பட்டு அதில் பயின்று வந்துள்ள விருந்தோம்பல் கூறுகளை எடுத்து ஆராய்வதே நோக்கமாகும்.

#### 6.7.1 பட்டினப்பாலை கருவும் உருவும்

பாலைத்திணையின் உரிப்பொருளை அடிப்படையாக்கி படைத்த கவிதை அடிகளே பட்டினப் பாலை. பட்டினப்பாலை கரிகாற் பெருவளத்தான் என்னும் சோழ மன்னனைத் தலைவனாகப் பாடப்பட்டவை. ஆனால் உரிப்பொருளில் பயின்று வந்த தலைவன் பாலை நிலத்தைச் சார்ந்தவன். முந்நூற்றியொரு அடிகளைக் கொண்ட இந்நூலில் பாலை நில மக்களின் உணவு முறைகளையும், விருந்தோம்பும் முறைகளையும் காண்பதே இங்கு முக்கியமாகும்.

#### 6.7.2 சோறு உணவு

பாலை நில மக்கள் சோறு சமைத்து உண்டதைப் பட்டினப்பாலை விரிவாக விளக்குகிறது. பெரிய பாத்திரத்தில் சோற்றாக்கி அதன் வடிக்கஞ்சி வடித்த நிலை ஆறுபோல ஓடுவதையும், சிறுவர் விளையாடியும், தேர் சென்றும் உழுது சேராக்கியது போல மண்ணின் தன்மையும் நிலையையும் அறியலாம். இதனை,

“அறம நிலைஇய அகன் அட்டில்

சோறு வாக்கிய கொழுங்கஞ்சி

யாறுபோலப் பரந்தொழுகி

ஏறுபொரச் சேறாகித்” [94] பட். (43-46)

என்னும் பாடலடியால் அறியலாம். விருந்தினர்களுக்குச் சோறு கொடுத்தும் குறையாது பெருஞ்சோற்று நிலையை,

“கொடுங்கால் மாடத்து நெடுங்கடைத் துவன்றி

விருந்துண்டு ஆனாப் பெருஞ்சோற்று அட்டில்”[95] பட். பா (261-262), ப.37

என்னும் அடிகளும் சோறு உண்ட நிகழ்வையும், சோறு சமைத்ததையும் சித்திரப்படுத்துகின்றன.

### 6.7.3 ஊண்கள்

பட்டினப்பாலையில் பல்வேறு விதமான ஊண் உணவுகள் குறித்த குறிப்புகள் இடம்பெற்றுள்ளன.

### 6.7.4 மீன்

இறால் மீன்களைப் பக்குவமாக சுட்டு தின்பர். வயலில் இருக்கும் ஆமையையும் சுட்டு தின்பர் இதனை,

“கடலிறவின் சூடு தின்றும்

வயல் ஆமைப் புழுக்குண்டும்”[96] பட். (63-64)

என்னும் அடிகள் மூலம் அறியலாம். மீன் பிடிக்கச் செல்லும் பரதவர்கள் தம் மனைவியருடன் மீன் இறைச்சி உண்டதை,

“பைந்தழை மா மகளிரொடு

பாயிரும் பனிக்கடல் வேட்டஞ் செல்லாது

உவவுமடிந்து உண்டாடியும்”[97] பட். (91-93)

என்னும் பாடல் அடிகள் வெளிப்படுத்துகின்றன. மீனை அறுத்து இறைச்சியை வெட்டி பொரிப்பதால் உண்டாகும் ஒலியை,

“மீன் தடிந்து விடக்கு அறுத்து

ஊன் பொரிக்கும் ஒலி முன்றில்”[98] (176-177)

என்னும் பாடல் அடிகளில் பொரிக்கும் உணவுச் சுட்டப்படுகின்றது. எனவே உணவு முறையில் சுட்டுத் தின்ற நிலைமாறி பொரித்து உண்ணுகின்ற நிலையை பட்டினப்பாலைப் பதிவு செய்துள்ளதை அறியமுடிகிறது.

### 6.7.5 ஊன் இறைச்சியை விற்கும் நிலை

மீன்களின் அதிகரிப்பும், இறைச்சி விலங்குகளின் அதிகரிப்பும், புகார் நகர மக்களின் உணவும் தங்கு தடையின்றி அதிகரித்துள்ள வளத்தை உடையது. இதனால் மீதமுள்ள ஊன் உணவுகளை விற்கும் நிலைக்கும் வந்ததை,

“கிளை கலித்துப் பகைபேணாது

வலைஞர் முன்றில் மீன் பிறழவும்

விலைஞர் குரம்பை மா ஈண்டவும்

கொலை கடிந்தும் களவு நீக்கியும்”[99] (196-199)

என்னும் அடிகளால் அறியலாம். மீன்களையும், இறைச்சிகளையும் விற்று அதில் வருமானம் அதிகம் ஆனதால் அவர்கள் (பரதவரும், எயினவரும்) கொலை, கொள்ளை தொழிலில் ஈடுபடாமல் வாழ்ந்ததையும் அறிந்து கொள்ள முடிகிறது. பண்டமாற்று முறையில் உணவு பொருட்கள் தனி இடத்தைப் பிடித்தன. உணவு பொருட்களைப் பெட்டியில் அடைத்து மெழுகு பூசி ஏற்றுமதி செய்தனர். இதனை,

“கூழுடைக் கொழு மஞ்சிகைத்

தாழுடைத் தன்பணியத்து

வாலரிசிப் பலிசிதறிப்

பாகு உகுத்த பசுமெழுக்கின்

காழூன்றிய கவி கிடுகின்”[100] (163-168)

என்னும் பாடலடிகள் மூலம் புலவர் வெளிப்படுத்துகிறார். விருந்தினர்களை உபசரிக்கும் நிலை.

விருந்தினர்களை உபசரிக்கும் நிலை பட்டினப் பாலையில் மிகச் சிறப்பாக பதிவுச் செய்யப்பட்டுள்ளது. பருந்திற்கு பிண விருந்து வைத்த வீரனும் இதில் அடங்குவான். பகைவர்களைப் போரில் அழித்து கீழே விழுந்து விடும் திறத்தையும், அதை பருந்திற்கு விருந்தளிப்பதையும்,

“வடிமணிப் புரவியொடு வயவர் வீழப்

பெருநல் வாணத்துப் பருந்து உலாய் நடப்பத்

தூறுஇவர் துறுகல் போலப் போர்வேட்டு”[101] (232-234)

என்னும பாடல் அடிகள் மூலம் அறியலாம். விருந்தினர்களுக்குப் பலசுவையான பண்டங்களும் கொடுத்தும் சுவையான சோறு படைத்தும் உபசரித்து வாழ்ந்ததை,

“பண்ணியம் அட்டியும் பசும்பதம் கொடுத்தும்

புண்ணியம் முட்டாத் தண்நிழல் வாழ்க்கை

கொடுமேழி நசை உழவர்

நெழுநுகத்துப் பகல்போல்

நடுவுநின்ற நல்நெஞ்சினோர்

வடு அஞ்சி வாய்மொழிந்து

தமவும் பிறவும் ஒப்ப நாடிக்

கொள்வதூஉம் மிகை கொளாது கொடுப்பதூஉம் குறைகொடாது

பல்பண்டம் பகர்ந்து வீசும்”[102] (203-210)

என்னும் பாடல் அடிகள் சித்திரப்படுத்துகின்றன.

### 6.7.6 கரும்பு ஆலை

பட்டினப்பாலையில் தொடக்க அடிகள் கரும்பு ஆலை குறித்த குறிப்புகள் காணப்படுகின்றன. எனவே கரும்புச்சாறு குடிப்பதும் சர்க்கரை செய்வதும் முக்கியமான வேலையாக இருந்துவந்துள்ளதை,

"விளைவு அறா வியன் கழனிக்
கார் கரும்பின் கமழ் ஆலைத்
தீத்தெறுவின் கவின் வாடி"[103] பட். (37-10)

என்னும் பாடல் அடியால் புலப்படுத்தப்படுகிறது.

இங்ஙனம் பட்டினப்பாலை உணர்த்தும் உணவு முறைகள், விருந்தோம்பும் முறைகள், பலி உணவு, உணவு ஏற்றுமதி ஆகியவை சங்க இலக்கியங்களின் வாயிலாக அறியமுடிகிறது.

## 6.8 தொகுப்புரை

பாலைத்திணைப் பாடல்களில் உணவு நிலையை அடிப்படையாக நோக்கும்போது நிலத்தை அடிப்படையாக வைத்தே கவிதைகள் பயின்று வந்துள்ளன. விவசாயம் குறித்த பாடல்களும் இடம் பெற்றுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. விலங்குகள் உண்ட மீதி இறைச்சிகளைப் பாலை நில மக்களும், உப்பு விற்கும் உமணர்களும் சமைத்து உண்டனர். உப்பு விற்கும் வணிகர்கள் பாலை நிலத்தில் தங்கி சமைத்து உண்டு சென்றனர்.

பாலை நிலத்தில் முக்கிய உணவு பழக்கவழக்கமாக பலி உணவு திகழ்ந்தது. எயினர், மறவர், வெட்சி வீரர் போன்றோர்களுக்கு போரில் வீரமரணம் அடைந்து விட்டால் அவர்களின் சிறப்பைக் கல்லில் எழுதி வழிப்பட்டனர். பாலை நிலத்தில் கள் தடையின்றி உண்ணப்பட்டது. தோப்பி, கள்ளின் தெளிவு ஆகிய பானங்களைக் குடித்து மறவர் இன மக்கள் மற்றும் அவ்வழி செல்வோரும் உண்டனர். கலங்கிய நீரையும் உண்டனர் என்பதை அறிய முடிகிறது. நீர் உற்பத்தியும் திகழ்கின்றன. நீர் உற்பத்திக்காக நிலத்தைத் தோண்டும் நிலையும் பாலை நில மக்களின் முயற்சிகளுள் ஒன்றாக இருந்தன.

விருந்தினர்களுக்கு உணவு, வறிவர்களுக்குச் செல்வம் ஆகியவற்றைக் கொடுப்பதன் மூலம் தங்களின் செல்வம் பெருகும் என்று நம்பினர். தேன், பால், தயிர், வெண்ணெய் போன்ற நீர் உணவுகளும் விருந்திற்குப் பயன்படுத்தப்பட்டன. இறைச்சி உணவுகள் பல்வேறு சூழ்நிலைகளில் இருந்து கிடைக்கப் பெற்றன. ஆறலைக் கள்வர்கள் வழியில் வரும் மக்களைக் கொன்று, அவர்கள் கொண்டு வந்த பொருட்களைத் தாமும் உண்டு, தம் சுற்றத்தாருக்கும் கொடுத்து வாழ்ந்து வந்தனர் என அறிய முடிகிறது.

விலங்குகள் விலங்குகளை வேட்டையாடி கிடைத்த இறைச்சியையும், எயினர், மறவர் முதலிய இனகுடி மக்கள் வேட்டையாடிய போது கிடைத்த இறைச்சியையும் சுற்றத்தாருக்கும், விருந்தினர்க்கும் பகிர்ந்து அளித்து

விருந்தோம்பல் பண்பை வளர்த்தனர். உணவுகள் முத்திரையிட்டு மெழுகினால் ஒட்டி வெளிநாடுகளுக்கு அனுப்பப்பட்டதை பட்டினப்பாலை வெளிப்படுத்துகிறது. எயினர்களாகிய கானவர்கள் உணவுப் பொருட்களைக் கொள்ளையிட்டு சென்றனர். இங்ஙனம் பாலை நில கவிதைகள் உணவு உபசரிப்பதலையும், விருந்தோம்பல் பண்புகளையும் வெளிப்படுத்தியதை அறிய முடிகிறது.

பாலை நிலத்தில் உப்பு விற்கும் வணிகர் தங்கி சமைத்து உண்டனர் பலி உணவு அதிகமாக கிடைக்கும். விருந்தோம்பும் முறை சிறப்பாக நடைப்பெற்றதை அறியலாம்.

புறத்திணை இலக்கங்களில் புறத்திணை விளக்கம், எட்டுத்தொகை மற்றும் பத்துப்பாட்டு புற நூல்களில் விருந்தோம்பல் பற்றியும், மக்களின் உணவு மற்றும் விருந்து செய்திகளை பற்றி அடுத்த இயலில் விரிவாகக் காணலாம்.

# குறிப்புகள்

1. சிலம்பு. நா.செல்வரசு, சிலப்பதிகாரம், காடுகாண், (64 - 66), ப.166
2. ச.வே.சு., தொல்காப்பியம், 2, பக்.10, 11
3. மேலது, ப.8
4. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.2(1-3), ப.4
5. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.4(1-4), ப.12
6. அ.தெட்சிணாமூர்த்தி (ப.ஆ), ஐங்குறுநூறு, பா.315(1-4), ப.696
7. அ.மாணிக்கனார் (ப.ஆ), கலித்தொகை, பா.5(1-4), பக்.54, 55
8. நா.சுப்பிரமணியன், சங்க காலத் தமிழர் வாழ்வு, ப.59
9. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.3(5-7), ப.16
10. மூ. சண்முகம் பிள்ளை, குறுந்தொகை, பா.131(3-6), ப.122
11. ந.கந்தையா பிள்ளை, தென்னிந்திய குலங்களும் குடிகளும், ப.102
12. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.63(11-13), ப.327
13. மூ. சண்முகம் பிள்ளை, குறுந்தொகை, பா.388(2-4), ப.338
14. மேலது, பா.390(3-5), ப.340
15. சங்ககாலச் சிறப்புப் பெயர்கள், ப.351
16. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, தொகுதி-1, பா.61(11-13), ப.319
17. நமசிவாயம், உணவு பண்பாடு, பக்.5, 6
18. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.7(7-10), ப.13
19. அகா பெருமாள், உணவுப் பண்பாடு, ப.6
20. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.1(10-13), ப.55
21. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.384(1-5), பக்.709, 710
22. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு தொகுதி, பா.377(1-4), ப.255
23. மேலது, பா.393(9-17), ப.312

24. மூ. சண்முகம் பிள்ளை, குறுந்தொகை, பா.277(1-3), ப.243

25. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.73(1-3), ப.130

26. மேலது, பா.281(1-6), ப.518

27. மேலது, பா.293(1-3), ப.539

28. சிலம்பு. நா.செல்வரசு, சிலப்பதிகாரம், வே.வ.18,20, ப.193

29. மேலது, வே.வ.14-16, ப.194.

30. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, தொகுதி-1, பா.35(3-11), ப.207

31. ந.செல்வராசு, சங்க இலக்கிய மறு வாசிப்பு சமூகவியல் மானுடவியல் ஆய்வுகள், ப.126

32. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு தொகுதி-1,பா.63(10-14), ப.327

33. மேலது, பா.67(1-14), ப.363

34. சங்க காலச் சிறப்பு பெயர்கள், ப. 253

35. மேலது, ப.255

36. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு-1, பா.101(4-7), ப.490

37. துரை.அரங்கசாமி, சங்க காலச் சிறப்புப் பெயர்கள், ப.255

38. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.103(8-11), ப.490

39. மேலது, பா.119(7-9), ப.565

40. மேலது-II, பா.154(1-10), ப.159

41. மேலது-II, பா.167(1-10), ப.187

42. மேலது-II, பா.191(1-10), பக்.276, 277

43. மேலது-II, பா.207(1-6), ப.336

44. மேலது-II, பா.173(8-11), ப.208

45. மேலது-II, பா.169(5-8), ப.194

46. அ.தெட்சிணாமூர்த்தி, ஐங்குறுநூறு, பா.364(1-3), ப.795

47. மேலது, பா.365(1-3), ப.797

48. மூ. சண்முகம் பிள்ளை, குறுந்தொகை, பா.274(1-5), ப.241

49. அ.தெட்சிணாமூர்த்தி (ப.ஆ), ஐங்குறுநூறு, பா.323(1-3), ப.715

50. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு-1, பா.21(16-19), பக்.144, 145

51. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.43(15), ப.75

52. அ. மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு-I, பா.91(1-5)

53. மேலது-II, பா.165(1-5)

54. அ.மாணிக்கனார் (ப.ஆ), கலித்தொகை, பா.11(8-9), ப.84

55. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.107(1-4), ப.193

56. மேலது, பா.137(6-8), ப.251

57. மேலது, பா.202(1-6), ப.370

58. மூ.சண்முகம் பிள்ளை, குறுந்தொகை, பா.37(1-2), ப.41

59. மேலது, பா.255(1-5), ப.224

60. மேலது, பா.213(2-6), ப.191

61. மேலது, பா.256(1-3), ப.225

62. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.165(6-9), ப.301

63. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.193(2-10), ப.284

64. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.352(1-7), ப.652

65. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.117(12-19), ப.558

66. தெட்சிணாமூர்த்தி, ஐங்குறுநூறு, பகுதி-2, பா.304(1-2), ப.668

67. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு-III, பா.321(9-10), ப.68

68. மேலது-II, பா.79(1-6), ப.398

69. மூ.சண்முகம் பிள்ளை, குறுந்தொகை, பா.56(1-4), ப.58

70. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.33(1-6), ப.57

71. மூ.சண்முகம் பிள்ளை, குறுந்தொகை, பா.262(5-8), ப.230

72. மேலது, பா.356(1-7), ப.313

73. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.110(1-4), ப.199

74. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.80(9-14), ப.439

75. மூ.சண்முகம் பிள்ளை, குறுந்தொகை, பா.396(1), ப.345

76. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.207(13-17), ப.336

77. மேலது, பா.237(9-14), ப.448

78. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), நற்றிணை, பா.10(5-6), ப.18

79. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.37(1-2), ப.217

80. மேலது, பா.61(8-10), ப.319

81. மேலது, பா.157(1-2), ப.152

82. மேலது, பா.245(9-12), ப.476

83. மேலது, பா.189(12-15), ப.270

84. மேலது, பா.213(6-8), ப.360

85. மேலது, பா..221(1-4), ப.388

86. மேலது, பா.261(12-15), ப.537

87. மேலது, பா.48(2-3), ப.551

88. மூ.சண்முகம் பிள்ளை, குறுந்தொகை, பா.135(1-2), ப.126

89. அ.மாணிக்கனார் (ப.ஆ), கலித்தொகை, பா.8(19-22), ப.69

90. மேலது, பா.27(1-2), ப.159

91. அ.மாணிக்கனார் (ப.ஆ), அகநானூறு, பா.15(4-8), ப.118

92. மேலது, பா.51(11-14), ப.278

93. மேலது, பா.205(9-13), ப.328

94. அ. மாணிக்கனார் (ப.ஆ), பட்டினப்பாலை, (43-46), ப.352, 353

95. மேலது, (261-262), ப.376

96. மேலது, (63-64), ப.354

97. மேலது, (91-93), ப.356

98. மேலது, (176-177), ப.366

99. மேலது, (196-199), ப.368

100. மேலது, (163-168), ப.364

101. மேலது, (232-234), ப.371

102. மேலது, (203-210), ப.368

103. மேலது, (7-10), ப.349

# இயல் - 7

## புறத்திணை இலக்கியத்தில் விருந்தோம்பல் கூறுகள்

### 7.0 முன்னுரை

பழந்தமிழ் இலக்கியங்கள் இரண்டு பிரிவுகளில் பாடப்பெற்றன. அவை அகம், புறம் என்பன. இவற்றில் புறம் என்பது ஒரு தலைவனின் புகழ், வெற்றி, செல்வம் ஆகியவற்றைப் பாடுபொருளாக்கி கவிதை புனைவது. புகழ் மொழிந்த செய்தியாக கவிதை அமையாமல் அழகியல் நுட்பத்துடன் அமைந்துள்ளது. அவ்வழகியலில் சங்க கால மக்களின் புறவாழ்க்கையின் பண்பாட்டு கூறுகள் அடங்கியுள்ளன. எனவே அவற்றில் விருந்தோம்பல் பண்புகள் குறித்து ஆய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

### 7.1 விளக்கம்

சங்க இலக்கிய புறத்திணை நூல்களில் காணப்படும் விருந்தோம்பல் பண்புகளை நான்கு பிரிவுகளாக பிரிக்கலாம். அவை,

1. புறத்திணை விளக்கம்
2. எட்டுத் தொகை புறநூல்களில் விருந்தோம்பல்
3. ஆற்றுப்படை நூல்களில் விருந்தோம்பல் பண்புகள்
4. பத்துப்பாட்டு புறநூல்களில் விருந்தோம்பல் பண்புகள்

என்பவையாகும்.

### 7.1.1 புறத்திணை விளக்கம்

சங்க இலக்கியத்தின் இரு பாடுபொருள்களில் ஒன்று புறத்திணை குறித்து பாடுவதாகும். மற்றொன்று அகத்திணை குறித்து பாடுவதாகும். அகத்திணை பாடல்கள் கூற்று அடிப்படையில் அமைய புறத்திணை பாடல்கள் துறை அடிப்படையில் அமைந்துள்ளன. புறத்திணைக் குறித்து தொல்காப்பியம் அகத்திணை இறுதியிலேயே செப்பி விடுகிறது. இதனை,

"புறத்திணை மருங்கின் பொருந்தின் அல்லது

அகத்திணை மருங்கின் அளவுதல் இலவே"[1] தொல்.பொருள். அகத் - 1001

என்னும் நூற்பாவழி புலப்படுத்துகிறது. மேலும் புறத்திணையில் முதற் நூற்பாவின் முதல் இரண்டு அடிகள் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தவையாக விளங்குவதை

"அகத்திணை மருங்கின் அரில்தப உணர்ந்தோர்

புறத்திணை இலக்கணம் திறப்படக் கிளப்பின்"[2] தொல்.பொருள்.புறத் - 1002

என்னும் அடிகளில் புறத்திணையை அகத்திணையோடு இயம்பப்படுத்துகிறது. ஒவ்வொரு அகத்திணைக்கும் அதோடு பொருந்திய புறத்திணைக் குறிப்பிடுகிறது. எனவே புறத்திணை எவை என்பதைக் கீழ்காணுமாறு கூறுகின்றனர்.

| | **புறத்திணை** | **அகத்திணை** |
|---|---|---|
| 1. | வெட்சி, கரந்தை | குறிஞ்சி |
| 2. | வஞ்சி | முல்லை |
| 3. | உழிஞை | மருதம் |
| 4. | தும்பை | நெய்தல் |
| 5. | வாகை | பாலை |
| 6. | காஞ்சி | பெருந்திணை |
| 7. | பாடாண் | கைக்கிளை |

என்று தொல்காப்பியம் அகத்திற்கு பொருந்திய புறத்திணைகளைக் கூறுகிறது. புறத்திணை விளக்கம்.

குறித்த இலக்கண நூல்கள் குறைவே. அவற்றுள் காலத்தால் முந்தியது "பன்னிருபடலம்" என்னும் நூலாகும். அகத்தியரின் மாணக்கர் பன்னிருவர் எழுதிய காரணத்தால் இது பன்னிரு படலம் என அழைக்கலாயிற்று. இந்நூலின் நூற்பாக்கள் உரை எழுதிய மேற்கோளிலிருந்து தொகுக்கப்பெற்றவை.

### 7.1.1.1 புறப்பொருள் வெண்பா மாலை

"வடவேங்கடம் - தென்குமரி என்று தமிழ்குடியின் பெருமையைப் பறைசாற்றிய நூல்"[3] எனலாம். இதன் ஆசிரியர் ஐயனாரிதனார். இந்நூல் குறித்து, சோ. ந. கந்தசாமி பின்வருமாறு கூறுகிறார்.

"புறத்திணை பற்றிய இலக்கணச் சூத்திரங்களும் ஒவ்வொரு துறைக்கும் உதாரண வெண்பாக்களும், அவ்வெண்பாக்களின் சாரத்தைத் தாங்கி அவற்றிற்கு முன்னர் நிற்கும் கொளுக்களும் கொண்டு இந்நூல் உருவாக்கப் பெற்றது"[4] என்று உரைக்கிறார்.

### 7.1.1.2 பொருள் மாற்றம்

பிற்கால இலக்கண நூற்களில் தொல்காப்பியம் கூறிய அகப்புறப் பொருளின் விரிவாக்கத்தைக் காணமுடிகிறது. சிற்றரசர் இயற்றிய வீரசோழியம், அகம், அகப்புறம், புறம், புறப்புறம் என நான்காகப்பகுக்கிறது. இதனை,

"ஆற்றும் அகமே புறமே அகப்புறம் அன்றிவெற்றி
போற்றும் புறப்புறம் என்றாம் பொருள்: அளப்பான் அளவை
ஏற்றும் பிரமேயம் என்றும் வகுப்பர்: இவையுமின்றிச்
சாற்றும் புலவரும் எண்ணிறந் தார் என்பர் தாழ்குழலே"[5]

வீரசோழியம், பொருள் - 84

என்னும் நூற்பாவால் பதிவு செய்துள்ளார்.

### 7.1.1.3 புறத்திணையில் விருந்தோம்பல் கூறுகள்

புறத்திணையின் முதல் திணையான வெட்சி திணையில் துறைகள் கூறும் போது பாதீடு, உண்டாட்டு, கொடை ஆகிய மூன்று துறைகள் பகிர்ந்து உண்ணுதலைக் குறிப்பதாகும். இதற்கு உண்டாட்டு என்று ஐயனாரிதனார் இலக்கணம் வகிக்கிறார்.

“தொட்டிமிடுங் கழன் மறவர்

மட்டுண்டு மகிழ்தூங்கின்று”[6] புற.பொ.வெண்பாமாலை நூல்.13

இதில் உண்டாட்டு என்பது கள் என்பது பொருளைத் தருகிறது. அவை பாதீடும், உண்டாட்டும். இதற்கு உரையைப் பின்வருமாறு

“தாம் கொண்டு வந்த ஆநிரைகளைத் தம் ஊரகத்துக் கொண்டு வந்து நிறுத்தலும், ஆநிரைகளை பகுத்துக் கொடுத்தலும், ஆநிரைகளைப் பங்கிட்ட வீரர் களிப்பினால் மகிழும் விளையாட்டும், தம் பங்கிற்குக் கிடைத்த நிரைகளை இரப்பார்க்குக் கொடுத்தலும்”[7] என்று பொருளில் அமைந்துள்ளது.

“கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும் மெல்லியற் பொறையும் வல்லாதின் விருந்துபுறத் தகுதலும் சுற்றம் ஓம்பலும் பிறவும்”[8] எனத் தலைமகனின் குணங்களைச் சொல்லுமிடத்தில் தொல்காப்பியர் விருந்தினர்களைப் பேணாது விடுத்த குடும்பத் தலைவி ஒழுக்க நெறி இழந்தவளாகக் கருதப்படுவாள்.

“இருந்தோம்பி இல்வாழ்வது எல்லாம் விருந்தோம்

வேளாண்மை செய்தார் பொருட்டு”[9] திருக்குறள் அகராதி (9-1)

என்று குடும்பத் தலைவனின் நோக்கமே விருந்தோம்பலாகத்தான் இருக்க வேண்டும் என்கிறார்.

விருந்துக்கான நிமித்தங்களாக கரந்தைத் திணையின் கடைசி ஐந்து துறைகள் அமைகின்றன. இத்துறையில் விருந்தின் நிகழ்வுகள் அமையலாம்.

“காட்சி, கால்கோள், நீர்ப்படை, நடுகல்

சீர்த்தகு சிறப்பின் பெரும்படை வாழ்த்தல்”[10] (தொல். புறத்.சூத்.5)

என்னும் நூற்பாவில் கூறப்பட்ட துறைகள் ஒருவரை குறித்ததில்லை. எனவே மன்னன் உட்பட்ட வீர்கள் அனைவரும் சூழ்ந்திருப்பர். இங்கு உணவுகளை பாதீடு

செய்ய வாய்ப்பு உள்ளது. எனவே புறத்திணையில் உணவை மற்றவர்களுக்குக் கொடுத்து உண்பதை வழக்கமாகக் கொண்டுள்ளனர் என்பதை அறியலாம். இன்னும் வஞ்சித் திணையில் பெருஞ்சோற்று நிலை என்னும் துறை உண்டு. இது,

"ஒவ்வொரு வீரர்க்கும் விரைந்து வழங்குதற்குரிய வகையில் பிண்டித்து வைக்கப்பெற்ற உண்டியைக் கொடுத்தல் பற்றியது இத்துறை படையாளருடன் வேந்தன் தானும் உடன் உண்பான் போல்வதோர் முகமன் செய்தற்குப் பெருஞ்சோற்றைத் திரளைகளாக உருட்டு வைத்தல் அக்காலத்துப் பழக்கம் என்பது நச்சினார்க்கினியர் உரையினால் உணரப்படும்"[11] செய்தியாகும். மேலும் வாகைத் திணையை எடுத்தியம்பும் தொல்காப்பியத்தில் விருந்தோம்பல் கூறுகள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

"அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்
ஐவகை மரபின் அரசர் பக்கமும்
இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்"[12] தொல்.புறத்.சூத்.17

என்னும் நூற்பா விளக்குகிறது. இதன் உரை விளக்கத்தினை,

"ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்ற ஆறு திறனாகிய அந்தணர் பக்கமும் ஆதலும், வேட்டலும், ஈதல் படை வழங்குதல், குடிகளைப் பாதுகாத்தல் என்ற ஐவகை மரபின் அரசர் பக்கமும் வணிகர் வேளாளர்க்கு ஓதல், வேட்டல், ஈதல், உழவு, வணிகம், நிறையோம்பல் என்ற ஆறும்"[13] என்னும் உரையில் ஈதல், ஓம்பல் போன்ற கூறுகள் அக்கால விருந்தோம்பலின் ஒரு கூறையாக அமைகின்றன. இங்ஙனம் புறத்திணையில் விருந்தோம்பல் கூறுகள் அரசியலுக்குபட்பட்டு அல்லது போரின் வரன்முறையாகப் பயின்று வந்துள்ளதை அறியமுடிகிறது. மேலும் பாடாண் திணைச் சார்ந்த துறைகளுள் ஆற்றுப்படை என்னும் துறை விருந்தோம்பல் பதிவுகளின் அடையாளமாக அமைந்துள்ளது என்று கூறினும் ஐயமில்லை.

### 7.1.2 எட்டுத் தொகை புறநூல்களில் விருந்தோம்பல்

எட்டுத் தொகை நூற்களில் இரண்டு புறநூல்களும், ஒரு அகப்புற நூலும் காணப்படுகின்றன. இந்நூல்களில் விருந்தோம்பல் கூறுகள் எங்ஙனம் பதிவாகியுள்ளன என்பதை நான்கு நிலைகளில் காணலாம்.

1. அரிசி உணவுகள்
2. தானிய உணவுகள்
3. இறைச்சி உணவுகள்
4. நீர் உணவு

### 7.1.2.1 அரிசி உணவுகள்

சங்க இலக்கியத்தில் அரிசி முக்கிய உணவாக பயன்பட்டுள்ளதை அறியமுடிகிறது. பெருஞ்சோற்று, பிண்டச்சோறு போன்ற சொல்களைப் புற இலக்கியங்கள் பதிவுச் செய்துள்ளன. வேளாண்மை செய்து நெல் எடுத்து காயவைத்து, இடித்து அரிசி ஆகின்றன. இவ்வரிசியை ஆங்கிலத்தில் "ரயிஸ்" (Rice) என்று அழைப்பர். மலையாள மொழியில் "அரி" என்றே அழைக்கின்றனர்.

சங்க இலக்கியத்தில் அரிசி என்னும் சொல்லிற்கு பல பெயர்கள் அமைந்துள்ளதை காணலாம். அவை அல்லியரிசி, திணையரிசி, நெல்லரிசி, புல்லரிசி, மூங்கிலரிசி ஆகியவற்றை குறிப்பிடுகின்றது. தமிழ் பேரகராதி"[14] அரிசியின் வகையை குறிக்கின்றது. அவையாவன,

அரிசி என்பதை,

1. தண்டுலம் (Rice Without Husk)
2. தானினிமணி (Any Husked grain)
3. மூங்கிலரிசி (Small Beeds of the Bamboo etc)

என மூவகையாகும் மேலும் இப்பேரகராதி அரிசி என்றும், சோறு என்றும் பிண்டச் சோறு என்றும் அடிசில் என்றும் கூறியவை எல்லாம் அரிசி உணவுகளைக் குறித்த சொற்களாகும் என்பதையும் உணர்த்துகின்றது.

தமிழர் உணவு தன்மையை,

"உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே

உண்டி முதற்றே உணவின் பிண்டம்

உணவு எனப்படுவது நிலத்தொடு நீரே"[15] புறம்.8 (1-3)

என்று புறநானூற்று வரிகள் தெளிவுப்படுத்துகிறது.

### 7.1.2.1.1 சோறு

அரிசியில் நீரைப் பெய்து கழுவி சுடுதண்ணீரில் வேக வைத்தால் அது சோறாகும். சோற்றுணவை சங்க தமிழர்கள் விரும்பினர். "சமைத்தல் என்ற சொல்லுக்குப் பக்குவப்படுத்துதல் என்பது பொருள். அடுப்பில் ஏற்றிச் சமைப்பது "சுடுதல்" எனப்படும்"[16] என்கிறார் தொ.பரமசிவன். சங்க கால மக்கள் சுவை மிகுந்த உணவுப் பொருள்களைச் சமைப்பதில் கை தேர்ந்திருந்தனர். சோறு கிடைக்குமிடமெல்லாம் சொர்க்கம் என்று வாழ்ந்திருந்தனர். சோற்றைக் குறிக்கும் பிறப்பெயர்களை செ. நமச்சிவாயம் பட்டியலிடுவதை, இங்கு காணலாம்.

"அரிசில், அயினி, அவிழ், கூழ், சொன்றி, நிமிரல், புழுக்கல், புன்கம், பொம்மல், மிதவை, மூரல், வத்தம் என்பது போன்ற பல சொற்கள் சோற்றைக் குறித்து வருகின்றன"[17] என்று உரைக்கிறார். அதோடு நில்லாமல்,

"உயிர் வாழ்வதற்குத் தேவையான ஆற்றல் உணவிலிருந்து பெறப்படுகிறது"[18] என்ற செ.தேவதாசு, அவர்களின் கருத்தையும் தம் நூலில் எடுத்துரைக்கிறார். வாய்வழியாக உட்கொள்ளப்பட்டு உயிர் வாழ்வதற்கும் உடல் நலத்திற்கும் தீங்கு விளைவிக்காத இன்றியமையாத பொருளாக உணவு அமைகின்றது என்பதை செ. நமச்சிவாயம் கருத்து வழியே எடுத்துரைக்கிறார்.

### 7.1.2.1.2 தொன்ம உத்தியில் சோறு

சங்க இலக்கியத்தில் தொன்ம கூறுகள் விரவி காணப்படுகின்றன. அங்கு ஒரு பண்பாட்டு பதிவுகள் படிந்துள்ளதை உணரலாம். அதனை சாமி சிதம்பரணார் தம் நூலில் எடுத்து வரைத்து உள்ளார். அவை "விருந்தோம்பலில் தமிழர்கள் தலை சிறந்தவர்கள். ஏழை மக்களும் தம்மிடம் வந்த விருந்தினர்க்குத் தாம் உண்ணும் உணவை தந்து உபசரிப்பார்கள்"[19] என்று சாமி. சிதம்பரனார் குறிப்பிடுவதனை அறியலாம். மகாபாரதம் என்பது பழமையான இதிகாசங்களில் ஒன்று. வீர கூறுகளை அடிப்படையாக்கி படைத்த இக்கதையில் கௌரவர், பாண்டவர் என்னும் இரு பிரிவினர்களுக்கு இடையே போர் நடைபெறும். இதில் கௌரவர் பிரிவினருக்கு உதியஞ்சேரலாதன் சோறு விளம்பினான்" இப்பாடல் முரஞ்சியூர் முடிநாகராயர் என்னும் புலவர், பாடியதாகும். அப்பாடல் பின்வருமாறு,

"அலங்கு உளைப் புரவி ஐவரொடு சினைஇ
நிலம் தலைக் கொண்ட பொலம் பூந் தும்பை
ஈர் ஐம்பதின்மரும் பொருது, களத்து ஒழிய
பெருஞ்சாற்று மிகு பதம் வரையாது கொடுத்தோய்"[20] புறம்-பா.2 (13-16)

என்னும் பாடல்வழி அறியலாம். இச்சோறு கொடுத்தலால் இம்மன்னனுக்கு "சேரமான் பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதன்" என்னும் பெயரை அடைந்தான் என்பது

வரலாறு. அரிசி விளையும் நிலங்களை வேந்தன் போர் செய்யும் பொருட்டு விளைநிலங்களை அழிக்கும் நிலையை புறப்பாடல்கள் சித்தரித்துக் காட்டுகின்றன. இதனை,

"சிறு கண் யானை செவ்விதின் ஏவி,

பாசவல் படப்பை ஆர் எயில் பல தந்து

அவ் எயில் கொண்ட செய்வுறு நன்கலம்"[21] புறம்-6 (13-15)

என்னும் பாடல் அடிகளால் காரிக்கிழார் என்னும் புலவர் உரைக்கிறார். மற்றொரு புறம்பாடல் இதனை போலவே பதிவுச் செய்துள்ளதை,

"வினை மாட்சிய விரை புரவியொடு

மழை உருவின தோல் பரப்பி

முனை முருங்கத் தலைச் சென்று அவர்

விளை வயல் கவர் பூட்டி

மனை மரம் விறகு ஆக"[22] புறம்-16 (1-5)

என்னும் பாடல் அடிகளில் வயல்களின் விளைப் பொருட்களைப் பகைவர் படைகள் கொள்ளைச் செய்வதையே மரபாகக் கொண்டனர் என்பதை அறியலாம். மன்னனின் வெற்றியைப் புகழும் புலவர், எதிரி நாட்டு மன்னனின் வெற்றியைப் புகழும் புலவர், எதிரி நாட்டு விளைநிலங்கள் சிதைவுற்றதை விளக்குகிறார். இதனை,

"மா ஆடிய புலன் நாஞ்சில் ஆட

கடாஅம் சென்னிய கடுங்கண் யானை

இனம் பரந்த புரம் வளம் பரப்பு அறியா

நின்படைஞர் சேர்ந்த மன்றம் கழுதை போகி

நீ உடன்றோர் மன் எயில் கோட்டி வையா"[23] பதி-25 (1-5)

என்னும் பதிற்றுப்பத்துப் பாடல் மூலம் அறியலாம்.

தொன்ம உத்தியில் அமைந்த மேற்கூறிய பாடல்களை எல்லாம் உற்றுநோக்குகையில் தங்கள் நாட்டு விவசாயம் சிறக்கவும், பகைவர் நாட்டு விவசாயம் மட்டுமன்றி அவர்களின் நிலங்கள் அழிக்கப்படுவதும் ஒரு மரபாக இருந்ததை புலப்படுகிறது.

### 7.1.2.1.3 சோற்றுணவு

உலகில் முதன் முதலில் உணவை நாகரிகமாகச் சமைத்து உண்டவன் தமிழனே "முதன் முதலில் குழம்பு காய்ச்சல் பெற்றது தமிழகத்திலேயே"[24] என்று கூறுகிறார் பாவாணர் தயாரிப்பு இலக்கிய வழக்கில் 'குய்' எனப்படும்.

தமிழர் தங்கள் சூழலுக்கேற்ற உணவுப் பொருட்களை ஏற்ற முறையில் சமைத்து உண்டு வந்தனர். ஒரே வகையான உணவை உட்கொள்ளாமல் புதிய வகைகளைக் கண்டு உண்டனர்.

மன்னனும், மக்களும் தனது நாட்டை நாடிவரும் விருந்தினர்க்கு உறவினர்கள் போல் மரியாதையும் கொடுத்தும் அவர்களுக்கு தேவையான உணவு, உடை சிறந்த பொருள்திரளைப் பலருக்கும் கொடுத்தும் புகழை விரும்பும் உள்ளத்தினை உடையவர்கள் என்பதனை அறிய முடிகின்றது. "புகழ் வருமாயின் உயிரையும் கொடுப்பதில் வல்லவர் தமிழர் பழிவருமாயின் உலகினைத் தருவதாயினும் மறுத்துரைப்பர் தமிழர் என தமிழர் மாண்பினைச் சங்க இலக்கியம் உரைக்கின்றது"[25] தா.நீலகண்டபிள்ளை குறிப்பிடுகிறார்.

பரிசில் பெறவரும் புலவனுக்கு மன்னன் சோற்றை வழங்கி உண்ணச் செய்தான். வெறும் சோற்றை மட்டும் வழங்காமல் இறைச்சியையும், ஊனையும், துவையலையும் வழங்கி வயிராற உண்ணச் செய்தான் என்பதனை,

"புலவு நாற்றத்த பைந் தடி

பூ நாற்றத்த புகை கொளீஇ ஊன் துவை

கறி சோறு உண்டு விருந்து தொழில் அல்லது

பிறிது தொழில் அறியா ஆகலின்"[26] புறம்.14 (12-15)

என்னும் பாடல் அடிகள் மூலம் சங்க கால புலவர் கபிலர் விளக்குகிறார். ஔவையாரும் புலவர்களுக்குச் செல்லும் இடங்களில் எல்லாம் சோறு கிடைக்கும். என்பார். இதனை,

"எத்திசைச் செல்லினும், அத்திசைச் சோறே"[27] புறம்-206 (13)

என்னும் பாடலடி மூலம் விளக்குகிறார். தலைவன் இருக்கும் இல்லத்தில் தான் விருந்தோம்பல் நடைபெறும். தலைவன் போரில் மாண்டான் என்று இரவலர் அறிந்தால் அவ்விடத்தில் உணவருந்த மாட்டார்கள். கணவன் இறந்தபின் மனைவி அல்லி அரிசியை உணவாக கொள்வர். இதனை,

"கூந்தல் கொய்து குறுந் தொடி நீக்கி

அல்லி உணவின் மனைவியொடு, இனியே

புல்லென்றனையால் - வளம் கெழு திருநகர்"[28] புறம்-250 (4-6)

என்னும் பாடல் அடிகள் மூலம் அறியலாம். மன்னனை இறைவனுக்கு நிகராக சங்க இலக்கியம் வருணிக்கிறது. அம்மன்னனின் அரண்மனையில் மிகுதியான சோற்றுத் திரள்கள் காணும் இதனை புலவர்,

"வரையாப் பெருஞ் சோற்று முரி வாய் முற்றம்

வெற்று யாற்று அம்பியின் எற்று? அற்று ஆக"[29] புறம்-261 (3-4)

என்னும் பாடல் அடிகளால் பதிவு செய்கிறான். புறநானூற்றின் இறுதி பாடலுக்கு முந்திய பாடலில் நெல், அரிசி, சோறு என்ற மூன்று நிலைகளையும் குறிப்பிடுகிறது. சோற்றோடு சேர்த்து உண்ண மாம்பழத்தால் ஆக்கிய புளிக்குழம்பைத் தயார் செய்து உண்டனர் என்பதும் புலப்படுகிறது. இதனை,

"அடுமகள் முகந்த அளவா வெண்ணெல்

தொடிமாண் உலக்கைப் பரூஉக் குற்று அரிசி

காடி வெள் உலைக் கொளீஇ நீழல்

ஓங்கு சினை மாவின் தீம்கனி நறும்புளி"[30] புறம்-399 (1-4)

என்னும் பாடல் அடிகள் மூலம் விளக்குகிறார்.

புலவருக்கு மன்னன் விருந்தளித்ததோடு தானும் அவ்விருந்தில் உண்ட நிகழ்வை,

"ஆர்கலி வானம் தளி சொரிந்தா அங்கு

உறுவர் ஆர ஓம்பாது உண்டு

நகைவர் ஆர நன்கலம் சிதறி

ஆடு சிறை அறுத்த நரம்புசேர் இன் குரல்"[31] பதி.43 (18-21)

என்னும் பாடல் அடிகள் வெளிப்படுத்துகின்றன.

புனலாட்டு விழா என்பது சோலையிடத்து நடைபெறும் நிகழ்வாகும். அங்கு சுற்றத்தினருடன் மன்னனும் விருந்து உண்டான் என்பதை,

"மலிபுனல் நிகழ்தரும் தீம் நீர் விழவின்

பொழில் வதிவேனில் பேரெழில் வாழ்க்கை

மேவரு சுற்றமொடு உண்டு இனிது நுகரும்

தம் புனல் ஆயம் ஆடும்"[32] பதி-48 (14-17)

என்னும் பாடல் மூலம் தெளிவாகிறது.

இதன் வழி அன்று மன்னனின் வீரம், புகழ், கொடை எல்லாமே உணவை ஈட்டுவதிலே இருந்தது. இவ்வுணவை அவர்களின் வாழ்வை நிர்ணயித்தது. ஆதலால்தான் உணவினை நிலத்தோடு ஒன்றுபடுத்தி புறப்பாடல்கள் பேசின.

மேற்கூறிய இப்புறப்பாடல்கள் அனைத்திலும் சோற்றுணவினை எவ்வாறு மன்னன் வீரனோடும், புலவனோடும் சேர்ந்துண்டான் என்பதையும் அவர்களுடைய மனம் மகிழுமாறும் உடல் குளிருமாறும் போதும், போதும் என்கிறளவு உணவினை உட்கொள்ளக் கொடுத்து விருந்து பிசித்தான் என்பது இங்கு எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

புற இலக்கியங்கள் விருந்தோம்பும் நிலையினை மிகச் சிறப்பாகப் பதிவுச் செய்துள்ளது.

"அமிழ்து அட்டு ஆனாக் கமழ்குய் அடிசில்
வருநர்க்கு வரையா வசை இல் வாழ்க்கை
மகளிர் மலைத்தல் அல்லது, மள்ளர்
மலைத்தல் போகிய, சிலைத் தார் மார்ப"[33] புறம்.10 (7-10)

என்னும் பாடல் மூலம் விருந்தோம்பலில் மகளிர்களும் முக்கியமான இடத்தைப் பெற்றிருந்தனர் என்பதையும் புறப்பாடல்கள் விளக்கிச் சென்றன.

### 7.1.2.2 தானிய உணவுகள்

தானியப் பொருட்களை உணவு ஆக்கியதோடு விருந்தோம்பவும் செய்தனர். தானிய உணவுகளில் வரகு, கொள்ளு, அவல், கரும்பு, அவரை, புல்லரிசி, திணை ஆகிய தானியங்களை உண்டனர்.

#### 7.1.2.2.1 வரகரிசி

சங்க கால மக்கள் வரகை அரிசி வடிவமாக்கி சோறு சமைத்து உண்டனர். இவ்வரக்கரிசியும் பலிப்பொருட்களில் ஒன்றாக இருந்தது

"புறவுக் கரு அன்ன புன்புல வரகின்
பால் பெய் புன்கம் தேனொடு மயக்கி
குறு முயற் கொழுஞ் சூடு கிழித்த ஒக்கலொடு
இரத்தி நீடிய அகன் தலை மன்றத்து
கரப்பு இல் உள்ளமொடு வேண்டுமொழி பயிற்றி
அமலைக் கொழுஞ் சோறு ஆர்ந்த பாணர்க்கு
அகலாச் செல்வம் முழுவதும் செய்தோம்
எம்கோன் வளவன் வாழ்க"[34] புறம்.34 (9-15)

என்னும் பாடல் அடிகளால் தெரியலாம்.

இடைமகள் ஒருத்தி வரகை இரண்டாகப் பிளந்து அதனைச் சோறாக்கி அதனோடு புளித்த கூழும், அவரைக் காய்களும் சேர்த்து உண்ட நிகழ்வினை,

"கவைக் கதிர் வரகின் அவைப்புறு வாக்கல்
தாது எரு மறுகின் போதொடு பொதுளிய
வேளை வெண்பூ வெண் தயிர்க் கொளீஇ
ஆய்மகள் அட்ட அம்புளி மிதவை
அவரை கொய்யுநர் ஆரமாந்தும்"[35] புறம்.215 (1-5)

என்னும் புறநானூற்று பாடல் அடிகளால் அறியலாம்.

நில வளத்தையும், பொருள் வளத்தையும் புலவர் விளக்க வரும் போது அந்நிலத்தில் விளையும் உணவுப் பொருட்களைக் கூறுவது மரபு. இதனை,

"நின்வழிப் படாஅர் ஆயின் நெல்மிக்கு
அறை உறு கரும்பின் தீஞ்சேற்று யாணர்
வருநர் வரையா வளம் வீங்கிருக்கை
வன்புலம் தழீஇய மென்பால் தோறும்
அரும்பறை வினைஞர் புல்இகல் படுத்துக்
கள்ளுடை நியமது ஒள் விலை கொடுக்கும்
வெள்வரகு உழுத கொள்ளுடைக் கரம்பை
செந்நெல் வல்சி அறியார்"[36] பதி.75 (8-12)

என்னும் பாடல் அடிகளில் உணவுப் பொருட்களையும், அதன் விளை நிலங்களில் விளையும் தன்மைகளையும் புலவர் இயற்கையாகவே சித்தரித்துக் காட்டியுள்ளார். இக்கருத்தை புலவர் மாங்குடிகிழாரும் தம் கவிதையில் பதிவு செய்துள்ளதை,

"இந்நான்கு அல்லது பூவும் இல்லை;
கருங்கால் வரகே, இருங்கதிர்த் தினையே

சிறுகொடிக் கொள்ளே, பொறிகிளர் அவரையொடு

இந்நான்கு அல்லது உணாவும் இல்லை”[37] புறம்.335 (3-6)

இப்பாடல் அடிகள் விளக்குகின்றது. முல்லை நிலத்தில் காணும் நிலங்களில் நெல் விளைவதில்லை. அங்கு வரகும் திணையும், விளைப் பொருளாகின்றன என்பதனை,

“புன்புலச் சீறூர், நெல் விளையாதே,

வரகும் தினையும் உள்ளவை எல்லாம்

இரவல் மாக்களுக்கு ஈயத் தொலைந்தன”[38] புறம்.328 (2-4)

இப்பாடல் அடிகள் கோடிட்டு காட்டுகின்றன.

### 7.1.2.2.2 பழங்களும் காய்களும்

சங்க இலக்கியத்தில் பழங்களையும், காய்களையும் மக்கள் உண்டதை விளக்குகிறது. பழங்களில் பலாப்பழம் மிகுதியாகப் பயின்று வந்துள்ளதை அறியமுடிகிறது. விழாக் காலங்களில் செல்வகுடியில் பிறந்த மகளிர் பலாப்பழத்தை உண்டு மகிழ்வர். இதனை,

“முழவின் அமைந்த பெரும் பழம் மிசைந்து

சாறு யர்ந்தன்ன கார் அணி யாணர்த்

தூம்பு அகம் பழுனிய தீம் பிழி மாந்தி”[39] பதி.81 (19-21)

என்னும் பாடல் அடிகள் சான்றாகின்றன. இப்பலாப்பழம் இங்கு மலையின் வளத்தைக் குறிக்க பயன்பட்டுள்ளதை அறியமுடிகிறது. பழங்களையும், கிழங்குகளையும் விலங்குகள் மட்டுமின்றி மனிதர்களும் உண்டனர். இதனை,

“புள்ளுறு மிஞிறும் மாச் சினை ஆர்ப்பப்

பழனுங் கிழங்கும் மிசையறவு அறியாது

பல்லான் நல்நிரை புல்லருந்து உகளப்

பயங்கடை அறியா வளங்கெழு சிறப்பின்”[40] பதி.89 (3-6)

என்னும் பாடல் அடிகள் புலப்படுத்துகின்றன. பறம்பு நாட்டின் சிறப்பைக் குறிப்பிடும் போது பலாப்பழத்தின் சாறு தேனாக ஒழுகும். அதனை காற்று எடுத்துச் சென்று அம்மலை எங்கும் வீசும். இதனை,

"பலாஅம் பழுத்த பசும்புண் அரியல்

வாடை தூக்கும் நாடுகெழு பெருவிறல்

ஓவத்தன்ன வினை புனை நல்லில்"[41] பதி.61 (1-3)

என்னும் பாடல் அடிகளால் அறியலாம்.

### 7.1.2.3 எட்டுத்தொகைப் புறநூல்களில் அசைவ உணவுகள்

எட்டுத் தொகை நூல்களில் புறநூல்களான புறநானூற்றிலும், பதிற்றுப்பத்திலும் காண கிடக்கின்ற அசைவ உணவுகளை ஆராய்வதாக இப்பகுதி விளங்குகிறது. இங்கு விலங்குகளை விலங்குகள் உண்ணல் என்ற நிலை காணக்கிடக்கிறது. இதில் மீனை பிற நீர் உயிரினங்கள் உண்ணும் முறையும், பருந்துகள் பிணம் தின்னும் முறையும் குறிப்பிடத்தக்கன. இவ்வாறு மனிதனும் பிற உயிர்களிடம் இருந்து மாமிச உணவை உண்ணக் கற்றுக் கொண்டான். அதன் விளைவே வேட்டையாடுதல் தொழிலாக மாறியது. இங்கு அவ்வுயிரினங்கள் குறித்தும், அவ்வுயிரினங்களை சமைத்து பிறர்க்கு விருந்தோம்புதலும் குறித்த செய்திகள் இப்பகுதியில் அமைகின்றது.

#### 7.1.2.3.1 மீனை உண்ணும் நீர் உயிரிகள்

மருத நில நீர் வருணனை போல புறத்திணைப் பாடல்களிலும் மீன்களை நாரை, குருகு, கொக்கு, நீர் நாய் போன்ற உயிரினங்கள் உண்பதற்காக குறிப்புகள் காணக்கிடக்கின்றன. இவ்வுயிரினங்களை மனிதனும் வண்ணக் கற்றுக் கொண்டான்.

#### 7.1.2.3.1.1 மீனை உண்ணும் நாரை

நாரை என்னும் பறவையின் இரை என்பது மீன். இது சங்க அகப்பாடல்களில் பயின்று வந்துள்ளனவாகும். இங்கு கடல் வருணனைக்குப் பயன்படுவதை,

"துளங்கு நீர் வியலகம் கலங்கக் கால் பொரா
விளங்கிரும் புணரி உருமென முழங்கும்
கடலே சேர் கானல் குடபுலம் முன்னிக்
கூவல் துழந்த தடந்தாள் நாரை
குவியினர் ஞாழல் மாச்சினைச் சேக்கும்"[42] பதி.51 (1-5)

என்னும் பாடல் அடிகளால் புலவர் வெளிப்படுத்துகிறார். இப்பாடல் அடிகளில் மீனை நாரை என்னும் பறவை உண்ட செய்தி வெளிப்படுகிறது. புறநானூற்றுப் பாடலும் இக்காட்சியைப் பதிவு செய்ததை,

".............. பெருங்கழி நுழைமீன் அருந்தும்
துதைந்த தூனிஅம் புதாஅம் சேக்கும்
ததைந்த புனல் நின் செழுநகர் வரைப்பின்"[43] புறம்.391 (15-17)

என்னும் பாடல் அடிகள் சான்று பகர்கின்றன. இப்பாடலில் நாரையின் பெயர் புதாஅ என்பதாகும். பதிற்றுப்பத்து பாடல் ஒன்றில் நாரையின் செயல்பாடு முக்கிய இடத்தைப் பெறுகிறது. அவல் இடிக்கும் மங்கையருக்கு பயந்து நாரை வயலில் ஒளியும். அப்போது அங்கு கிடைக்கும் மீன்களைத் தின்னும் இதனை,

"அவல் எறி உலக்கை வாழைச் சேர்த்தி
வளைக்கை மகளிர் வள்ளை கொய்யும்
முடந்தை நெல்லின் விளைவயல் பரந்த
தடந்தாள் நாரை இரிய அயினரக்
கொழுமீன் ஆர்கைய மரந்தொறும் குழாஅலின்"[44] பதி.29 (1-5)

என்னும் பாடல் அடிகளால் அறியலாம்.

### 7.1.2.3.1.2 மீனை உண்ணும் குருகுகள்

குருகு என்பது பறவையினங்களுள் ஒன்றாகும். நெய்தல் நிலம் சார்ந்து வரும் இப்பறவையைப் பதிற்றுப்பத்தின் மூன்றாம்பத்தின் இறுதிபாடல் குறிப்பிடுகிறது. புன்னை மரத்தின் கிளைகளில் தங்கும் இப்பறவையின் உணவு மீன். இதனை,

"இணர்ததை ஞாழல் கரைகெழு பெருந்துறை
மணிக்கலத்தன்ன மாயிதழ் நெய்தல்
பாசடைப் பனிக்கழி துழைஇப் புன்னை
வாலிணர்ப் படுசினைக் குருகு இறை கொள்ளும்
அல்குறு கானல் ஓங்குமணல் அடைகரை"[45] பதி.30 (10-12)

என்னும் பாடல் அடிகள் புலப்படுத்துகின்றன.

### 7.1.2.3.1.3 மீனை உண்ணும் கொக்கு

இங்கு கொக்கு உவமைப் பொருளில் பயின்று வந்துள்ளது. மீனை உண்ணும் என்ற அடைமொழியுடன் வருணிக்கப்பட்டிருக்கும் கொக்கின் கால் வெண்மையாக இருக்கும். இவ்வெண்மை நரைத்த கூந்தலுக்குப் புலவர் ஒப்புமை கூறுவதை,

"மீன் உண் கொக்கின் தூவி அன்ன
வால் நரைக் கூந்தல் முதியோள் சிறுவன்
களிறு எறிந்து பட்டனன் என்னும் உவகை"[46] புறம்.277 (1-3)

என்னும் பாடல் அடிகளால் உணராலம்.

### 7.1.2.3.1.4 மீனை உண்ணும் நீர் நாய்

வாளை மீன்களை நீர் நாய் உண்ணும் சூழலை புறநானூற்றின் ஒரு பாடலில் புலவர் பதிவு செய்துள்ளார். இதனை,

“ஒண் செங்குரலித் தண் கயம் கலங்கி

வாளை நீர் நாய் நாள் இரை பெறூஉப்

பௌவ உறை அளவா...”[47] புறம்.283 (1-3)

### 7.1.2.3.2. மக்களின் அசைவ உணவுகள்

உடும்பின் இறைச்சியைச் சங்கத் தமிழர்கள் உணவாகப் பெற்றிருந்தனர். உடும்பின் கொழுப்பை தயிர் சோற்றுடன் கலந்து விருந்தினர் அனைவருக்கும் கொடுத்து விருந்தோம்பியதை,

“படப்பைக் கொண்ட குறுந்தாள் உடும்பின்

விழுக்கு நிணம் பெய்த தயிர்க்கண் விதவை

யாணர் நல்லவை பாணரொடு, ஒராங்கு

வருவிருந்து அயரும் விருப்பினள்”[48] புறம்.148 (3-6)

என்னும் பாடல் அடிகள் விருந்து உண்ட மகிழ்வைப் புலப்படுத்துகிறது. நெடுநாள் பசியால் வாடிய சுற்றத்தாருக்கு இறைச்சி, ஆட்டு இறைச்சி, வெண்ணெல்லின் வெண்மையான சோறு ஆகியவற்றை உபசரித்து அவர்களின் தொல் பசியை போக்கிய விடயத்தை,

“தொல்பசி உழந்த பழங்கண் வீழ

எஃகு போழ்ந்து அறுத்து வால்நிணக் கொழுங்குறை

மையூன் பெய்த வெண்ணெல் வெண்சோறு”[49] பதி.12 (15-12)

என்னும் பாடல் அடிகள் நயமாக வெளிப்படுத்துகின்றன. ஆட்டு இறைச்சியில் செம்மறியாட்டு இறைச்சி முக்கியமான இடத்தைப் பிடித்தது. பெரும்பாலும் பல சூழல்களில் இறைச்சி உணவு என்பது விழாக்கள், பண்டிகைகள் போன்ற குறிப்பிட்ட நாட்களில் விருந்தினருக்கு விருந்து வைத்து உண்பர். புறநானூறின் ஒருபாடல் எதிரி நாட்டில் விழா இல்லாமலே இறைச்சி உணவுகளை சுற்றத்தாருடன் உண்டு மகிழ்ந்திருந்ததை,

"விழவின்று ஆயினும் படு பதம் பிழையாது,

மை ஊன் மொசித்த ஒக்கலொடு துறை நீர்க்

கைமான் கொள்ளுமோ என"[50] புறம்.96 (6-8)

என்னும் பாடல் அடிகள் வெளிப்படுத்துகின்றன. கரிய ஆட்டுக் கிடாயை வீழ்த்தி அதனைச் சுட்டு உண்டனர் என்பதை,

"மைவிடை இரும் போத்துச் செந்தீச் சேர்த்தி

காயம் கனிந்த கண்அகன் கொழுங்குறை"[51] புறம்.364 (4-5)

என்னும் பாடல் அடிகள் சான்று பகர்கின்றன. மேலும் ஆட்டுக் கிடாயை வெட்டித் துண்டுகளாக்கி அத்துண்டுகளை சூட்டுகன் கோலிற் கோத்து சுட்டு, அதனை வறியவருக்கும் சுற்றத்தாருக்கும் கொடுத்து உண்டதை,

"மடைவேண்டுநர்க்கு இடை அருகாது

அவிழ் வேண்டுநர்க்கு இடை அருளி

விடைவீழ்த்துச் சூடுகிழிப்ப"[52] புறம்.366 (17-19)

என்னும் பாடல் ஆடிகள் சான்று பகர்கின்றன.

சேரனின் இயல்புகளை உரைக்கும் கவிதையில் பதிற்றுப்பத்தின் ஒரு பாடல் அரண்மனை இயல்பை எடுத்துரைக்கிறது. அங்கு நிகழ்த்தும் உணவு செய்முறைகளைப் பற்றி நயமாக விளக்குகிறது. சோறு எடுத்து சேமகிழங்கின் இலை போலுள்ள இலையின் மீது வைத்து அதன் மீது வேகவைத்து இறைச்சி துண்டுகளைச் சேர்த்து உண்பர். இதனை,

"உண்மரும் தின்மரும் வரை கோளறியாது

குரைத்தொடி மழுகிய உலக்கை வயின்தோறு

அடைச்சேம் பெழுந்த ஆடுறும் மடாவின்

எஃகுறச் சிவந்த ஊனத்தி யாவரும்

கண்டுமதி மருளும் வாடாச் சொன்றி"[53] பதி.24 (19-23)

என்னும் பாடல் அடிகள் இறைச்சி உணவின் சிறப்பை வெளிக்காட்டுகிறது. ஆண் பன்றியின் கொழுப்புகளை நெய்யில் இட்டு உருக்கி பொரித்து வறியவருக்கும் கொடுத்து உண்டதை,

“குறுந்தாள் ஏற்றைக் கொழுங்கண் அவ்வினர்
நறுநெய் உருக்கி நாட்சோறு ஈயா
வல்லன் எந்தை, பசிதீர்த்தல் என”[54] புறம்.379 (8-10)

என்னும் பாடல் அடிகளால் விருந்தோம்பும் பண்பு சிறப்பித்து கூறப்படுகிறது.

இத்தலைப்பின் வழி சங்க இலக்கிய மக்கள் வாழ்வியலில் அசைவ உணவுகள் இடம்பெற்ற மாற்றை அறிய முடிகின்றது. இம்மகள் தானும் உண்டு பிறர்க்கு உண்பித்த விருந்தோம்பல் மரபு மிகவும் சிறப்புடையதாகும். அவ்விருந்தோம்பலில் இடம்பெற்ற மாமிச உணவுகளாக மீன், குட்டிமானின் இறைச்சி, உடும்பு, ஆட்டு இறைச்சி, கரிய ஆட்டுக்கிடா, ஆண் பன்றி இறைச்சி மற்றும் அதன் கொழுப்பு உணவுகளும் இடம் பெற்றுளமை இங்கு எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

### 7.1.2.4 எட்டுத் தொகை புற இலக்கியங்களில் நீா் உணவு

நீரின்றி அமையாது உலகு என்று வள்ளுவா் கூறியுள்ளாா். நிலத்தில் உயிர்கள் வாழ்வதற்கு நீா் அத்தியாவசியம் ஆகின்றது. புற இலக்கியங்களில் நீா் உணவுகள் புலவா்களால் பதிவு செய்யப்பட்டுள்ளன. நீா் உணவு என்னும் இப்பகுதியை இரண்டு தலைப்புகளில் காணலாம்.

1. நீா் நிலைகள்
2. நீா் உணவுகள்

என்பனவாகும்.

#### 7.1.2.4.1 நீா் நிலைகள்

புறப்பாடல்களில் நீா் நிலைகள் குறிக்கப் பெறுவது நாட்டின் நீா் வளத்தை விளக்குவதாகும். நீா் நிலைகள் மூலம் இயற்கை காட்சிகளைப் படம் பிடிக்கும்

புலவர்கள், அதன் மூலம் நாட்டு வளத்தையும் வெளிப்படுத்துகின்றனர். நீர் நிலைகள் என்பது நீர்கள் நிறைந்து கிடக்கும் இடங்கள். புற இலக்கியங்களில் நீர் நிலைகளாக மழை, அருவி, கடல், அகழி ஆகியவைக் குறிக்கப் பெறுகின்றன.

### 7.1.2.4.1.1 கடலும் மழையும்

விவசாயிகளின் உயிர் என புகழப் பெறுவது மழை. மழை பெய்யாமல் இருந்தால் வறட்சி ஏற்படும். எனவே நாட்டுப்புற மக்கள் மழை ஏற்படுவதற்கு பரிகார பூஜைகள் செய்வர். குறிப்பாக கடல் சார்ந்த மக்கள் கடலைத் தாய்த்தெய்வமாக மதித்து வழிபாடு செய்வர். சங்க காலத்தில் தோன்றிய இலக்கியங்களில் கடலை முந்நீர் என்று அழைத்தனர். பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி கடல் தெய்வத்திற்கு விழா எடுத்தான் என்பதை,

“எம்கோ, வாழிய! குடுமி - தம் கோச்
செந் நீர்ப் பசும் பொன் வயிரியர்க்கு ஈத்த,
முந்நீர் விழவின், நெடியோன்
நல் நீர்ப் பஃறுளி மணலினும் பலவே”[55] புறம்.9 (8-11)

என்னும் புறநானூற்றுப் பாடல்வழி அறியலாம். கடல் வழிபாட்டை புனல் விளையாட்டு என்றும் அழைப்பர். இதனை புனலாட்டு விழா என்று இலக்கியங்களால் குறிக்கப் பெறுகின்றன.

“பல்பொறி மார்மநின் பெயர் வாழியரோ
நின்மலைப் பிறந்து நின்கடல் மண்டும்
மலிபுனல் நிகழ்தரும் தீம்நீர் விழவின்
பொழில் வதி வேனில் பேரெழில் வாழ்க்கை”[56] பதி.48 (12-15)

என்னும் பதிற்றுப் பத்தின் பாடல் அடிகள் சான்று பகர்கின்றன.

### 7.1.2.4.1.2 மழையும் மழையின்மையும்

ஒரே பாடலில் மழையின் தன்மைக் குறித்தும், மழையின்மையால் ஏற்படும் வறட்சிகளைக் குறித்தும் சங்கப் புலவர்கள் பாடி காட்சிப்படுத்தியுள்ளனர். மழை

இல்லாவிடின் காடுகள், தாவரங்கள் கெட்டுவிடும். மழைப் பெய்யும் போது விவசாயிகள் மகிழ்ந்து வேலை செய்வர். இதனை மன்னனின் நாட்டுவளத்தைக் குறிக்கப் புலவர் பாடுவதை,

“இரும்பணை திரங்கப் பெரும்பெயல் ஒளிப்பக்
குன்று வறம் கூரச் சுடர்சினந் திகழ
அருவியற்ற பெருவறற் காலையும்
அருஞ்செலற் பேராற்றிருங் கரை உடைத்து
கடியேர் பூட்டுநல் கடுக்கை மலைய
வரைவில் அதிர்சிலை முழங்கிப் பெயல் சிறந்து
ஆர்கலி வானம் தளிசொரிந்தா அங்க
உறுவர் ஆர ஒம்பாது உண்டு”[57] பதி.43 (12-19)

என்னும் பாடல் அடிகள் அரண் செய்கின்றன.

### 7.1.2.4.1.3 அருவி

நீர் நிலைகளில் முக்கியமான ஒன்று அருவிகள் ஆகும். இலக்கியங்களும் அருவிகளை குறித்து வளமான பதிவை கூறியுள்ளன. புற இலக்கியங்களும் அருவியின் அழகை நாட்டு மன்னனின் புகழொடு சித்தரிப்பதைக் காணலாம். புறநானூறு “வெள்ளருவி” என்று வருணிப்பதை,

“கறங்கு வெள் அருவி ஏற்றலின், நிறம் பெயர்ந்து
தில்லை அன்ன புல்லென் சடையோடு
அள் இலைத் தாளி கொய்யுமோனே”[58] புறம்.252 (11-13)

என்னும் பாடல் அடியில் அருவியை வெள்ளருவி என்று வருணிப்பதும் அந்நீரில் சங்க கால மக்கள் நீராடினர் என்பதையும் புலவர் பதிவு செய்துள்ள திறத்தை அறியலாம்.

மலையும், மலைச்சார்ந்த சூழலில் அருவிகள் தோன்றும். சேர மன்னன் இமயமலையில் தன் கொடி அடையாளத்தை பதிப்பித்து நிலைநாட்டினார். இதனைக் கூறவந்த புலவர் இமயமலையில் விழுகின்ற அருவியைக் குறித்து கூறுவதை,

"இன்னிசை முரசின் உதியஞ் சேரலாதற்கு

வெளியன் வேண்மான் நல்லினி ஈன்ற மகன்

அமைவரல் அருவி இமையம் விற்பொறித்து

இமிழ்கடல் வேலித் தமிழகம் விளங்க"[59] பதி.ப-11 (2-5)

என்னும் இரண்டாம்பத்தின் பதிகப்பாடலில் பதிவுச் செய்துள்ளார். புறநானூற்றின் ஒரு பாடலில் புலவர் கபிலர் மழை இல்லாவிடினும் அருவியில் நீர் வந்துக் கொண்டே இருக்கும் என அருவி நீரைப் புகழ்வதை,

"வண்டு படு புது மலர்த் தண் சிதர் கலாவப்

பெய்யினும் பெய்யாது ஆயினும், அருவி

கொள் உழு வியன் புலத்துழை கால் ஆக"[60] புறம்.105 (3-5)

என்னும் பாடல் அடிகளால் அறியலாம். நாட்டு வளத்தின் அழகியலாக அருவி வருணிக்கப்படுவதை,

"வலம்படு முரசின் இலங்குவன விழூஉம்

அவ்வெள்ளருவி உவ் வரை யாதுவே"[61] பதி.78 (1-2)

என்னும் பாடல் அடியின் மூலம் நீர் வளத்தின் அழகியல் அருவி என்பது குறிப்பிடத்தக்கது.

### 7.1.2.4.1.4 ஆறு

நீர் நிலைகளில் முக்கியமான களம் ஆறுகள். இன்றைய நகரங்களின் குடிநீர் என்பது ஆற்றுநீரின் சுத்த நீர். ஆறுகள் குறித்து புற இலக்கியங்கள் பதிவு செய்துள்ளவற்றைக் காண்பதே இப்பகுதியின் சிறப்பாகும். ஆற்று நீர் கலப்பது கடலில், இச்சூழலை இடைக்காடனார் என்னும் புலவர் அரசனுக்கும்- புலவருக்கும் உவமையாகக் கூறுகிறார். மன்னனைக் கடலாகவும், மன்னனைக் காண வரும் புலவர்களை ஆறுகளாகவும் உவமிப்பதை,

“மலையின் இழிந்த, மாக்கடல் நோக்கி

நிலவரை இழிதரும் பல் யாறு போல

புலவர் எல்லாம் நின் நோக்கினரே”[62] புறம்.42 (19-21)

என்னும் பாடலடிகளில் நீர் வளத்தையும், மன்னனின் கொடை வளத்தையும் புலவர் கூறியிருப்பது நயமிக்கதாக அமைந்துள்ள கவிதைக்கு பொருள் அழகைத் தருவதைக் காணலாம்.

ஆற்றில் பொருட்கள் வந்தால் அவை சேரும் இடம்தான் கடல் ஆகும். அவ்வாற்றில் வந்த பொருட்களாகப் புலவர் குறிப்பிடுவது வாசனை மிகுந்த மரக்கட்டைகள். அவை சந்தன மரக்கட்டைகளும், அகிற் மரக்கட்டைகளும் ஆற்றில் வரும் ஆற்றுநீர் தெளிந்து காணப்படும் இங்கு புலவர் கூறும் ஆற்று நீரின் நிறம் என்பது செந்நிறம் ஆகும். நுரை என்பது வெண்மை நிறத்தைக் கொண்டதாகும் என அழகுற புனைவதை,

“சென்மோ பாடினி நன்கலம் பெறுகுவை

சந்தம் பூழிலொடு பொங்கு நுரை சுமந்து

தென்கடன் முன்னிய வெண்டலைச் செம் புனல்”[63] பதி.87 (1-3)

என்னும் பாடல் அடிகள் புலப்படுத்துகின்றன. புலவருக்கு ஆறு உவமையாக அமைந்ததைப் போல் புறம்பாடல் ஒன்றில் பரிசுக்கு உவமையாக உரைப்பதை,

"புலி பாா்த்து ஒற்றிய களிற்று இரை பிழைப்பின்

எலி பாா்த்து ஒற்றாதாகும்; மலி திரைக்

கடல் மண்டு புனலின் இழுமெனச் சென்று

நனியுடைப் பரிசில் தருகம் எழுமதி, நெஞ்சமே!"[64] புறம்.237 (16-19)

என்னும் பாடல் அடிகளால் சங்கப் புலவா் நயமுற புனைந்துள்ளதை அறியலாம்.

### 7.1.2.4.1.5 அகழி

புற இலக்கியங்கள் பதிவு செய்த நீா்நிலைகளில் அகழி வருணனை முக்கியமான பதிவாகும். போா் நிகழும் போது தான் அகழியின் முக்கியத்துவத்தைப் புலவா் தம் கவிதையில் பதிவு செய்துள்ளாா். அகழி குறித்து பதிற்றுப்பத்து பதிவு செய்துள்ளது. நீரை சேமிக்க செய்யும் நீா்நிலையே அகழி ஆகும்.

"துப்புத் துறைபோகிய கொற்ற வேந்தே

புனல் பொரு கிடங்கின் வரைபோல் இஞ்சி

அணங்குடைத் தடக் கையா் தோட்டி செப்பிப்

பணிந்து திறை தருப நின் பகைவராயின்"[65] பதி.62 (9-12)

என்னும் பாடல் அடிகளில் "புனல் பொருகிடங்கு" என்னும் தொடா் அகழி, என்னும் பொருளை உணா்த்தும் வகையில் அமைந்துள்ளது. அகழிக்கு அடுத்து நெடிந்த மதில் இருக்கும். அவ்வகழியில் வாளை, சிறிய ஆரல், கெடிற்று மீன்கள் ஆகிய மீன் வகைகள் நீரினுள் காணப்பட்டன என்பதை,

"நீா்த் தாழ்ந்த குறுங் காஞ்சிப்

பூக் கதூஉம் இன வாளை

நுண் ஆரல், பரு வரால்

குரூஉக் கெடிற்ற, குண்டு அகழி

வான் உட்கும் வடிநீள் மதில்"[66] புறம்.18 (7-11)

என்னும் பாடல் வழி சங்கத்தமிழ் புலவர் புலப்படுத்துகிறார். மற்றொரு புறப் பாடலில் அகழி நீரில் இருக்கும் வாளை மீனை நீர்நாய் உணவாக கொள்ளும் பொருட்டு அந்நீரானது கலங்கி நிற்கும் இதனை,

"ஓண் செங்குரலித் தண் கயம் கலங்கி,
வாளை நீர் நாய் நாள் இரை பெறூஉப்
பௌவ உறை அளவா"[67] புறம்.283 (1-3)

என்னும் பாடலடிகளால் அறியலாம்.

### 7.1.2.4.2 நீர் உணவுகள்

நீர் நிலையில் கிடைக்கும் உணவுகளே நீர் உணவுகள். நீர் நிலைகளில் காணக்கிடக்கும் நீர்களை உணவாக உண்ணும் நிலையைச் சங்க கவிதைகள் நீர்உண்ணும் துறை, "நீர்த்துறை" என்று கூறுகின்றன. ஊற்று நீர் என்னும் நீரையும் உண்டனர்.

"பொன்செய் கணிச்சித் திண்பிணி உடைத்துச்
சிரறு சில ஊறிய நீர்வாய்ப் பத்தல்
கயிறு குறுமுகவை மூயின மொய்க்கும்
ஆ கெழு கொங்கர் நாடு அகப்படுத்த"[68] பதி.22 (12-15)

என்னும் பாடல் அடிகளில் இரண்டாம் அடியில் ஊற்றுநீர் குறித்து பதிவுச் செய்துள்ளமைக் கவனிக்கத்தக்கது.

கோவூர்கிழார் என்னும் சங்க புலவர் கிள்ளிவளவனைப் புகழும் போது அவன்தம் உணவு வளத்தைக்குறித்து குறிப்பிடுகிறார். அப்போது தண்ணீரையும், உணவையும், மருந்து என்று புலப்படுத்துவதை,

"இருமருந்து விளைக்கும் நல்நாட்டுப் பொருநன்,
கிள்ளி வளவன் நல் இசை உள்ளி
நாற்ற நாட்டத்து அறு காற் பறவை"[69] புறம்.70 (9-11)

என்னும் பாடல் அடிகளில் முதல் அடியில் காணலாம். “இருமருந்து” என்னும் சொல் மேற்கூறிய பொருளை உணர்த்துகிறது. நீர் உணவை அடிப்படையாக்கி ஒரு வரலாற்றினை புறப் பாடலில் பதிவு செய்துள்ளது. குடவாயில் என்னும் இடத்தில் கோச்செங்காணானால் என்ற மன்னனிடம் சிறைப்பட்ட கணைக்கால் இரும்பொறை நீர் வேட்கையாய் சிறைக் காவலனை வேண்டினான். தாமதமாக நீர் கொண்டு வந்த காரணத்தினால் நீர் உண்ண மறுத்து உயிர் நீத்தான் என்பதை,

“தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத்து இரீஇய
கேள் அல் கேளிர் வேளாண் சிறுபதம்,
மதுகை இன்றி, வயிற்றுத் தீத்தணிய
தாம் இரந்து உண்ணும் அளவை
ஈன்மரோ இவ் உலகத்தானே?”[70] புறம்.74 (3-7)

என்னும் பாடல் அடிகள் தெளிவுறுத்துகின்றன.

### 7.1.2.4.2.1 தேன்

நறவு என்னும் சொல் தேன் என்னும் சொல்லைக் குறிக்கும் சொல்லாக சங்க இலக்கியங்களில் பரவி வந்துள்ளன. இனிமையான தேனை “அஞ்சேறு” என்று புலவர்கள் தங்கள் பாடல்களில் குறிப்பிட்டுள்ளனர். மேலும் “தீஞ்சுவை” என்றும் சொல் மிக இனிமையான தேன் என்று பொருளில் பயின்றுவந்துள்ளது. இதனை,

“மிஞிறு புறம்மூசவும் தீஞ் சுவை திரியாது
அரம் போழகல்லா மரம்படு தீம்கனி
அம் சேறமைந்த முண்டை விளை பழம்
ஆறுசெல் மாக்கட்டு ஒய்தகை தடுக்கும்
மறாஅ விளையுள் அறாஅ யாணர்”[71] பதி.60 (4-8)

என்னும் பாடல் அடிகளால் தெளிவுறுத்துகின்றன. தேன் நீர் உணவாக மட்டுமின்றி மருந்தாகவும், இனிப்பின் சுவையாகவும் பயன்படுத்தினர்.

“புறவுக் கரு அன்ன புன் புல வரகின்

பால்பெய் புன்கம் தேனொடு மயக்கி”[72] புறம்.34 (9-10)

என்னும் பாடலால் அறியலாம். தேன் உணவை வரும் விருந்தினர்க்கு உணவாக பயன்படுத்தினர் என்பதை,

“பெருவிறல் யாணர்த்து ஆகி, அரிநர்

கீழ் மடைக் கொண்ட வாளையும் உழவர்

படை மிளிர்ந்திட்ட யாமையும், அறைநர்

கரும்பில் கொண்ட தேனும், பெருந்துறை

நீர் தரு மகளிர் குற்ற குவளையும்”[73] புறம்.42 (12-16)

என்னும் பாடல் அடிகளில் விருந்து உணவாக தேன் பயன்பட்டதை அறியலாம்.

### 7.1.2.4.2.2 கள்

கள் உணவை தாமும் உண்டு, சுற்றத்தார்களுக்குக் கொடுத்தும், வரும் விருந்தினரும் கூடி உண்டு இன்பமாக இருந்ததைப் பல சங்கப் பாடல்கள் தெரியப்படுத்துகின்றன. கள் மன்னர்கள் வசம் இல்லாமலும் பொது மக்களிடமும் காணப்பட்டது. கள் ஓர் உணவாகவே பயன்படுத்தப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கதாகும். கள் உருவாக்கும் போது அதன் கூட சுடுச்சோறும் சேர்த்து கொள்வர். இதனை,

“மையூன் பெய்த வெண்ணல் வெண்சோறு

நனையமை கள்ளின் தேறலொடு மாந்தி

நீர்ப்படு பருந்தின் இருஞ்சிறகு அன்ன”[74] பதி. ப.12 (17-19)

என்னும் பாடல் அடிகள் புலப்படுத்துகின்றன. கடின தொழில் செய்யும் மீனவ மக்கள் கள்ளை உண்டு குரவைக் கூத்தினை நிகழ்த்துவர். இதனை,

“தெண் கடல் திரைமிசைப் பாயுந்து:

திண் திமில் வன் பரதவர்

வெப்பு உடைய மட்டு உண்டு

தண் குரவைச் சீர் தூங்குந்து”[75] புறம்.24 (3-6)

என்னும் பாடல் அடிகள் மூலம் சங்கப்புலவர் மாங்குடி கிழார் குறிப்பிட்டுள்ளார். கள் உண்ணும் போது பசித்தன்மையைக் குறைக்கும். மன்னனைக் காண வரும் விருந்தினர்க்கு முதலில் கள் உணவு வழங்கப்படும். அதன் பிறகே அசைவ உணவு பரிமாறப்படும். இதனை,

“உண்மின் கள்ளே அடுமின்சோறே

எறிக திற்றி ஏற்றுமின் புழுக்கே

வருநர்க்கு வரையாது பொலங்கலம் தெளிர்ப்ப”[76] பதி.ப.78 (1-3)

என்னும் பாடல் அடிகள் மேற்கூறியக் கருத்தைத் திறம்பட வெளிப்படுத்துகின்றன. மன்னனின் வீரத்தை வெளிப்படுத்துவதற்கும் கள் துணைபுரிந்துள்ளது என்பதை ஒரு புறம்பாட்டால் அறியலாம். ஔவையார் பாடிய 97 ஆம் பாடலில் அதியமானின் வீரத்தை எதிரிநாட்டு மன்னனிடம் கூறுவது போல் வடிவமைக்கப்பட்ட பாடலில் கூறுகிறார். அதியமானின் படைக்கருவிகளில் ஒன்றான வேல்கள் கள்மணத்தோடு இருக்கும். காரணம் எதிரி நாட்டின் வளமான கள்ளை உண்ட படைவீரர்களைத் தாக்குவதால் என்ற கருத்தை பாடலில் வைக்கும் போது கள் உணவு என்பதைத் தாண்டி நாட்டின் வளத்திற்கு எடுத்துக் காட்டாகவும் அமைந்துள்ளதை அறியலாம்.

“வேலே, குறும்பு அடைந்த அரண் கடந்து, அவர்

நறுங் கள்ளின் நாடு நைத்தலின்

சுரை தழீஇய இருங் காழொடு”[77] புறம்.29 (2-4)

என்னும் பாடல் அடிகள் அதியமானின் போர்த் திறத்தையும் கள்ளின் சுவையையும் வெளிப்படுத்துகிறது. “கள்” மிகுந்த மணம்மிக்க உணவாக சங்க இலக்கியங்களில் வருணிக்கப்பட்டுள்ளன. கள் உணவை மருத நில மக்கள் பண்டமாற்று முறையில் வாங்கியுள்ளதை,

“வன்புலம் தழிஇய மென்பால் தோறும்

அரும்பறை வினைஞர் புல் இகல் படுத்து

கள்ளுடை நியமது ஒள்விலை கொடுக்கும்

வெள்வரகு உழுத கொள்ளுடைக் கரம்பை”[78] பதி.75 (8-11)

என்னும் பாடல் அடிகளில் மருத நிலம் வளமாக அடையாளப்படுத்தப்படுகிறது. விளைப் பொருட்களைக் கள்ளிற்காக பண்ட மாற்றம் பெறுவதைப் புலவர் தம் பாடலில் அழகுற குறித்துள்ளார்.

### 7.1.2.4.2.3 கரும்புச்சாறு

கரும்பை விளைவித்தலும் அதன் சாரை குடிப்பதும் நீர் உணவுகளில் முக்கிய இடத்தைப் பெற்றது. முல்லை நில விவசாயத்தில் கரும்பு நெற்கதிர்களின் வேலியாகப்பட்டுள்ளதைச் சங்க அகபாடல்கள் தெளிவுறுத்தப்பட்டுள்ளதை முன்னமேயே சுட்டி கூறியுள்ளோம். இங்கு கரும்பின் இனிய சாறை விருந்தினர்க்கும், சுற்றத்தார்க்கும் உபசரித்து மகிழ்ந்தைக் காண்பதே இங்கு முக்கிய நோக்கமாகும்.

கரும்புச்சாறு, நுங்குநீர், இளநீர் இம்மூன்றும் முந்நீர் என்று அழைக்கப்படுகின்றது. மீனவர்களின் வாழ்வியலைக் கவிதை வடிவில் பதிவு செய்து வந்த சங்கப்புலவர் பரதவ மகளிரின் குடிநீர் உணவைக் கூறும் போது இக்கருத்தைக் குறிப்பிடுவதை,

“முண்டகக் கோதை ஒண் தொடி மகளிர்

இரும் பனையின் குரும்பை நீரும்

பூங் கரும்பின் தீம் சாறும்

ஓங்கு மணற் குவவுத் தாழைத்

தீம் நீரோடு உடன் விராஅய்

முந்நீர் உண்டு முந்நீர்ப் பாயும்”[79] புறம்.24 (11-16)

என்னும் பாடல் அடிகள் தெள்ளத்தெளிவாக படம்பிடித்துக் காட்டுகின்றன.

நெல்லிற்கு வேலியாய் கரும்பை நட்டனர். அது வளர்ந்து நெல் வளர்ச்சியைக் கெடுப்பது போல் இருந்தது. அதனை வெட்டி வரும் விருந்தினருக்குச் சாறாக்கி கொடுத்தனர். அங்குள்ள உழவர் பெருமக்கள் இதனை,

"வேந்தரும் வேளிரும் பிறரும் கீழ்ப்பணிந்து

நின்வழிப் படாஅராயின் நெல்மிக்கு

அறை உறு கரும்பின் தீஞ்சோற்றியானர்

வருநர் வரையா வளம் வீங்கிருக்கை"[80] பதி.75 (4-7)

என்னும் பாடல் அடிகள் கரும்பின் சாற்றை விருந்தினர்க்குக் கொடுத்த நிகழ்வைக் குறிப்பிடுகிறது. இப்பாடலின் தலைப்பே "தீம்சேற்று யாணர்" என்பதன் மூலம் கரும்பின் சுவை உயர்த்திக் காட்டப்படுகிறது.

### 7.1.2.4.2.4 இளநீர்

உழுகுடியுள்ளோர் கள்ளைக் குடித்த பின்பும் அடங்காது தென்னையின் இளநீரைக் குடித்தனர்.

"வெங் கள் தொலைச்சியும் அமையார், தெங்கின்

இளநீர் உதிர்க்கும் வளம் மிகு நல்நாடு

பெற்றனர் உவக்கும் நின் படை கொள் மாக்கள்"[81] புறம்.29 (15-17)

என்னும் பாடல் அடிகளில் இளநீர் குடித்த நிகழ்வைப் பதிவு செய்துள்ளதை அறியலாம்.

### 7.1.2.4.2.5 தயிர்

நீர் உணவுகளில் முக்கிய இடம் பிடித்த உணவுகளில் இன்றியமையாத இடம் தயிர் என்ற உணவிற்கு உண்டு. தயிர் உணவை குடிப்பதற்கும், கூழ் வைப்பதற்கும் பயன்படுத்தப்பட்டதை,

“மான் தசை சொரிந்த வட்டியும், ஆய்மகள்

தயிர் கொடு வந்த தசும்பும் நிறைய

ஏரின் வாழ்நர் பேர் இல் அரிவையர்”[82] புறம்.33 (2-4)

என்னும் பாடல் அடிகளாலும்,

“கவைக் கதிர் வரகின் அவைப்புறு வாக்கல்

தாது எரு மறுகின் போதொடு பொதுளிய

வேளை வெண்பூ வெண் தயிர்க் கொளீஇ

ஆய்மகள் அட்ட அம்புளி மிதவை”[83] புறம்.215 (1-4)

என்னும் பாடல் அடிகளும் தயிர் உணவைக் குறித்து வெளிப்படுத்துகின்றன. நீர் உணவு குறித்தான கவிதைகள் பதிற்றுப்பத்தை விட புறநானூற்றில் அதிகமாகக் குறிப்பிட்டுள்ளதை அறியலாம்.

மேற்கூறிய தலைப்பின் வழி நீர்நிலையின் வளம், நீர்நிலையின் கண் கிடைக்கும் உணவுகள், கரும்புச்சாறு, தேன், களவு, கள், இளநீர், தயிர் போன்ற நீராகார உணவுகளின் செழிப்பை உணவு முடிகின்றது. இதனை எட்டுத்தொகைப் புறப்பாடல் வழி எடுத்துக்காட்டப் பெற்றுள்ளது.

### 7.1.3 ஆற்றுப்படை நூற்களில் விருந்தோம்பல்

பத்துப்பாட்டு என்னும் இலக்கிய பிரிவில் செம்பாதி நூல்கள். ஆறு என்றால் வழி என்று பொருள்படும். ஆற்றுப்படுத்துதல் என்றால் வழிப்படுத்துதல் என்று பொருள்படும். விருந்தோம்பல் பண்பு மேலோங்கி வளர இவ்வாற்றுப்படை நூற்கள் தூண்டுகோலாக அமைகின்றன என்பதில் எவ்வித ஐயமுமில்லை.

நீண்ட அடிகளைக் கொண்ட இவ்வாற்றுப்படை நூல்கள் ஐவகை நிலங்களையும், அம்மக்களின் விருந்தோம்பல்களையும் நயமுற தெரியப்படுத்துகின்றன. விருந்தோம்பல் என்பது உணவு கொடுக்கும் முறையில் அல்ல, அடைக்கலப்படுத்துவதற்குரிய முறையையும் சேர்வது தான் என்னும் கருத்தை ஆற்றுப்படை நூல்கள் மூலம் அறியலாம். ஏற்றத்தாழ்வு இல்லாமல்

உணவு உபசரிக்கும் முறை தமிழர் பண்பாட்டின் உச்சம் என்று கருதலாம். ஆற்றுப்படை நூற்களில் தான் விருந்தோம்பும் பண்பு விளக்கமாகப் பதிவு செய்யப்பட்டுள்ளதைக் காணலாம். மன்னன் வறுமையுற்றக் கலைஞர்களைப் பொறுமையுடன் வரவேற்று இனிமையுடன் விருந்தூட்டி அவர்களுடைய கலை நயம் கண்டு பரிசளித்துப் பாதத்தால் எழடி நடந்து வழியனுப்பும் காட்சி மற்றும் அவனுடைய இரக்கச் சிந்தனை, கலையுணர்வு, பண்பு நலம் ஆகியவற்றை நயமாக விளக்கத்தரமாக அமைத்து ஆற்றுப்படையின் நோக்கத்தையும், பயனையும் நன்கு அளந்து காட்டுகிறது”[84] என்று ஏ.என்.பெருமாள் குறிப்பிடுவதினை அறியலாம். ஆற்றுப்படை நூல்களில் காணும் விருந்தோம்பல் பண்புகளை மூன்று தலைப்புகளில் காணலாம்.

1. அரிசி மற்றும் தானிய உணவுகள்
2. இறைச்சி உணவுகள்
3. நீர் உணவுகள்

என்னும் மூன்று தலைப்புகளில் விளக்கப்படுகிறது.

### 7.1.3.1 அரிசி மற்றும் தானிய உணவுகள்

ஆற்றுப்படை நூல்கள் உணவின் தேவையை எடுத்து கூறுவதோடு அவ்வுணவை பிறருக்கும், சுற்றத்தாருக்கும் கொடுக்கும் பண்பினையும் வலியுறுத்துகிறது. அரிசி மற்றும் தானிய உணவுகளை ஐந்து ஆற்றுப்படை நூல்களும் எடுத்துக் கூறுகின்றன.

#### 7.1.3.1.1 அரிசி உணவுகள்

அரிசியைக் குறித்து வரும் பாடல்களில் உணவின் தன்மையைக் கூறினாலும் ஆழ்ந்த பொருளாக அரசின் சிறப்பையும், நாட்டின் வளத்தை வெளிப்படுத்துவதாகவும் அமைகிறது. அரிசி, நெல் ஆகிய உணவு பொருட்கள்

ஒன்றாகவே பயின்று வந்துள்ளதை அறிய முடிகிறது. அரிசி உணவாக இங்கு குறிப்பிடுவது சோறு உணவே ஆகும்.

### 7.1.3.1.1.1 சோறு

விழாக் காலங்களிலும் விருந்தினர்க்கும் சோற்றை உண்பித்து மகிழ்ச்சியாகயிருந்தனர் சங்கத்தமிழர்கள். பலி உணவிலும் சோறு முக்கியமான இடத்தைப் பெறுகிறது. இதனை திருமுருகாற்றுப்படை சிறப்பாக விளக்குவதை,

"சிறுதினை மலரொடு விரைஇ, மறிஅறுத்து
வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ
ஊர் ஊர் கொண்ட சீர்கெழு விழவினும்"[85] திருமுரு. (217-220)

என்னும் பாடல் அடிகள் தெளிவுப்படுத்துகின்றன.

செல்வங்கள் கொழித்து விளங்குகின்ற ஊர்களில் விழா நடக்கும். அத்தகு நாட்களில் விழா முடிந்த மறுநாளில் சோறு உணவு திருவிழா நடைபெறும். இதனை,

"அறாஅ யாணர் அகன் தலைப் பேர்ஊர்
சாறு கழி வழிநாள் சோறு நசை உளாது
வேறுபுலம் முன்னிய விரகுஅறி பொருந"[86] பொரு. (1-3)

என்னும் பாடல் அடிகளில் பொருநன் மட்டும் அச்சோறு பந்தியில் இடம்பெறாமல் இருப்பது இப்பாடலில் தலைவனான கரிகாலனின் புகழை எடுத்துரைப்பதற்கே என்று கருதலாம்.

சிறுபாணாற்றுப் படையில் "ஆமூர்" என்னும் ஊரின் இயல்புகளைக் கூறும் போது சோறு உணவைக் குறித்து கூறுகிறார். அதில் சோறு உணவுடன் நண்டு கறியும் கிடைக்கும் என்று விளக்குவதை,

"இருங்காழ் உலக்கை இரும்பு முகம் தேய்த்த

அவைப்பு மாண்அரிசி அமலை வெண்சோறு

கவைத்தாள் அலவன் கலவையொடு பெறுகுவீர்"[87] சிறுபாண். (192-195)

என்னும் பாடல் அடிகள் புலப்படுத்துகின்றன.

விளைந்த புல்லரிசியை உரலில் இட்டு உலக்கையால் குற்றி வெள்ளை நிறத்தையுடைய அரிசியை எயினர் பெண்கள் எடுப்பர். இப்பணியானது இரவு, பகல் பாராமல் நடைபெற்று கொண்டிருந்தது என்பதை,

"நுண்புல் அடக்கிய வெண்பல் எயிற்றியர்

பார்வை யாத்த பறைதாள் விளவின்

நீழல் முன்றில் நிலஉரல் பெய்து

குறுங்காழ் உலக்கை ஓச்சி நெடுங்கிணற்று"[88] பெரும். (94-97)

என்ற பாடல் அடிகளில் "நீழல் முன்றில்" என்னும் தொடரும் "நில உரல்" என்னும் தொடரும் இரவு பொழுதை உணர்த்த வந்ததாகும்.

மூங்கில் அரிசி என்பது அரிசி வகைகள் ஒன்றாகும். குறவர் மகள் சுட்டுப்படியான பெண் மூங்கில் அரிசியை சோறாக்கும் பணி குறித்து மலைப்படுகடாம் சித்தரிக்கிறது. உலை வைக்கும் தண்ணீரில் புளியைக் கரைத்து விடுவர். அதன்பின் மூங்கில் அரிசியை அப்புளி கரைசலில் இடுவர். சோறான பின் விருந்தினர்க்கு மகிழ்ச்சியோடு கொடுப்பர் இதனை,

"இன்புளிக் கலந்து மா மோர் ஆக

கழை வளர் நெல்லின் அரி உலை ஊழ்த்து

வழை அமை சாரல் கமழத் துழைஇ

நறுமலர் அணிந்த நாறுஇரு மூச்சிக்

குறமகள் ஆக்கிய வால் அவிழ் வல்சீ

அகம் மலி உவகை ஆர்வமொடு அளைஇ"[89] மலை. (179-184)

இப்பாடல் அடிகள் விருந்தோம்பும் பண்பிற்கு மிகச் சிறந்த சான்றாகும்.

### 7.1.3.1.1.2 தினை

தினை என்பது அரிசி வகைகளில் ஒன்றாகவே சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. தற்போது திணை என்பது கடுகு வடிவில் காணப்படும். பச்சை நிறத்தைக் கொண்டதாக இருக்கிறது. பொருநர் ஆற்றுப்படையில் யாழின் இயல்பு கூறப்படுகிறது. அதில் நரம்பு வருணனைக்கு திணை அரிசி உவமையாகக் கூறப்படுகிறது. திணை அரிசியில் ஒருவகை குத்தல் அரிசி. குத்தல் அரிசி என்பது நயமான அரிசியாகும். இதனை,

"மாயோள் முன்கை ஆய் தொடி கடுக்கும்
கண்கூடு இருக்கைத் திண்பிணித் திவவின்
ஆய்தினை யரிசி அவையல் அன்ன
வேய்வை போகிய விரல் உளர் நரம்பின்"[90] பொருநர். (14-17)

என்னும் பாடல் அடிகள் மேற்கூறியக் கருத்திற்கு அரண்செய்வதாக அமைகிறது. "மலைபடுகடாம்" என்ற இலக்கியத்தில் தினை, அவரை, வரகு என்னும் மூன்று தானியங்கள் குறித்தான குறிப்பு வருகிறது.

"கொய் பதம் உற்றன! குலவுக் குரல் ஏனல்
விளைதயிர்ப் பிதிர்வின் வீஉக்கு இருவி தொறும்
குளிர்புரை கொடுங்காய் கொண்டன அவரை;
மேதி அன்ன கல் பிறங்கு இயலின்
வாதி கை அன்ன கவைக்கதிர் இறைச்சி
இரும்பு கவர்வுற்றன பெரும்புன வரகே"[91] மலை. (107-113)

என்னும் பாடல் அடிகளால் அறியலாம்.

7.1.3.1.1.3 நெல் வகைகள்

நெல்லையும் நெல்லிருந்து வெளிவரும் அரிசியையும் ஆற்றுப்படை இலக்கியங்கள் வெகுவாகப் பதிவு செய்துள்ளன. ஐவனநெல், வெண்ணெல், நெல் ஆகிய பெயர்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. நெல்கள் பண்டமாற்று முறையில் உணவுகளை வாங்குவதற்கு பயன்பட்டதை அகநூல்கள் தெரியப்படுத்துகின்றன. ஆய்ச்சியர் மக்கள் மோர் விற்று நெல் வாங்கினர். அதனை உணவாக்கி சுற்றத்தாருக்கு விருந்து வைத்தனர். இதனை,

"சிறுகுழை துயல்வரும் காதில் பணைத்தோள்

குறுநெறிக் கொண்ட கூந்தல் ஆய்மகள்

அளைவிலை உணவின் கிளை உடன் அருத்தி"[92] பெரும். (161-163)

என்னும் பாடலடிகள் மூலம் புலவர் விளக்குகிறார். திணை நில மக்களின் வாழ்வியலை அழுத்தமாக உணர்த்தியது இப்பாடல். நாட்டுவளத்தைக் கூற வந்த புலவருக்கு அந்நாட்டிலுள்ள வயல் வளத்தைக் கண்டார். அங்கு வயல்களில் விளையும் நெல் வகைகளைக் கூறத் தொடங்குகிறார்.

"பால் வார்பு கெழீஇ பல் கவர் வளிபோழ்பு

வாலிதின் விளைந்தன ஐவன வெண்ணெல்"[93] மலை. (114-115)

என்னும் பாடல் அடிகளில் நெல்கள் நன்கு விளைந்து காற்றில் அசைந்தாடுவதை மிக நயமாக வெளிப்படுத்துகிறது. பெரும்பாணாற்றுப்படையில் உழவர் இல்லம் குறித்து விளக்கப்படுகிறது. உழவர் இல்லத்தில் நெற் கூடுகள் காணப்படுகின்றன.

"பகட்டு ஆஈன்ற கொடுநடைக்குழுவின்

கவைத் தாம்பு தொடுத்த காழ் ஊன்று அல்குல்

ஏணி எய்தா நீள் நெடுமார்பின்

முகடு துமித்து அடுக்கிய பழம் பல் உணவின்

குமரி மூத்த கூடு ஓங்கு நல்இல்"[94] பெரும். (243-247)

என்னும் பாடல் அடிகளில் பழமையான நெற்கள் என்பது உபரி நெற்கள் என்று கூறலாம்.

### 7.1.3.1.1.4 பழங்கள்

கனிகள் குறித்து ஆற்றுப்படை நூற்களில் குறிப்பு வருகின்றன. குறிப்பாக, பலாப்பழம் குறித்து அக இலக்கியங்களும் பதிவு செய்துள்ளன. ஆற்றுப்படை இலக்கியங்களும் பதிவு செய்துள்ளன. பலாப்பழத்தை வெட்டும் போது கிடைக்கும் கனி பலாச் சுளை என்று அழைக்கப்படுகிறது. பலா பல வகைகளைக் கொண்டதாகும். வருக்க பலா, கூழப்பலா என பலவகையுண்டு. திருமுருகாற்றுப்படை "ஆசினி பலா" என்ற வகையை எடுத்துச் சொல்கிறது. ஆசினி பலா வெடித்து அருவியில் விழுகிறது. இதனால் அருவி நீர் இனிப்பாகிறது. இதனை,

"தண் கமழ் அலர் இறால் சிதைய நன்பல
ஆசினி முதுசுளை கலாவ மீமிசை
நாக நறுமலர் உதிர யூகமொடு
மாமுக முசுக்கலை பனிப்பபூ நுதல்"[95] திருமுரு. (300-303)

என்னும் பாடல் அடிகளால் நக்கீரர் விளக்குவதை காணலாம்.

பழம் மிகுதியாய் காய்த்தலால் மக்கள் பயன்படுத்தியதைத் தவிர மீதியுள்ள பழங்கள் மரத்திலேயே கனிந்து இருக்கும் அக்கனிந்தப் பழத்தை தெருவில் நடந்து செல்வோரும், பிறரும் பறித்து உண்பர். மிஞ்சிய பழங்களை பறவைகள் உண்ணும். பலா மரத்தில் காய்க்கும் பழங்களில் அடியில் காய்ந்து பழுத்து நிற்கும் பழமே இனிப்பு சுவையுடையது. மயில்கள் எட்டும் அளவிற்கே பலாப்பழம் பழுத்து நிற்கிறது என்று பழத்தின் சுவையைக் குறிப்பிடுகிறார் புலவர்.

"முடக்காஞ்சிச் செம் மருதின்
மடக்கண்ண மயில் ஆலப்

பைம்பாகற் பழம் துணரிய

செஞ்சுளைய கனி, மாந்தி”[96] பொருநர். (189-192)

என்னும் பாடல் அடிகள் மேற்கூறிய கருத்தை அரண் செய்வதாக அமைகின்றன. பழம் பெரிதாகக் காட்சியளித்தாலும் சுளை என்பது சிறியதாக இருக்கும். இது பலாப் பழத்தின் இயல்பு ஆகும். இங்கு நாட்டுவளத்தைக் கூற புலவர்க்குப் பயன்பட்டதை,

“தடவுநிலைப் பலவின் முழுமுதற் கொண்ட

சிறுசுளைப் பெரும்பழம் கடுப்ப, மிரியல்”[97] பெரும். (67-68)

என்னும் பாடல் அடிகள் புலப்படுத்துகின்றன. காட்டில் விளைகின்ற பழங்களைப் பறவைகள் உடனே திங்காது. தங்கள் கூட்டத்தினருக்கும் கொடுத்து விருந்தோம்பும் பண்பை உடையன என்று மலைபடுகடாம் என்னும் நூலில் கூறப்பட்டுள்ளது இங்கு குறிப்பிடத்தக்கதாகும். அதில் காணும் கோட்டையை கன்றுகள் ஒற்றுமையாக உண்ணும். இதனை,

“காந்தட் துடுப்பின் கமழ் மடல் ஓச்சி

வண் கோட் பலவின் சுளை விளை தீம் பழம்

உண்டு படு மிச்சில் காழ்பயன் கொண்மார்

கன்று அடாஅ உறுக்கும மகாஅர் ஓதை”[98] மலை. (337-340)

என்னும் பாடலடியால் அறியலாம்.

### 7.1.3.1.1.5 கிழங்குகள்

மலைப்படுகடாம் என்னும் ஆற்றுப்படை நூலில் மலைவளம் வருணிக்கப்படுகிறது. மலையில் விளையும் விளைப்பொருட்களை அங்குள்ள மக்களுக்கு உணவுப்பொருட்கள் ஆகின்றன. அப்போது கிழங்குகள் குறித்து புலவர் குறிப்பிடுகிறார்.

“மாறு கொள ஒழுகின ஊறு நீர் உயவை

நூறொடு குழீஇயின கூவை சேறு சிறந்து”[99] மலை. (136-137)

என்னும் பாடலடிகளில் கூவை என்பது கிழங்கு வகைகள் ஒன்றாகும். அதனைக் குறித்து இங்கு பயின்று வந்துள்ளது. மலையில் காணும் மக்கள் சிறுகுடிகளில் வசித்த வந்தனர். அங்கு “வராய்க் கிழங்கு” என்னும் வகையான கிழங்கு இருந்தது என்பதை,

“மணஇல் கமழும் மாமலைச் சாரல்

தேனினர் கிழங்கினர் ஊன்ஆர் வட்டிப்”[100] மலை. (151-152)

என்னும் பாடல் அடிகளால் புலவர் புலப்படுத்துகிறார். மேலும் மலையில் வாழும் யானைகள் நிலத்தின் அடியில் தோன்றும் கிழங்குகளைத் தின்பதால் அதன் வாய் மண்தின்ற நிறத்தில் அதன் கொம்பும் காணப்படும். இதனை,

“நிரை செலல் மெல்அடி நெறி மாறு படுகுவிர்

வரைசேர் வகுந்தின் கானத்துப் படினே

கழுதில் சேணான் ஏவொடு போகி

இழுதின் அன்ன வால்நிணம் செருக்கி

நிறப் புண் கூர்ந்த நிலம் தின் மருப்பின்”[101] மலை. (241-245)

என்னும் பாடல் அடிகளில் யானையை நோக்கி பரண் மீது அமர்ந்து அம்பு விடுவர். அது கொள்ளாது யானை கழுத்து காயத்தோடு கிழங்கைத் தோண்டி உண்ணும் என்னும் கருத்தைக் குறித்தும் வெளிப்படுகிறது.

### 7.1.3.2 இறைச்சி உணவுகள்

ஆற்றுப்படை நூல்களில் இறைச்சி உணவுகள் அதிகமாகப் பயின்று வந்துள்ளன. மலை மக்கள் மலைப்பாதைகளில் காணப்படும் விலங்குகளை வேட்டையாடி அதனை சமைத்து தாமும் உண்டு சுற்றத்தாருக்கும் கொடுக்கும் விருந்தோம்பும் பண்பு உடையவராய் காணப்பட்டனர்.

### 7.1.3.2.1 ஆட்டு இறைச்சி

இறைச்சி உணவுகள் வருமிடத்தில் விருந்தோம்பும் பண்பும் கூடவே வருகிறது. கரிகால் வளவனின் அரண்மனையில் சென்ற பொருநருக்கு அங்குள்ள பணிக்காரர்கள் செம்பறியாட்டின் வெந்த தொடைக்கறியை பலமுறை உண்டு மகிழுமாறு உபசரித்து இன்முகம் செய்வதை,

"கதுமெனக் கரைந்து 'வம்' எனக் கூஉய்
அதன் முறை கழிப்பிய பின்றைப் பதன்அறிந்து
துராஅய் துற்றிய துருவைஅம் புழுக்கின்
பராஅரை வேவை 'பருகு' எனத் தண்டிக்
காழின் சுட்ட கோழ்ஊன் கொழுங் குறை
ஊழின்ஊழின் வாய்வெய்து ஒற்றி
அவை அவை முனிவகும் எனினே சுவைய"[102] பொருநர். (101-107)

என்னும் நீண்ட பாடலடிகளால் புலவர் விளக்கம் கூறுகிறார். ஆற்றுப்படை இலக்கியங்கள் மக்கள் உணவை மட்டும் குறிக்கவில்லை. விலங்குகளின் உணவையும் குறித்துள்ளனர். இதனை,

"கொழுமீன் குறைய ஒதுங்கி வள்இதழ்க்
கழுநீர் மேய்ந்த கயவாய் எருமை
பைங்கறி நிவந்த பலவின் நீழல்"[103] சிறுபாண். (41-43)

என்னும் அடிகளால் அறியலாம்.

### 7.1.3.2.2 மானின் இறைச்சி

எயின் குலத்து மங்கையரின் இல்லத்தில் வெயிலோடு வருபவர்களுக்கு வயிறு நிரம்ப சோறும், சூடான மான் இறைச்சியும் கிடைக்கும்.

எயிற்பட்டினத்துப் பரதவப் பெண்கள் சூடான குழல்மீன் கறியையும், எயினர் குலப்பெண்கள் இனிய புளிக்கறி சேர்த்துக் குட்டியுடன் பிறந்த காலுடைய நண்டுக்

கறிகளையும், விருந்தோம்பலுக்குப் பயன்படுத்துவர் என்று சிறுபாணாற்றுப்படை கூறிகிறது. என்பதை,

"உறு வெயிற்குஉலைஇய உருப்புஅவிர் குரம்பை

எயிற்றியர் அட்ட இன்புளி வெஞ்சோறு

தேமா மேனிச் சில்வளை ஆயமொடு

ஆமான் சூட்டின் அமைவரப் பெறுகுவிர்"[104] சிறுபாண். (174-177)

என்னும் பாடல் அடிகளால் நன்குணரலாம்.

பாணர்களுக்கு சென்றமிடமெல்லாம் சிறப்பு என்று ஆற்றுப்படை நூல்கள் உணர்த்துகின்றன. கருவாட்டு கறியை சோறினுள் இட்டு பாணர்களுக்கு விருந்தோம்புவர் என்பதை,

"வல்ஊற்று உவரி தோண்டித் தொல்லை

முரவுவாய்க் குழிசி முரிஅடுப்பு ஏற்றி

வாராது அட்ட வாடுஊன் புழுக்கல்"[105] பெரும். (98-100)

என்னும் பாடலடியால் சங்கப்புலவர் வெளிப்படுத்துகிறார்.

இவற்றிலிருந்து மகளிர் விருந்தினைரைப் பேணுவதில் பேரார்வம் கொண்டவர் என்பதை உண்டிக் 'கழுகு விருந்தோடுண்ணல்' என்ற நன்மொழிக்கு இணங்க விருந்தினைரைக் கணவரோடிருந்து, எதிர் கொண்டழைத்து இன்முகம் காட்டி உண்ணச் செய்து, தானும் உண்டு மகிழ்தலில் தனியார்வம் கொண்டனர் என்பதையும் அறிய முடிகிறது.

ஓய் மானாட்டு நெய்தல் நில பெண்கள் அளித்த கள்ளையுமும், உயர்ந்த சூழல் மீனின் ஆட்டிறைச்சியையும் உண்டமை

"நுதிவேல் நோக்கின் நுளைமகள் அரித்த

பழம்படு தேறல் பரதவர் மகுப்பக்

கிளைமாலர்ப் படப்பைக் கிடங்கில் கோமான்

தளை அவில் தெரியல் தடையோற்பாடி

அதற்குழல் பாணி தூங்கி யவரோடு

வறர்குழற்கட்டின் வயின் வயின் பெருகுவ”[106] சிறுபாண். (157-163)

### 7.1.3.2.3 மீன் உணவு

பெரும்பாணாற்றுப் படையில் நெய்தல் நில மக்களின் விருந்தோம்பும் பண்பு கூறப்படுகிறது. அங்கு வரும் விருந்தினருக்கு மீன் சாப்பாடு விளம்பப்படுகிறது. மீனைச் சுட்டு வரும் விருந்தினருக்கு அளித்தனர்.

“கொடுமுடி வலைஞர் குடிவயிற் சேப்பின்

அவையா அரிசி அம்களித் துழவை

மலர்வாய்ப் பிழாவில் புலர ஆற்றி

பாம்புஉறை புற்றின் குரும்பி ஏய்க்கும்

பூம்புற நல் அடை அளைஇ தேம்பட

எல்லையும் இரவும் இருமுறை கழிப்பி

வல்வாய்ச் சாடியின் வழைச்சுஅற விளைந்த

வெந்நீர் அரியல் விரல்அலை நறும் பிழி

தண் மீன் சூட்டொடு தளர்தலும் பெருகுவீர்”[107] பெரும். (274-282)

என்னும் பாடல் அடிகள் தெளிவுப்படுத்தகின்றன.

### 7.1.3.2.4 பன்றி இறைச்சி

சங்க கால மக்கள் பன்றி இறைச்சியை அசைவ உணவு பொருட்களில் ஒன்றாகக் கொண்டனர். தினைப்புனத்தை அழித்துவிடாமல் இருப்பதற்காக பன்றிப்பொறி ஆங்காங்கே வைக்கப்பட்டுள்ளது. மலைபடுகடாம் பா/93-196 அடிகள் வெளிப்படுத்துகின்றன. இப்பன்றிகளை இறைச்சி உணவாக பயன்படுத்தியிருக்கலாம் என்று அறிய முடிகிறது. நன்னனின் மலையைப் புகழ வந்த புலவர் அங்கு

வசிக்கும் குறமகள் சமைத்த உணவுகளைப் பட்டியலிட்டுக் காட்டுகிறாள். அப்போது பன்றிக்கறியைச் சமைத்ததையும் குறிப்பிடுவதை,

"வருவிசை தவிர்த்த கடமான் கொழுங் குறை
முளவுமாத் தொலைச்சிய பைந்நிணப்பிளவை
பிணவுநாய் முடுக்கிய தடியொடு வினஇ"[108] பெரும். (341-345)

என்னும் பாடல் அடிகளில் முளவுமா என்பது எய் பன்றியைக் குறித்தப் பெயராகும். பன்றி வகையில் ஆண் பன்றியை மட்டும் கறி வைத்து சமைத்தனர். பன்றியின் கொழுப்பையும் அதன் தசையையும் விருந்தினர்க்கு அளித்தனர்.

"ஈர்ஞ்சேறு ஆடிய இரும் பல் குட்டிப்
பல்மயிர்ப் பிணவொடு பாயம் போகாது
நெல்மா வல்சி தீற்றிப் பல்நாள்
குழிநிறுத்து ஓம்பிய குறுந்தாள் ஏற்றைக்
கொழுநிணத் தடியொடு கூர்நறார்ப் பெறுகுவிர்"[109] பெரும் (341-345)

என்னும் பாடல் அடிகளில் பன்றி இறைச்சியோடு கள் உணவையும் வழங்குவார்கள் என்பதை அறிய முடிகிறது.

### 7.1.3.2.5 கோழிப்பொறியல்

ஓய்வே தெரியாமல் உழைக்கின்ற உழவர் மக்கள் அங்கு வரும் பாணர்களுக்கு வெண்மையான சோற்றோடு கோழியின் தசையைப் பொறித்துக் கொடுத்ததை,

"தொல்பசி அறியாத் துளங்கா இருக்கைப்
மல்லர் பேர்ஊர் மடியின் மடியா
வினைஞர் தந்த வெண்ணெல் வல்சி
மனைவாழ் அளகின் வாட்டொடும் பெறுகுவீர்"[110] பெரும் (253-256)

என்னும் பாடல் அடியால் புலவர் நயமாகப் புலப்படுத்துகிறார்.

### 7.1.3.3 நீர் உணவுகள்

நீர் உணவுகளாக பழச்சாறு, குடிநீர், தென்னையின் இளநீர், கள் ஆகிய உணவுகளைக் குறிப்பிடுகிறது.

#### 7.1.3.3.1 கள்

ஆடவர் கள் குடித்தாலும் அதனை அளிப்பவர் பெண்டிரே. அந்தி பொழுதில் கள் அருந்துவர். இப்பெண்டிருக்கு "ஏவற் பெண்டிற்" என்று இலக்கியங்கள் கூறப்படுகின்றன.

"மழைஎன மருளும் மகிழ்செய் மாடத்து
இழைஅணி வனப்பின் இன்நகை மகளிர்
போக்குஇல் பொலங்கலம் நிறையப் பல்கால்
வாக்குபு தரத்தர வருத்தம் வீட"[111] பொருநர் (84-87)

என்னும் பாடல் அடிகள் தெளிவுப்படுத்துகின்றன. கள் உணவாக மட்டுமின்றி பிறிதொரு உணவு பொருட்களை வாங்கும் பண்டமாற்று முறையாகவும் திகழ்ந்தது. இதனை,

"கேளா மன்னர் கடிபுலம் புக்கு
நாள்ஆ தந்து நறவுதொடை தொலைச்சி
இல்அடு கள்இன் தோப்பி பருகி"[112] பெரும் (140-142)

என்னும் பாடல் அடிகளில் அக்கால போரியியல் வாழ்வும் வெளிப்படுகிறது. எதிரி நாட்டு பசுவைப் பிடித்துக் கொண்டு கள்ளின் விலைக்கு நிகராக விற்று இல்லம் சென்று கள்ளுண்டனர் என்பதைத் தெளிவாகக் காட்டுகிறது.

கள் தெளிய வைத்து குடிக்கும் முறையும் சங்க கால மக்களிடம் இருந்துள்ளது. கள் தெளிவை காலை பொழுதில் குடித்தனர். "மலைபடுகடாம்" என்ற ஆற்றுப்படையில் மருதநில விருந்தோம்பல் குறித்து வருணிக்கப்படுகிறது.

கள் விற்க வரும் மகளிர் நெல்லை வாங்கிக் கொண்டு அதற்கு இணையாக கள்ளையும், கள்ளின் தெளிவையும் உழவர் மக்களுக்குக் கொடுத்தனர்.

"பகன்றைக் கண்ணிப் பழையர் மகளிர்
ஞெண்டு ஆடு செறுவில் தராய்க்கண் வைத்த
விலங்கல் அன்ன போர்முதல் தொலைகு
வளம் செய்வினைஞர் வல்சி நல்க
துளங்கு தசும்பு வாக்கிய பசும் பொதித் தேறல்
இளங்கதிர் ஞாயிற்றுக் களங்கள் தொறும் பெறுகுவிர்"[113] மலை (459-464)

என்னும் பாடல் அடிகள் மேற்கூறிய கருத்தை பதிவு செய்வதாக அமைந்துள்ளன.

### 7.1.3.3.2 இளநீர், நுங்கு நீர்

தென்னை மரத்தில் இருந்து தயாராகும், நீரை இளநீர் என்றும் பனை மரத்திலிருந்து தயாராகும் நீரை நுங்கு நீர் என்றும் அழைக்கின்றோம். சிறுபாணாற்றுப் படையில் மகளிரின் உடல் அடையாளங்கள் வருணிக்கப்படுகின்றன. மகளிரின் பற்களுக்கு நுங்கு நீரின் தன்மை உவமையாக்குவதை,

"வண்கோட் பெண்ணை வளர்த்த நுங்கின்
இன்சேறு இகுதரும் எயிற்றின் எயிறுஎன
குல்லைஅம் புறவில் குவிமுகை அவிழ்ந்த
முல்லைசான்ற கற்பின் மெல்இயல்"[114] சிறுபாண். (27-30)

என்னும் பாடல் அடிகள் புலப்படுத்துகின்றன. பெரும்பாணாற்றுப்படையில் உழவர்களின் விருந்தோம்பும் நிலை கூறப்படுகிறது. அதில் தென்னையின் இளநீரும், பனையின் நுங்கு நீரும் வருகின்ற பாணர்களுக்கு உபசரிப்பதை விளக்குகிறது. இதனை,

"தண்டலை உழவர் தனிமனைச் சேப்பின்
தாழ்கோட் பலவின் சூழ்சுளைப் பெரும்பழம்

வீழ்இல் தாழைக் குழவித் தீம்நீர்

கவைமுலை இரும்பிடிக் கவுள் மருப்பு ஏய்க்கும்

குலைமுதிர் வாழைக் கூனி வெண்பழம்

திரள்அரைப் பெண்ணை நுங்கொடு பிறவும்”[115] பெரும் (355-360)

என்னும் பாடல் அடிகள் நீர் உணவை மிக தெளிவாகப் படம்பிடித்து காட்டுகின்றன.

### 7.1.3.3.3 பழச்சாறு

பலாப்பழத்தை ஒத்த பெரிய பழமும் மாங்கனியின் சாறும் பாணர்களுக்கு நீர் உணவாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

“கானப் பலவின் முழவுமருள் பெரும் பழம்

இடிக் கலப்பு அன்ன நறுவடி மாவின்

வடிச்சேறு விளைந்த தீம்பழத் தாரம்”[116] மலை (511-513)

என்னும் பாடல் அடிகளில் சோறு என்னும் சொல் பழத்தின் சாறு என்று பொருள்பட வந்தது.

### 7.1.3.3.4 பால், வெண்ணெய், தயிர் மோர்

நீர் உணவுகளில் இன்றியமையாத இடம்பிடித்துள்ள உணவு பொருள் பால் ஆகும். பால், வெண்ணெய், தயிர், மோர், நெய் ஆகியவை உணவு பொருட்களாகப் பயன்படுத்தப்பட்டன.

பால் உணவைக் குறிக்கின்ற போதெல்லாம் ஆயர் மகளிர் குறித்து பதிவுகளும் இடம்பெறும். பால் தயிராகி, தயிர் வெண்ணெய்யாகவும், மோராகவும் மாற்றம் பெறுகிறது. மோரை விற்று நெல் வாங்குகிறாள். நெய்யை விற்று எருமையும், பசுவையும் வாங்குகிறாள். இதனை,

“ஆம்பி வால்முகை அன்ன கூம்பு முகிழ்

உறைஅமை தீம்தயிர் கலக்கி நுரை தெரிந்து

புகர்வாய்க் குழிசி பூஞ்சுமட்டு இரீஇ
நாள்மோர் மாறும் நல்மா மேனிச்
சிறுகுழை துயல்வரும் காதின் பணைத் தோள்
குறுநெறிக் கொண்ட கூந்தல் ஆய்மகள்
அளைவிலை உணவின் கிளைஉடன் அருந்தி
நெய்விலைக் கட்டிப் பசும்பொன் கொள்ளான்
எருமை நல்ஆன் கருநாகு பெறூஉம்"[117] பெரும். (156-165)

என்னும் பாடலடிகளால் நன்கு அறியலாம்.

பால் அதிகமாக பயன்படுத்திய நிலமாக முல்லை நிலத்தைக் கூறலாம். பாலின் உறைவிடம் பசு, எருமை, ஆடு ஆகிய உயிரினங்கள் ஆகும். பசுவின் இனிமையான பாலை இடையர் குலத்தைச் சேர்ந்த மகளிர் கொடுப்பர். இத்தன்மையால் பாணர்கள் விருந்தினர் தன்மையை அடைந்தனர்.

"வேறு புலம் படர்ந்த ஏறுடை இனத்த
வளை ஆன் தீம்பால் மிளைசூழ் கோவலர்
வளையோர் உவப்ப தருவனர் சொரிதலின்
பலம் பெறு நடையொடு பதிவயின் தீர்ந்தறும்
புலம்பு சேண் அகல புதுவிர் ஆகுவீர்"[118] மலை. (408-412)

என்னும் பாடல் அடிகளில் "புதுவிர்" என்ற சொல்லிற்கு விருந்தினர் என்று பொருள்.

### 7.1.3.3.5 தேன்

மலை பகுதிகளை வருணிக்கும் புலவர்கள் தேன் உணவை மிக நயமாகக் குறிப்பிடுவர். பழச்சாறுக்குத் தேன் என்று வருணிப்பர். பெரிய பலாப்பழத்திலிருந்து வரும் நீரானது. தேன் சுவைக்கு ஒப்புமைச் சொல்லப்படுகிறது. இதனை,

"பல திறம் பெயர்பவை கேட்குவிர் மாதோ

கலை தொடு பெரும் பழம் புண் கூர்ந்து ஊறலின்

மலை முழுதும் கமலும் மாதிரம் தோறும்"[119] மலை. (291-293)

என்னும் பாடல் அடிகளில் "கலை" என்பது முசுங்கலை என்னும் குரங்கினத்தைக் குறித்ததாகும்.

### 7.1.3.3.6 நீர் உண்ணும் துறை

குடிப்பதற்கும், சமைப்பதற்கு நீரை ஆற்றிலிருந்து பெற்றனர். அதனை நீர் உண்ணும் துறை என்று சங்ககாலப் புலவர்கள் தம் கவிதையில் குறித்துள்ளனர். சங்க கால தமிழகத்தில் பொய்கை நீர் உண்ணும் துறையாக அறியப்பட்டதை,

"நறுநீரப் பொய்கை அடைகரை நிவந்த

துறுநீர்க் கடம்பின் துணை ஆர் கோதை

ஓவத்து அன்ன உண்துறை மருங்கில்"[120] சிறுபாண். (67-70)

என்னும் பாடல் அடிகள் சான்றாகின்றன.

நீர் உண்ணும் துறையில் புனல் விளைாட்டு, பற்றிய குறிப்புக் கிடையாது அது நீர் உண்பதற்கு மட்டும் பயன்படும் நீர் நிலையாகும்.

"வண்டல் ஆயமொடு உண்துறைத் தலைஇப்

புனல்ஆடு மகளிர் இட்ட பொலங்குழை

இரைதேர் மணிச்சிரல் இரைசெத்து எறிந்தெனப்"[121] பெரும். (311-313)

என்னும் பாடலடிகளால் அறியலாம். நீர் உண்ணும் துறை போல் ஒரு பகுதியாக விளங்குவது சுனை நீர் ஆகும். இதனை,

"துகள் அறத் துணிந்த மணிமருள் தெள்நீர்

குவளை அம் பைஞ்சுனை அசைவுவிடப் பருகி

மிகுத்துப் பதம் கொண்ட பரூ உக்கண் பொதியினீர்"[122] மலை. (250-252)

என்னும் பாடலடிகளில் வழிப்பயணங்களில் போவார், வருவார் அனைவரும் சுனை நீர் பருகினர் என்பது புலப்படுகிறது.

### 7.1.4 பத்துப்பாட்டுப் புறநூலில் உணவுக்குறிப்புகள்

ஆற்றுப்படை புறநூலில் அடங்கும் என்றாலும், பத்துப்பாட்டில் செம்பாதி நூல்கள் ஆற்றுப்படை என்பதால் அவை தனியாக விளக்கப்பட்டது. பத்துப்பாட்டில் புறநூல் (ஆற்றுப்படை நூற்களைத் தவிர்த்து நோக்கினால்) ஒன்று மட்டுமே. அது மதுரைக் காஞ்சி என்ற நூல் மட்டுமே பத்துப்பாட்டு நூல்களில் அடிவகையில் பெரியது. எனவே மதுரைக்காஞ்சி வெளிப்படுத்தும் விருந்தோம்பும் குறிப்புகளைப் பின்வரும் தலைப்புகளில் காணலாம்.

1. அரிசி மற்றும் தானிய உணவுகள்
2. அசைவ உணவுகள்
3. நீர் உணவுகள்

#### 7.1.4.1 அரிசி மற்றும் தானிய உணவுகள்

அரிசி மற்றும் தானிய உணவாக கரி, தினை, சோறு, கிழங்கு, எள், வரகு ஆகிய உணவு பொருட்களைக் குறித்துள்ளது.

##### 7.1.4.1.1 நெற்கதிர் தினை

நெற்கதிர்களையும், தினைகளையும் குறிப்பிடாத சங்க இலக்கியங்களே இல்லை எனலாம். ஆற்று நிலைகளைச் சேர்ந்தாற்போல் வயல்கள் காணப்பட்டன. ஆற்று நீரின் வரத்து அதிகமாகவே நெற்கதிர்கள் வேகமாக வளர்ச்சியுற்றன. காற்றில் நெற்கதிர்கள் ஓசை இனிமையானதாகக் காணப்படுகிறது.

“இரு வானம் பெயல் ஒளிப்பினும்
வரும் வைகல் மீன் பிறழினும்
வெள்ளம் மாறாது விளையுள் பெருக
நெல்லின் ஓதை அரிநர் கம்பலை”[123] மதுரை. (107-110)

என்னும் பாடல் அடிகள் நெல்லின் விளைச்சலை வெளிப்படுத்துகின்றன. நெற்கதிரைப் போல் தினை என்ற உணவு பொருளும் தினை கதிர் என்று பலவிடங்களில் குறிக்கப்பெறுகிறது. குறிஞ்சி நிலத்தின் விளைப் பொருள் பற்றி மதுரைக் காஞ்சியில் விளக்கப் பெறுகிறது. அதில் தினை, ஐவனநெல், கடுகு, இஞ்சி, மஞ்சள் ஆகிய தானிய வகைகளையும் உணவு பொருட்களையும் குறிக்கிறது.

“குறுங்கதிர்த் தோரை நெடுங்கால் ஐயவி
ஐவன வெண்ணெலொடு அரில் கொள்பு நீடி
இஞ்சி, மஞ்சள், பைங்கறி பிறவும்
பல்வேறு தாரமொடு கல்லகத்து ஈண்டி”[124] மதுரை. (287-290)

என்னும் பாடல் அடிகளில் தினை, நெல், இஞ்சி மஞ்சள் ஆகிய உணவு பொருட்கள் குறித்த விளக்கங்கள் இடம்பெற்றுள்ளன.

### 7.1.4.1.2 கிழங்கு

மண்ணின் அடியில் தோன்றும் உணவுப் பொருட்களில் முக்கியமான உணவுப் பொருள் கிழங்கு. மதுரைக் காஞ்சியில் “கவலை கிழங்கு” குறித்தான செய்தி இடம்பெற்றுள்ளது. மருத நிலச்சிறப்பு குறித்து புலவர் வெளிப்படுத்தும்போது கிழங்கு குறித்த செய்தி இடம்பெற்றுள்ளது. இதனை,

“இரவும் எல்லையும் விளிவு இடன் அறியாது
அவலும் மிசையும் நீர்த் திரள்பு ஈண்டி
கவலை அம் குழம்பின் அருவி ஒலிப்ப”[125] மதுரை. (239-241)

என்னும் பாடல் அடிகளில் கவலை என்னும் கிழங்கு எடுப்பதற்காகத் தோண்டப்பட்டக் குழி என்று புலவர் கூறுகிறார்.

### 7.1.4.1.3 சோறு

சங்க கால மக்களின் அடிப்படையான உணவு வகைகளில் முதன்மையானதாகக் கருதப்படுவது சோறு உணவாகும். சோறு உணவுடன் தசை உணவும், கள் உணவும் ஒருசேரக் கிடைத்து உண்டு மகிழ்ந்ததை,

"அழித்துஆனாக் கொழுந்ததிற்றி
இழித்து ஆனாப் பல சொன்றி
உண்டு ஆனாக் கூர் நறவின்
தின்று ஆனா இன வைகல்
நிலன் எடுக்கல்லா ஒண்பல் வெறுக்கைப்
பயன் அறவு அறியா வளம் கெழு திருநகர்"[126] மதுரை. (211-216)

என்னும் பாடல் அடிகளில் உணவு வகைகளோடு விருந்தோம்பல் சிறப்பும், நாட்டு வளமும் ஒருங்கே கூறப்படுவது குறிப்பிடத்தக்கதொரு நயம் ஆகும்.

### 7.1.4.1.4 பாற்சோறு

முதற் சூல் கொண்ட பெண்கள் தெய்வத்தை வழங்கும் போது பாற்சோறு செய்து உண்டனர். இதனை,

"திவவு மெய்ந் நிறுத்துச் செவ்வழி பண்ணி
குரல் புணர் நல் யாழ் முழவோடு ஒன்றி
நுண் நீர் ஆகுளி இரட்ட பலவுடன்
ஒண் சுடர் விளக்கம் முந்துற மடையொழு"[127] மதுரை. (604-607)

என்னும் பாடல் அடிகளில் மடை என்பது சோற்றைக் குறிப்பதாகும். கொழுக்கட்டை, பணியாரம் போன்ற பதார்த்தங்களையும் மதுரைக் காஞ்சி குறிப்பிட்டுள்ளது.

### 7.1.4.2 அசைவ உணவுகள்

அசைவ உணவுகளாக மீன், இறைச்சி, செம்மறிகிடா, பொரிக்கறி ஆகியவற்றைக் குறிப்பிடுகிறது.

#### 7.1.4.2.1 மீன் உணவு

மதுரைக் காஞ்சியில் பல்வேறு ஓசைகள் குறித்து விளக்கப்படுகின்றன. அப்போது வலிய மீன்களைக் கடலிலிருந்து பிடித்து மருத நிலத்தில் கொண்டு குவிப்பர். இதனை,

"வள்ளை நீக்கி வயமீன் முகந்து

கொள்ளை சாற்றிய கொடுமுடி வலைஞர்

வேழம் பழனத்து நூழிலாட்டு"[128] மதுரை. (255-258)

என்னும் பாடல் அடிகள் உணர்த்துகின்றன.

#### 7.1.4.2.2 இறைச்சி

இறைச்சியின் கொழுப்பை அதிகமாக உட்கொண்ட சங்கத் தமிழர்கள் அவற்றோடு சோறு, கடவ கிழங்கு ஆகியவற்றையும் உண்டனர். பரதவர் என்னும் பிரிவினரே இத்தகைய உணவு முறையைக் கொண்டவர் என்பதை,

"கோழ் ஊஉன் குறைக் கொழுவல்சி

புலவு வில் பொலி கூவை

ஒன்று மொழி ஒலி இருப்பின்

தென் பரதவர் போர் ஏறே"[129] மதுரை. (141-144)

என்னும் பாடல் அடிகள் பரதவ மக்களின் உணவு வளத்தை வெளிப்படுத்துவதாக அமைகிறது.

காஞ்சி என்பது நிலையாமையைக் குறிக்கப் பெறுவதாகும். எனவே அசைவ உணவுகள் குற்ற உணர்வைத் தூண்டும் காரணமாக விளங்குகிறது. மேலும்

அசைவ உணவுகளை உருவாக்கும் புகைகளைவிட வேள்வி செய்து உருவாக்கும் புகையே சிறந்தது என்று புலவர் கூறுவதை,

"களம் தோறும் கள் அரிப்ப
மரம் தோறும் மை வீழ்ப்ப
நிண ஊன் சுட்டு உருக்கு அமைய
நெய் கணிந்து வறை ஆர்ப்ப
குருஉக் குய்ப் புகை மழை மங்குலின்"[130] மதுரை. (753-757)

என்னும் பாடல் அடிகள் மூலம் மாங்குடி மருதனார் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனுக்கு இனிய கவிதை வரிகளில் அறிவுறுத்துகிறார்.

### 7.1.4.3 நீருணவு

நீருணவாக கள், புது நீர் ஆகிய இரண்டு உணவுகளைக் குறிக்கிறது.

#### 7.1.4.3.1 புதுநீர்

மழை நீரை புது நீர் என்று கூறுவர். மழைநீரை மக்கள் உணவாக பயன்படுத்தவில்லை. மாறாக ஆனந்தத்துடன் கொண்டாடினர் என்பதை,

"தளி மழை பொழியும் தண் பரங்குன்றில்
கவி கொள் சும்மை ஒலி கொள் ஆயம்
தழைந்த கோதை தாரொடு பொலிய"[131] மதுரை. (263-265)

என்னும் பாடல் அடிகள் மழைபெய்த விதத்தை நயமாக விளக்குகிறது.

#### 7.1.4.3.2 கள் உணவு

மகளிர் கள் அருந்தி தங்கள் கணவனுடன் ஊடல் கொண்டனர். இதனால் அவர்தம் மாலைகள் அறுந்து விழுந்தன. இதனை,

"மின்னு நிமிர்ந்தனையர் ஆகி நறவு மகிழ்ந்து
மாண் இழை மகளிர் புலந்தனர் பரிந்த
பரூஉக் காழ் ஆரம் சொரிந்த முத்தமொடு"[132] மதுரை. (679-681)

என்னும் பாடல் அடிகள் புலப்படுத்துகின்றன.

ஆற்றுப்படை நூல்களில் விருந்தோம்லப் என்னும் தலைப்பின் கீழ் அரிசி உணவுகள், அதன் பயன்பாடு, அதனை விருந்தினருக்கு உபசரிக்கும் முறை ஆகியன எடுத்துரைக்கப்பட்டுள்ளன. மேலும் மக்கள் உணவில் மாமிச உணவுகளின் இடம் எவ்வாறு பயின்று வந்தன என்பதும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. அதைத் தொடர்ந்து நீராகார உணவுகள் செழிப்பாக பயன்பாட்டில் இருந்தமையும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

## 7.2 தொகுப்புரை

சங்க இலக்கியப் புற நூல்களில் விருந்தோம்பல் பண்பை வெளிப்படுத்தும் பாடல்கள் ஏராளமானவை இடம்பெற்றுள்ளன. அரிசி உணவுகளான சோறு, நீர் உணவுகளான கள், அசைவ உணவுகளான மீன், இறைச்சி ஆகிய உணவுகள் பொதுவாக விருந்தோம்பலில் இடம் பெற்றுள்ளன. அவற்றில் அமைந்த செய்திகளை இவ்வியலில் விரிவாகவும், தெளிவாகவும் எடுத்துரைக்கின்றன. முல்லை, மருதம், நெய்தல், குறிஞ்சி நிலமக்கள் தங்கள் நிலத்தில் விளைகின்ற பொருட்களையும் இயற்கையாய் அனைத்து நிலங்களிலும் அங்கங்கு கிடைக்கின்ற உணவுப் பொருட்களையும் கொண்டே விருந்தோம்பல் படைத்துள்ளனர்.

விலங்குகளை வேட்டையாடி அதன் மூலம் பெறப்பட்ட இறைச்சிகளைக் குழுவாக இருந்து அனைவரும் பங்கிட்டு வரும் விருந்தினருக்குக் கொடுத்தனர். நடுகல் வழிபாடு மூலம் அனைத்து போர் வீரர்களுக்கும் இறைச்சி உணவுகளும் கள்ளுணவும் விருந்தோம்பப்பட்டன. அரிய வனப்பகுதியில் விலங்குகள் தங்கள் வலிமைக்கேற்ப உணவு தேவைக்காக தம்முள் சண்டையிட்டு கொள்ளும். அப்போது அங்கு கிடைக்கும் ஊன் துண்டுகளை வழிபோக்கர் வேக வைத்து உண்பர். இத்தகைய உணவையே உப்பு விற்கும் உமணர்களும் பெற்றிருந்தனர் என்பதை புறநானூறு மூலம் நன்கறியலாம்.

மன்னனும், மக்களும் விருந்தோம்பலின் மூலம் தங்கள் அன்பினை வெளிப்படுத்தியுள்ளனர் என்பதை அறியலாம். சிறந்த உணவையும் பொருள் திரளைப் பலருக்கும் கொடுத்து புகழை விரும்பும் உள்ளத்தினை உடையவர்கள் என்பதை புறநூல்கள் வாயிலாக அறிய முடிகிறது. தலைவி விரும்தோம்பும் முறையில் விருந்து செய்யும் போது அவருடைய முகம் மலர்ந்து மகிழ்ச்சியை வெளிப்படுத்தும் விதமாக அறிய முடிகிறது. விருந்தோம்பில் பகிர்ந்துண்ணும் போது ஒற்றுமையும், செல்வ செழிப்பையும் உணர்த்துகின்றன. மருத நிலத்தில்

உழவர்களின் வேளாண்மையில் அதிக விளைச்சல் மூலம் அவர்கள் விருந்து விழாவாகக் கொண்டாடினர் என்பதை அறிய முடிகிறது.

ஆற்றுப்படை நூல்களில் விருந்தோம்லப் என்னும் தலைப்பின் கீழ் அரிசி உணவுகள், அதன் பயன்பாடு, அதனை விருந்தினருக்கு உபசரிக்கும் முறை ஆகியன எடுத்துரைக்கப்பட்டுள்ளன. மேலும் மக்கள் உணவில் மாமிச உணவுகளின் இடம் எவ்வாறு பயின்று வந்தன என்பதும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. அதைத் தொடர்ந்து நீராகார உணவுகள் செழிப்பாக பயன்பாட்டில் இருந்தமையும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

முகந்தெரியாத பாணர்களுக்கு ஐந்நில மக்களின் உபசரிப்பு ஆற்றுப் படை நூல்கள் மூலம் அறியலாம். புறநானூற்றின் பாடல்களுள் ஆற்றுப்படை துறை சார்ந்த பாடல்களிலும் இப்பண்பைக் காணலாம். விருந்தும் உபசரிப்பும் புற இலக்கியங்கள் தெளிவாக வெளிப்படுத்துகின்றன. உழவர் மக்கள் விருந்தோம்பலில் முதன்மையானவர்களாகத் திகழ்கின்றனர் என்பதில் எவ்வித ஐயமுமில்லை.

## குறிப்புகள்

1. ச.வே.சு., தொல்காப்பியம்-பகுதி 2, ப.23
2. மேலது, ப.27
3. மேலது, ப.28
4. சோ.ந.கந்தசாமி, புறத்திணை வாழ்வியல், ப.23
5. வீரசோழியம், ப.228
6. புறப்பொருள் வெண்பாமலை நூல் 13
7. ச.வே.சு., தொல்காப்பியம்-பகுதி 2, ப.52
8. தொல்காப்பியர், தொல்காப்பியம் கற்பியல் செய்யுள்-13
9. திருவள்ளுவர், திருக்குறள் அதிகாரம் - 9 (1)
10. ச.வே.சு., தொல்காப்பியம்-பகுதி 2, பா.69, ப.29
11. சோ.ந.கந்தசாமி, புறத்திணை வாழ்வியல், ப.104
12. ச.வே.சு., தொல்காப்பியம்-பகுதி-2, ப.35
13. ச.வே.ச., தொல்காப்பியம், ப.389
14. தமிழ்ப் பேரகராதி, ப.125
15. புறநானூறு. கு.வே.பாலசுப்பிரமணியன், (1-3),
16. தொ.பரமசிவன், பண்பாட்டு அசைவுகள், பா.8, ப.15
17. செ.நமசிவாயம், தமிழர் உணவு, ப.55
18. செ.நமசிவாயம், தமிழர் உணவு, ப.1
19. சாமி சிதம்பரனார், பத்துப்பாட்டும் பண்டைத் தமிழரும், ப.4
20. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), புறநானூறு, பா.2 (13-16), ப.4
21. மேலது, பா.6 (13-16), ப.17
22. மேலது, பா.16 (1-5), ப.42
23. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), பதிற்றுப்பத்து, பா.25 (1-5), ப.143
24. தேவநேயப்பாவாணர், பண்டைத்தமிழ் நாகரிகமும் பண்பாடு (ப.33)

25. தா.நீலகண்டப்பிள்ளை, சங்க தமிழர் வாழ்வியல்

26. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), புறநானூறு, பா.14 (12-15), ப.37

27. மேலது, பா.260 (13), ப.500

28. மேலது, பா.250 (4-6), ப.578

29. மேலது, பா.261 (3-4), ப.597

30. மேலது, பா.399 (1-4), ப.876

31. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), பதிற்றுப்பத்து, ப.284 (18-21), பா.43

32. மேலது, பா.48 (14-17), ப.322

33. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), புறநானூறு, பா.10 (7-10), ப.28

34. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), புறநானூறு, பா.34 (9-15), ப.95

35. மேலது, பா.215 (1-5), ப.519

36. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), பதிற்றுப்பத்து, பா.75 (8-12), ப.819

37. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), புறநானூறு, பா.335 (3-6), ப.729

38. மேலது, பா.328 (2-4), ப.715

39. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), பதிற்றுப்பத்து, பா.81 (19-21), ப.556

40. மேலது, பா.89 (3-6), ப.610

41. மேலது, பா.61 (1-3), ப.417

42. மேலது, பா.51 (1-5), ப.347

43. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), புறநானூறு, பா.391 (15-17), ப.854

44. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), பதிற்றுப்பத்து, பா.29 (1-5), ப.166

45. மேலது, பா.30 (10-12), ப.172

46. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), புறநானூறு, பா.277 (1-3), ப.620

47. மேலது, பா.283 (1-3), ப.630

48. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), புறநானூறு, பா.148 (3-6), ப.711

49. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), பதிற்றுப்பத்து, பா.12 (5-12) ப.49

50. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), புறநானூறு, பா.96 (6-8), ப.231
51. மேலது, பா.364 (4-5), ப.783
52. மேலது, பா.366 (17-19), ப.787
53. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), பதிற்றுப்பத்து, பா.24 (19-23), ப.134
54. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), புறநானூறு, பா.379 (8-10), ப.823
55. மேலது, பா.9 (8-11), ப.25
56. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), பதிற்றுப்பத்து, பா.48 (12-15), ப.322
57. மேலது, பா.43 (12-19), ப.284
58. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), புறநானூறு, பா.252 (11-13), ப.58
59. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), பதிற்றுப்பத்து பதிகம், (2-5), ப.11
60. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), புறநானூறு, பா.105 (3-5), ப.252
61. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), பதிற்றுப்பத்து, பா.78 (1-2), ப.534
62. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), புறநானூறு, பா.42 (19-21), ப.117
63. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), பதிற்றுப்பத்து, பா.87 (1-3), ப.595
64. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), புறநானூறு,
    பா.237 (16-19), பக்.535, 536
65. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), பதிற்றுப்பத்து, பா.62 (9-12), ப.424
66. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), புறநானூறு, பா.18 (7-11), ப.44
67. மேலது, பா.283 (1-3), ப.630
68. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), பதிற்றுப்பத்து, பா.22 (12-15), ப.111
69. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), புறநானூறு, பா.70 (9-11), ப.183
70. மேலது, பா.74 (3-7), ப.193
71. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), பதிற்றுப்பத்து, பா.60 (4-8), பக்.408, 409
72. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), புறநானூறு, பா.34, ப.96
73. மேலது, பா.42 (12-17), ப.117

74. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), பதிற்றுப்பத்து, பா.12 (17-19), ப.24

75. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), புறநானூறு, பா.24 (3-6), ப.79

76. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), பதிற்றுப்பத்து, பா.18 (1-3), பக்.71, 72

77. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), புறநானூறு, பா.29 (2-4), ப.233

78. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), பதிற்றுப்பத்து, பா.75 (8-11), ப.519

79. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), புறநானூறு, பா.24 (11-16), ப.69

80. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), பதிற்றுப்பத்து, பா.75 (4-7), ப.518

81. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), புறநானூறு, பா.29 (15-17), ப.83

82. மா.இராசமாணிக்கனார், புறநானூறு, பா.33 (2-4), ப.92

83. மேலது, பா.215 (1-4), ப.519

84. கு.வெ.பாலசுப்பிரமணியன் (ப.ஆ), திருமுருகாற்றுப்படை, (217-220), ப.83

85. உமாதேவி, ஆற்றுப்படையில் அரசர்களின் விருந்தோம்பல், ப.61

86. அ.மாணிக்கனார் (ப.ஆ), பொருநர் ஆற்றுப்படை, (1-3), ப.210

87. அ.மாணிக்கனார் (ப.ஆ), சிறுபாணாற்றுப்படை, (192-195), ப.304

88. அ.மாணிக்கனார் (ப.ஆ), பெரும்பாணாற்றுப்படை, (94-97)

89. அ.மாணிக்கனார் (ப.ஆ), மலைப்படுகடாம், (179-184), ப.526

90. அ.மாணிக்கனார் (ப.ஆ), பொருநர் ஆற்றுப்படை, (14-17), ப.210

91. அ.மாணிக்கனார் (ப.ஆ), மலைப்படுகடாம், (107-113), ப.524

92. அ.மாணிக்கனார் (ப.ஆ), பெரும்பாணாற்றுப்படை, (161-163), ப.419

93. அ.மாணிக்கனார் (ப.ஆ), மலைபடுகடாம், (114-115), ப.524

94. அ.மாணிக்கனார் (ப.ஆ), பெரும்பாணாற்றுப்படை, (243-247), ப.422

95. அ.மாணிக்கனார் (ப.ஆ), திருமுருகாற்றுப்படை, (300-303), ப.86

96. அ.மாணிக்கனார் (ப.ஆ), பொருநர் ஆற்றுப்படை, (189-192), ப.216

97. அ.மாணிக்கனார் (ப.ஆ), பெரும்பாணாற்றுப்படை, (67-68), ப.416

98. அ.மாணிக்கனார் (ப.ஆ), மலைப்படுகடாம், (337-340), ப.532

99. மேலது, (136 - 137), ப.525

100. மேலது, (151 - 152), ப. 525

101. மேலது, (241 - 245), பக். 528, 529

102. அ.மாணிக்கனார் (ப.ஆ), பொருநர் ஆற்றுப்படை, (101-107), ப.213

103. அ.மாணிக்கனார் (ப.ஆ), சிறுபாணாற்றுப்படை, (41-43), ப.298

104. மேலது, (174 - 177), ப.303

105. அ.மாணிக்கனார் (ப.ஆ), பெரும்பாணாற்றுப்படை, (98-100), ப.417

106. மேலது, (274 - 282 அடிகள்), ப.423, 424

107. அ.மாணிக்கனார் (ப.ஆ), மலைபடுகடாம், (274-282), ப.526

108. அ.மாணிக்கனார் (ப.ஆ), பெரும்பணாற்றுப்படை, (341-345), ப.426

109. மேலது, (341-345), ப.423

110. அ.மாணிக்கனார் (ப.ஆ), பெரும்பாணாற்றுப்படை, (253-256), ப.213

111. அ.மாணிக்கனார் (ப.ஆ), பொருநர்ஆற்றுப்படை, (140-142), ப.419

112. அ.மாணிக்கனார் (ப.ஆ), பெரும்பாணாற்றுப்படை, (140-142), ப.419

113. அ.மாணிக்கனார் (ப.ஆ), மலைபடுகடாம், (459-464), ப.536

114. அ.மாணிக்கனார் (ப.ஆ), சிறுபாணாற்றுப்படை, (27-30), ப.298

115. அ.மாணிக்கனார் (ப.ஆ), பெரும்பாணாற்றுப்படை, (355-360), ப.298

116. அ.மாணிக்கனார் (ப.ஆ), மலைபடுகடாம் (511-513), ப.538

117. அ.மாணிக்கனார் (ப.ஆ), பெரும்பணாற்றுப்படை, (156-165), ப. 419

118. அ.மாணிக்கனார் (ப.ஆ), மலைபடுகடாம், (408-412), ப.534, 535

119. மேலது, (291 - 293), ப.530

120. அ.மாணிக்கனார் (ப.ஆ), சிறுபணாற்றுப்படை, (67-70), ப.299

121. அ.மாணிக்கனார் (ப.ஆ), பெரும்பணாற்றுப்படை, (311-313), ப.425

122. அ.மாணிக்கனார் (ப.ஆ), மலைபடுகடாம், (250-252), ப.529

123. அ.மாணிக்கனார் (ப.ஆ), மதுரைகாஞ்சி, (107-110), ப.9

124. மேலது, (287-290), ப.15

125. மேலது, (239-241), பக்.13, 14

126. மேலது, (211-216), பக்.12,13

127. மேலது, (604-607), பக்.26, 27

128. மேலது, (255-258), ப. 14

129. மேலது, (141-144), ப.10

130. மேலது, (753-757), ப.32

131. மேலது, (263-265), ப.14

132. மேலது, (679-681), ப.29

# துணை நூற்பட்டியல்

துணைநூற்பட்டியல் என்னும் பகுதியில் முதன்மை ஆதாரங்கள், துணைமை ஆதாரங்கள் என இரண்டு வகையான ஆதாரங்களை அடிப்படையாக்கி அகர வரிசையில் கொடுக்கப்பட்டுள்ளன.

## அ) முதன்மை ஆதாரங்கள்



| | | | |
|---|---|---|---|
| 1. | சண்முகம் பிள்ளை.மு | - | **குறுந்தொகை,**<br>பதிப்பாசிரியர்,<br>தமிழ்ப் பல்கலைக்கழகம்,<br>தஞ்சாவூர்.<br>மறு அச்சு - 1994 |
| 2. | பாலசுப்பிரமணியன்.கு.வெ | - | **நற்றிணை,**<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,<br>41பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,<br>அம்பத்தூர், சென்னை - 600 098.<br>முதற்பதிப்பு - 2004 |
| 3. | பாலசுப்பிரமணியன்.கு.வெ | - | **பதிற்றுப்பத்து,**<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,<br>41பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,<br>அம்பத்தூர், சென்னை - 600 098.<br>முதற்பதிப்பு - 2004 |
| 4. | பாலசுப்பிரமணியன்.கு.வெ | - | **புறநானூறு,**<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,<br>41பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,<br>அம்பத்தூர், சென்னை - 600 098.<br>முதற்பதிப்பு - 2004 |
| 5. | மாணிக்கனார்.அ | - | **அகநானூறு - 3 தொகுதிகள்**<br>வர்த்தமானன் பதிப்பகம்,<br>ஏ.ஆர்.ஆர். காம்ப்ளெக்ஸ்,<br>141, உஸ்மான் சாலை,<br>தி.நகர், சென்னை-600 017.<br>இரண்டாம் பதிப்பு - 2001. |

| | | | |
|---|---|---|---|
| 6. | மாணிக்கனார்.அ | - | **கலித்தொகை - முதல் பாகம், இரண்டாம் பாகம்**<br>வர்த்தமானன் பதிப்பகம்,<br>ஏ.ஆர்.ஆர். காம்ப்ளெக்ஸ்,<br>141, உஸ்மான் சாலை,<br>தி.நகர், சென்னை - 600 017.<br>முதற்பதிப்பு - 1999. |
| 7. | மாணிக்கனார்.அ | - | **பத்துப்பாட்டு,**<br>வர்த்தமானன் பதிப்பகம்,<br>ஏ.ஆர்.ஆர். காம்ப்ளெக்ஸ்,<br>141, உஸ்மான் சாலை,<br>தி.நகர், சென்னை-600 017.<br>இரண்டாம் பதிப்பு - 2000. |
| 8. | மாணிக்கனார்.அ | - | **பத்துப்பாட்டு (இரண்டாம் தொகுதி)**<br>வர்த்தமானன் பதிப்பகம்,<br>ஏ.ஆர்.ஆர்.காம்ப்ளெக்ஸ்,<br>141, உஸ்மான் சாலை,<br>தி.நகர், சென்னை-600 017.<br>இரண்டாம் பதிப்பு - 2001. |
| 9. | தெட்சிணாமூர்த்தி.அ | - | **ஐங்குறுநூறு - (தொகுதி 1-2)**<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,<br>41பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,<br>அம்பத்தூர், சென்னை - 600 098.<br>முதற்பதிப்பு - 2004 |

## ஆ) துணைமை ஆதாரங்கள்


| | | | |
|---|---|---|---|
| 1. | ச. அகத்தியலிங்கம் | - | **சங்க இலக்கியத்தில் செவ்வியல் பார்வை,**<br>மெய்யப்பன் பதிப்பகம்,<br>53, புதுத் தெரு,<br>சிதம்பரம் - 608 001<br>முதல் பதிப்பகம் 2004,<br>திருவள்ளுவர் ஆண்டு-2035. |
| 2. | அச்சுதன். இரா | - | **குறுந்தொகை காட்டும் வாழ்வியல்,**<br>நாம் தமிழர் பதிப்பகம்<br>சென்னை - 600005<br>முதற்பதிப்பு 2007 |
| 3. | அரங்க சுப்பையா | - | **இலக்கிய திறனாய்வு கொள்கைகள்**<br>பாவை பப்ளிகேசன்<br>சென்னை - 6<br>ஐந்தாம் பதிப்பு - 2007 |
| 4. | அனுராதா.ஆர் | - | **சங்க இலக்கியத்தில் அறக்கருத்துகள் தமிழ் ஆய்வு மன்றம்**<br>சென்னை - 600096<br>முதற்பதிப்பு 2007 |
| 5. | ஆனந்தன். சு | - | **தமிழ் இலக்கிய வரலாறு**<br>தமிழ் இணைப் பேராசிரியர்<br>பெரியார் ஈ.வே.ரா. கல்லூரி<br>திருச்சிராப் பள்ளி - 620 023<br>முதற்பதிப்பு ஜுன் - 2008 |
| 6. | இராகவ ஐய்யங்கார்.மு | - | **நாம் தமிழர் பதிப்பகம்**<br>சென்னை - 5<br>முதற் பதிப்பு - 2010 |
| 7. | இராக ஐய்யங்கார் | - | **நாம் தமிழர் பதிப்பகம்**<br>சென்னை - 5<br>மூன்றாம் பதிப்பு - 2014 |
| 8. | இராச மாணிக்கனார்.மா | - | **பத்துப்பாட்டு ஆராய்ச்சி,**<br>சென்னைப் பல்கலைக்கழகம்<br>1970 |

| | | | |
|---|---|---|---|
| 9. | இராச மாணிக்கனார் | - | **தமிழக கலையும் பண்பாடும்**<br>சாரதாபதிப்பகம்<br>சென்னை - 14<br>முதற் பதிப்பு - 2011 |
| 10. | இராமநாத செட்டியார் | - | **சங்க கால தமிழர் வாழ்வு**<br>வெள்ளையன் பதிப்பு கழகம்<br>இராமநாதபுரம் மாவட்டம்.<br>முதற்பதிப்பு - 1957. |
| 11. | இராமலிங்கம். | - | **சங்க இலக்கியத்தில் வேந்தர்**<br>ஐந்திணை பதிப்பகம்,<br>சென்னை,<br>முதற்பதிப்பு 1987 |
| 12. | இளங்கோவடிகள் | - | **சிலப்பதிகாரம்**<br>அரும்புத உரையும்,<br>அடியார்க்கு நல்லார் உரையும், |
| 13. | உமா தேவி | - | **ஆற்றுப்படையில் அரசர்களின் விருந்தோம்பல்**<br>சங்க இலக்கிய சிந்தனைகள் தொகுதி -II |
| 14. | கண்ணப்பன் முத்து | - | **சங்க இலக்கியத்தில் நெய்தல் நிலம்**<br>அதிபத்தர் பதிப்பகம்<br>சென்னை 20<br>முதற்பதிப்பு 1978 |
| 15. | கந்தசாமி சோ.ந | - | **புறத்திணை வாழ்வியல்**<br>அண்ணாமலைப் பல்கலைக்கழகம்<br>1977 |
| 16. | கந்தையா பிள்ளை | - | **தென்னிந்திய குலங்களும் குடிகளும்**<br>நாம் தமிழர் பதிப்பகம்<br>சென்னை<br>நான்காம் பதிப்பு - 2014 |
| 17. | கலைமகள்.சி | - | **பத்துப்பாட்டின் ஆற்றுப் படைகளில்**<br>மலைபடுகடாம் ஓர் ஆய்வு<br>பக்கிரி அம்மாள் பதிப்பகம்<br>சென்னை.<br>முதற் பதிப்பு-1997 |

| | | | |
|---|---|---|---|
| 18. | குணசேகரன்.சு | - | **புறநானூறு உணர்த்தும் போர் விழுமியங்கள்**<br>அருள் பதிப்பகம்<br>சென்னை-600078<br>முதற்பதிப்பு 2008 |
| 19. | கோமதி நாயகம்.பி (டாக்டர் | | **தென்னிந்திய வரலாறு**<br>மணிவாசப் பதிப்பகம்<br>சென்னை - 108<br>முதற் பதிப்பு - 2003 |
| 20. | கோவிந்தன்.க | - | **சங்க இலக்கிய அரசர் வரிசை தொகுதி-3**<br>கழக வெளியீடு-1951 |
| 21. | சஞ்சீவி.ந | - | **சங்ககாலச் சான்றோர்கள்**<br>பாரி நிலையம்<br>சென்னை<br>முதற்பதிப்பு 1954 |
| 22. | சண்முகசுந்தரம்.க | - | **சங்ககால வேளிர்கள்**<br>நாயகர் கல்வி அறக்கட்டளை<br>சென்னை-600012<br>முதற்விதிப்பு 1997 |
| 23. | சு.சண்முகசுந்தரம் | - | **நாட்டுப்புறவியல்**<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,<br>டி.டி.டிஜ., (அஞ்சல்),<br>தரமணி,<br>சென்னை |
| 24. | சரளா ராசகோபாலன் | - | **சங்க இலக்கியத்தில் தோழி,**<br>ஒளிப்பதிப்பகம்<br>சென்னை<br>முதல்பதிப்பு 1986 |
| 25. | சாமி பி.எல் | - | **சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம்**<br>கழக வெளியீடு<br>முதற்பதிப்பு 1976 |
| 26. | சிதம்பரனார்.சாமி | - | **குறுந்தொகைப் பெருஞ்செல்வம்**<br>இலக்கிய நிலையம்<br>சென்னை-600094<br>முதற்பதிப்பு 1983 |

| | | | |
|---|---|---|---|
| 27. | சாமி. சிதம்பரனார் | - | **எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும்**<br>அறிவு பதிப்பகம்,<br>142, ஜானி ஜான் கான் கோடு<br>ராயப்பேட்டை<br>சென்னை 600 014<br>பதிப்பு 2003 |
| 28. | சாமி சிதம்பரனார் | - | **பத்துப்பாட்டும் பண்டைத் தமிழரும்**<br>அறிவு பதிப்பகம்,<br>142, ஜானி ஜான் கான் கோடு<br>ராயப்பேட்டை<br>சென்னை 600 014<br>பதிப்பு 2003 |
| 29. | சிலம்பு செல்வராசு | - | **தொல்காப்பியத்தில் மணமுறைகள்**<br>காவ்யா பதிப்பகம்,<br>14 முதல் குறுக்குத் தெரு டிரஸ்ட்புரம்,<br>கோடம்பாக்கம்,<br>சென்னை - 600 024<br>முதல் பதிப்பகம் - 2004 |
| 30. | சீநிவாசன்.அ | - | **புறத்திணை,**<br>பி.கே.புக்ஸ்,<br>மதுரை<br>முதற்பதிப்பு-1977 |
| 31. | சீநிவாசன்.கு | - | **சங்க இலக்கியத் தாவரங்கள்**<br>தமிழ்ப் பல்கலைக்கழகம்<br>தஞ்சாவூர்<br>முதற்பதிப்பு-1987 |
| 32. | சீனிவாசன் ச.பொ | - | **பத்துப்பாட்டு பொருளமைவு**<br>சேகர் பதிப்பகம்<br>சென்னை 600078<br>முதற்பதிப்பு 2013 |
| 33. | சுப்பிரமணியன் | - | **சங்ககால சமுதாயம்**<br>என்.சி.பி.எச்<br>முதற்பதிப்பு 1977 |

| | | | |
|---|---|---|---|
| 34 | சுப்பிரமணியன் ந | - | **சங்ககால வாழ்வியல்**<br>சங்கத் தமிழரின் அரசு முறையும்<br>NCBH 600098<br>முதற்பதிப்பு 1986 |
| 35 | ச.வே.சு | - | **தொல்காப்பியம்,**<br>மாணிக்கவாசகர் பதிப்பகம்,<br>31.சிங்கர் தெரு, பாரிமுனை,<br>சென்னை - 600108. |
| 36 | சுந்தரம் மெ | - | **சங்க காலத் தமிழரின் கடல் வணிகம்**<br>184 பாரி நிலையம்<br>சென்னை<br>முதற்பதிப்பு 1978 |
| 37 | சுப்புரெட்டியார் | - | **அகத்திணை கொள்கைகள்**<br>பால் நிலையம்<br>சென்னை - 1<br>முதற் பதிப்பு - 1981 |
| 38 | செல்வராசு.நா | - | **சங்க இலக்கிய மறுவாசிப்பு**<br>சமூகவியல்,<br>மானுடவியல் ஆய்வுகள் காவ்யா பதிப்பகம்<br>முதற்பதிப்பு 2005 |
| 39 | தங்கமாரி | - | **விருந்தோம்பல் பண்பும் தமிழரின் மாண்பும்,**<br>உதவி பேராசிரியர், முதுமலை தமிழ்,<br>வி.இ.செ.நா. கல்லூரி, தன்னாட்சி,<br>விருதுநகர். |
| 40 | துரை அரங்கசாமி | - | **சங்க கால சிறப்புப் பெயர்கள்**<br>பாரி நிலையம்<br>சென்னை - 1<br>முதற் பதிப்பு - 1960 |
| 41 | நமசிவாயம்.சே | - | **தமிழர் உணவு**<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>தரமணி,<br>சென்னை-600113<br>முதற்பதிப்பு-2003 |

| | | | |
|---|---|---|---|
| 42 | நமச்சிவாயம் | - | **தமிழர் உணவு**<br>உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்<br>சென்னை - 113 |
| 43 | நீலகண்டபிள்ளை.தா | - | **சங்கத் தமிழர் வாழ்வியல்**<br>செம்மூதாய் பதிப்பகம்<br>நெ.17, தாகூர் தெரு,<br>எம்.எம்.டி. ஏ. நகர்<br>சிட்லபாக்கம்<br>சென்னை 600 064<br>பதிப்பு - 2012 |
| 44 | பக்தவத்சல பாரதி | - | **பண்பாட்டு மானுடவியல்,**<br>மெய்யப்பன் தமிழாய்வகம்,<br>53, புதுத்தெரு சிதம்பரம் - 608 001<br>டிசம்பர் 2003, திருவள்ளுவர் ஆண்டு - 2033 |
| 45 | பஞ்சாகம்.க | - | **இலக்கியமும் திறனாய்வு கோட்பாட்களும்**<br>அன்னம் பதிப்பகம்<br>தஞ்சாவூர் - 7<br>முதற்பதிப்பு - 2011 |
| 46 | பரமசிவன். தொ | - | **பண்பாட்டு. தொ**<br>பண்பாட்டு அசைவுகள்<br>காலச்சுவடு பதிப்பகம்<br>நாகர்கோவில்.<br>பதிப்பு - 2001 |
| 47 | பழனிச்சாமி | - | **புறநானூற்றில் தமிழர் பண்பாடு வாணி**<br>பதிப்பகம்<br>கோவை 641011<br>முதற்பதிப்பு-1989 |
| 48 | பாலசுப்பிரமணியன் கு.வெ | - | **வாகைத்திணை சங்க இலக்கியத்தில்**<br>மணிவாசகர் பதிப்பகம்<br>சென்னை - 1<br>முதற்பதிப்பு 1989 |

| | | | |
|---|---|---|---|
| 49 | பாலசுப்பிரமனியன்.கு.பா | - | **பண்டைத் தமிழ் சமுதாய வளர்ச்சி**<br>ஒரு மார்னிசிய பார்வை<br>தமிழ் புத்தக ஆலயம்<br>சென்னை - 5<br>முதற்பதிப்பு - 1987 |
| 50 | பாலமுருகன்.வெ | - | **தமிழ் நிகண்டுகள்**<br>மெய்ப்பன் பதிப்பகம்,<br>53, புதுத்தெரு, சிதம்பரம் -608 001<br>நவம்பர் - 2009 |
| 51 | பிள்ளை.கே.கே | - | **தமிழக வரலாறு மக்களும் பண்பாடும்,**<br>உலக தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்,<br>சென்னை.<br>முதல் பதிப்பகம் - 2002 |
| 52 | புலியூர் கேசிகன் | - | **முக்கூடற்பள்ளு,**<br>ஆனந்த் எண்டர்பிரைசஸ்,<br>14/21 நேரு காலனி, 18 வது தெரு,<br>பழவந்தாங்கல், சென்னை - 600 114.<br>2013. |
| 53 | பெருமாள்.அ.கா | - | **உணவுப் பண்பாடு**<br>நியூ செஞ்சூரி புக். ஹவுஸ்(பி) லிட்,<br>41-பி, சிட்கே. இண்டஸ்டிரியல் எஸ்டேட்,<br>அம்பத்தூர், சென்னை - 600 098.<br>முதல் பதிப்பகம் - ஏப்ரல் 2012. |
| 54 | மாதையன் பெ | - | **சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம்**<br>முதற்பதிப்பு 2004<br>என்.சி.பி.எச். சென்னை |
| 55 | மாதையன்.பெ | - | **தமிழ் செவ்வியல் இலக்கியங்களும்**<br>**காலமும் கருத்தும்**<br>நியூ செஞ்சூரி புக் ஹவுஸ்(பி) லிட், 41-பி<br>சிட்கே இண்டஸ்டிரியல் எஸ்டேட்,<br>அம்பத்தூர், சென்னை - 600 098.<br>முதல் பதிப்பகம் ஏப்ரல் - 2012 |

| | | | |
|---|---|---|---|
| 56 | மேரி செல்வம் | - | **தமிழக வரலாறும், பண்பாடும்**<br>மணிவாசப் பதிப்பகம்<br>சென்னை - 108<br>மூன்றாம் பதிப்பு - 2005 |
| 57 | வானமாமலை. நா | - | **தமிழர் வரலாறும் பண்பாடும் ஆராய்ச்சிக் கட்டுரைகள்**<br>நீயூ செஞ்சூரி புக் ஹவுஸ் (பி.லிட்)<br>சென்னை - 600 098<br>பதிப்பு -2007 |
| 58 | வேங்கடசாமி சீனி | - | **பழங்காலத் தமிழர் வாணிகம்**<br>என்.சி.பி.எச்<br>சென்னை 600098<br>முதற்பதிப்பு 1974 |
| 59 | நா. ஸ்டீபன் | - | **தொல்காப்பியம் இனவரைவியலும், கவிதையும்,**<br>நியூ செஞ்சூரி புக் ஹவுஸ்(பி) லிட், 41-பி சிட்கே இண்டஸ்டிரியல் எஸ்டேட்,<br>அம்பத்தூர், சென்னை - 600 098.<br>முதல் பதிப்பகம் ஏப்ரல் - 2012 |

## இ) இலக்கண நூல்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | தொல்காப்பயிம் | - | **தொல்காப்பியம் பொருளதிகாரம்**<br>இளம்பூரணர் உரை செய்யுளியல்<br>கழக வெளியீடு,<br>சென்னை.<br>முதற் பதிப்பு - 1966 |
| 2. | வீரசோழியம் | - | **மூலமும் உரையும் (பதிப்பு ஆசிரியர்)**<br>கா.ர.கோவிந்தராஜ் முதலியார்<br>நியூ செஞ்சூரி புக் ஹவுஸ்<br>41 பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,<br>அம்பத்தூர், சென்னை - 600098 |

**ஈ. அகராதிகள்**

| | | | |
|---|---|---|---|
| 1. | க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி (தமிழ்-தமிழ்-ஆங்கிலம்) | - | **சுப்பிரமணியன் (முதன்மை ஆசிரியர்)** க்ரியா 268, இராயப்பேட்டை ஹைரோடு, சென்னை - 600 014. மறுபதிப்பு - 1992 |
| 2. | கதிரைவேற்பிள்ளை. நா | - | **நா.கதிரைவேற்பிள்ளை,** தமிழ்மொழி அகராதி, ஏசியன் எடுகேஷனல் சர்விஸ், நியு டெல்லி, ஆறாம் பதிப்பு 1981 சி-2/15 எஸ்.டி.ஏ - 110 016 |
| 3. | கந்தையா பிள்ளை ந.சி (தொகுப்பாசிரியர்) | - | **செந்தமிழ் அகராதி,** இரண்டாவது பதிப்பு - 1957, ஆசிரியர் நூற்பதிப்பு கழகம் 3-56, பவழக்காரத் தெரு, சென்னை - 4 |
| 4. | கழகபுலவர்கள் (தொகுப்பாசிரியர்) | - | **கழகத் தமிழ் அகராதி திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்** கழகம் லிமிடெட் சென்னை இரண்டாம் பதிப்பு - 1969 |
| 5. | சந்தியா நடராஜன் பதிப்பாளர் | - | **மதுரைத் தமிழ்ப் பேரகராதி - இரண்டாம் பாகம்,** சந்தியா பதிப்பகம், பிளாட் - ஏ, நியூடெக் வைபவ் - 57 53வது தெரு, அசோக் நகர், சென்னை - 83. முதற்பதிப்பு - 2004 |
| 6. | சந்திரசேகரப் பண்டிதர் சரவண முத்துப்பிள்ளை | - | **யாழ்ப்பாண அகராதி** தமிழ்மண் பதிப்பகம், 2, சிங்கார வேலர் தெரு, தியாகராயநகர், சென்னை - 17. இரண்டாம் பதிப்பு - 2005 |

| | | | |
|---|---|---|---|
| 7. | மதுரைத் தமிழ்ப் பேரகராதி | - | **சென்னை பல்கலைக்கழகம்,**<br>சென்னை.<br>பதிப்பகம் -1956 |
| 8. | வின்சுலோ | - | **வின்சுலோவின் தமிழ்-ஆங்கில அகராதி,**<br>ஏசியன் எடுகேஷனல் சா்விஸ்,<br>நியு டெல்லி 110 016,<br>சி-2/15,<br>எஸ்.டி.ஏ போஸ்ட் பாக்ஸ் - 4534 |
| 9. | விஸ்வநாதபிள்ளை | - | **தமிழ் ஆங்கில அகராதி,**<br>தி மெட்ராஸ் ஸ்கூல் புக் அன்ட் லிட்டரேசா் சொசைட்டி போஸ்ட் பாக்ஸ்,<br>மெட்ராஸ் - 3,<br>7வது பதிப்பு 1963 |

**உ) களஞ்சிய நூற்கள்**

| | | | |
|---|---|---|---|
| 1. | கலைக்களஞ்சியம் | - | **தமிழ் வளா்ச்சியின் கழகம்,**<br>சென்னை கலைக்களஞ்சிய அலுவலகம் பல்கலை கலைக்கழக கட்டிடம்,<br>சென்னை - 5<br>முதற்பதிப்பு - 1958 |
| 2. | சங்க இலக்கிய பொருட் களஞ்சியம்<br>தொகுதி - 1 அ-ஔ<br>தொகுதி - க-கௌ | - | **தமிழ் பல்கலைக்கழகம்,**<br>தஞ்சாவூா் - 613005<br>முதற்பதிப்பு - 1968 |
| 3. | வாழ்வியற் களஞ்சியம் | - | **தமிழ்ப்பல்கலைக் கழகம்,**<br>தஞ்சாவூா் - 613005.<br>முதற்பதிப்பு - 1994. |

## ஆய்வு முடிவுரை

'சங்க இலக்கியங்களின் விருந்தோம்பல்' என்னும் தலைப்பில் ஆய்வு மேற்கொண்டு ஆராய்ந்த போது கீழ்காணும் மெய்மைகளை அறிய முடிகிறது.

தொல்காப்பியத்தை அடுத்து கிடைத்த பனுவல்கள் சங்க இலக்கியங்கள் என்று அழைக்கப்படுகின்றன. இந்த இலக்கியங்கள். எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என்றழைக்கப்படுகின்றன. இவ்விலக்கிய பொருட்களைப் புரிந்து கொள்ள தொல்காப்பியம் என்ற இலக்கண நூல் உதவியாக இருக்கிறது. தொல்காப்பியம் பொருளதிகாரம் இலக்கியத்திற்கான பாடுபொருளை மூன்று பொருட்களாக விரித்து கூறுகிறது. இவற்றுள் முதற்பொருளும், கருப்பொருளும் உணவு பற்றி அறிய பயன்படுபவை ஆகும். தொல்காப்பியம் கருப்பொருளில் உணவைக் கூறினாலும் முதற்பொருளின் சூழல் தேவையாக உள்ளது. இவ்விரண்டையும் அடிப்படையாக்கி சங்க அக இலக்கியங்களில் படிந்துள்ள உணவு குறிப்புகளையும், விருந்தோம்பலையும் ஆய்வு செய்துள்ளது.

சங்க புற இலக்கியங்கள் உணவு மற்றும் விருந்தோம்பல் பற்றி எடுத்துரைக்கும் போது அது நாட்டு வளம், நகர்வளம், மன்னனின் கொடை வளம், ஈகைத் தன்மை ஆகியவற்றை குறிப்பதாகவும், அரசியல் சார்ந்த சிந்தனைகளாகவும் முன்வைக்கிறது. எனவே சங்க கால விருந்தோம்பல் பண்புகள் வாழ்வியல் நடைமுறையாகவும், அரசியல் நெறிமுறைகளாகவும் அமைகின்றன.

மக்கள் ஒன்றாக வாழ்ந்தவுடன் தொடங்கியதே விருந்தோம்பல், விருந்து என்பது உணவு வகைகளைக் குறித்தாலும் ஓம்பல் என்னும் சொல் வரும் விருந்தினர்களைப் பேணிக்காத்தலைக் குறிக்கிறது. குறிஞ்சி நில மக்கள் வேட்டையாடி கிடைத்த பொருட்களை அருகில் உள்ளோர்க்கும் உறவினர்களுக்கும் பகிர்ந்து உண்டனர். வேட்டை மக்கள் அல்லாமல் குறவர்களும் இருந்தனர். குறிஞ்சி திணையின் களவு பாடல்களின் பெரும்பாலும் திணைக் கதிரை பாதுகாக்க

தலைவி பரணில் ஏறிக் காவல் செய்தனர். எனவே வேளாண் செய்ததை இக்காட்சிகள் புலப்படுத்துகின்றன.

உணவிற்கான பண்டமாற்று முறை குறிஞ்சி நிலத்தில் தொடங்குகிறது. தேனையும், கிழங்கையும் பிற நிலத்தவர்க்கு விற்று, மீன், கள் ஆகியவற்றை பெற்றதாக குறிஞ்சி நில கவிதைகள் வெளிப்படுத்துகின்றன. பண்டமாற்று உணவின் மூலம் உணவு குறித்த அறிவு பெருக ஆரம்பித்தது. குறிஞ்சி நில வழிபாட்டில் வேலன் வெறியாட்டு நிகழ்வை தொடர்புபடுத்தி நோக்கும் போது ஆடுகளை பலியிடும் பழக்கம் உள்ளதாக அறிய முடிகிறது. பலியிட்ட உணவுகளை சுற்றத்தாருக்கும், உறவினருக்கும் கொடுத்து பக்தியை வெளிப்படுத்தினர். இங்கு குறிப்பிடத்தக்க செயல் என்னவென்றால், விலங்குகளை வேட்டையாடும் மறவர்கள் வேட்டையாடும் நிகழ்வில் வீர மரணம் எய்தினால் அவருக்கு கள் வைத்து பலியிட்டு உணவு படைத்தல் பழக்கமும் உண்டு என்பதை அறிய முடிகிறது. இங்ஙனம் பலி உணவிற்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்ட நிலம் குறிஞ்சி நிலமாகும் என்பதை அறுதியிட்டு கூறலாம்.

காடும் காடு சார்ந்த நிலமாகிய முல்லை திணையில் வாழ்ந்த இடையர், கோவலர், ஆயர் என்னும் மூன்று வகை மக்கள் வழியாக உணவு உற்பத்திகளைக் குறித்து அறிந்து கொள்ள முடிகிறது. சங்க இலக்கியத்துள் குறிஞ்சி நிலப் பாடல்களில் சிறிதளவில் காணப்பட்ட வேளாண் தொழில் முல்லை திணையில் அதிகமாகக் காணப்படுகிறது என்பது முக்கியமான குறிப்பாகும். தாய்ப்பால் கொடுக்கும் நிகழ்வை ஐங்குறுநூறு முல்லைப்பாடல் தெரிவிக்கிறது. வினையாற்ற சென்ற தலைவன் திரும்பி வரும் பருவம் கண்டு தலைவி விதவிதமான உணவுகளைச் சமைத்துத் தலைவன் வரும்போது விருந்தோம்ப வேண்டும் என்று விரும்புவதை பலப்பாடல்கள் தெரியப்படுத்துகின்றன. முல்லை நிலத்தில் வரகு, கதிர், பயிர் போன்றத் தானியங்களை விளைவித்ததாகக் குறிப்புகள் காணப்படுகின்றன. இங்கு கூறும் முல்லைத்திணையில் முழுமையான காட்டு

நிலத்தை ஐங்குறுநூறு முல்லைப் பாடல்கள் சித்தரித்துக் காட்டவில்லை என்பதாகும்.

பசு இருந்த வீடு செல்வத்திற்கு இணையாக முல்லைத் திணைப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. பசு, ஆடு, எருமை முதலியவைகளின் பால் உற்பத்தியை முல்லை நில மக்கள் பெருக்கினர். உழவர்கள் இறைச்சி, மீன் ஆகிய அசைவ உணவுகளைப் பகிர்ந்து விருந்தோம்பி உண்டதை அகநானூற்று முல்லைத் திணைப்பாடல் சுட்டுகின்றது. முல்லை திணைப்பாடல்களில் வேட்டையாடும் நிகழ்வு முக்கியமான ஒன்றாகும். விலங்குகள் தம்முள் வேட்டையாடி தின்றது போக மீதி இறைச்சியை மக்கள் உண்டனர் என்பதைப் பாடல்கள் விளக்குகின்றன. மான்வேட்டை நிகழ்த்தினர். அரிசி உணவை வேகவைத்து அதனோடு இறைச்சியை உண்பித்து அனைவருக்கும் பங்கிட்டு உண்ட நிகழ்வு விருந்தோம்பும் பண்பின் உச்சத்தைக் காட்டுவதாக அமைகின்றது.

பண்டமாற்று முறையில் கிடைக்கப் பெற்ற உணவு முக்கியமான ஒன்றாகும். முல்லை நில தலைவி நெல்லை விற்று பொருள் வாங்கி செல்வதாக பாடல்கள் பறைசாற்றுகின்றன. நெல், அரிசி போன்ற தானியங்களை ஆன்மீக வழிபாட்டிற்குப் பயன்படுத்தி, அனைவரும் பங்கிட்டுக் கொள்ளும் மரபை முல்லை நிலப்பாடல்கள் தோற்றுவித்தன. யானைக்கும் நெல், அரிசி போன்ற உணவுகளைக் கொடுத்தனர். நெய் விளக்கு குறித்த செய்திகளைக் காணும் போது நெய் முக்கிய உணவு பொருளாக இருந்ததை அறிய முடிகிறது. கற்பின் அடையாளமாக இருக்கும் முல்லை நிலத் தலைவி விருந்தோம்பலின் உறைவிடமாகவும் திகழ்கிறாள். திருமண வீட்டில் விருந்தில் உளுந்தம் சோறு கட்டாயம் இடம் பெற்றதை அறிய முடிகிறது.

ஆயர்கள் நிலத்தை உழுது பண்பட்ட நிலையில் வைத்தனர். அரிசி சோற்றை பலி பொருட்களில் ஒன்றாக வைத்தனர். வைத்த உணவை காகத்திற்கு வழங்கி சுற்றத்தாருக்கும் கொடுத்து தாமும் உண்டனர். மோர், பால், வெண்ணெய்

ஆகிய உணவுப் பொருட்களை ஆயர் மகளிர் விற்றனர். மாங்காய் ஊறுகாய் திங்கும் முறையை முல்லைப் பாடல்கள் வழி அறியலாம்.

வயலும் வயல் சார்ந்த நிலப்பகுதியில் மருத நில உழவர் மக்கள் உழைப்பிற்கேற்ற உணவை மகிழ்ச்சியாக உண்டு வாழ்ந்தனர். மீன் உணவைத் தாமும் உண்டு பிற உழவர்களுக்கும் பகிர்ந்து விருந்தோம்பி உண்டனர். தானியங்கள் பலவற்றை உற்பத்தி செய்தனர். முழுமையான வேளாண் தொழில் செய்யப்பட்ட நிலமாக மருதத் திணைத் திகழ்ந்ததை சங்க இலக்கிய மருதத்திணைப் பாடல்கள் இயம்புகின்றன. நீர் நிலைகள் குறித்து உரைக்கும் போது மீன் பல விலங்குகளுக்கு உணவாகுவதை மருத நில புலவர்கள் தம் கவிதைகளில் படம் பிடித்துக் காட்டியுள்ளனர். கன்று, எருமை ஆகிய விலங்குகளை வேளாண் தொழிலுக்குப் பயன்படுத்தியதை அறியலாம். எனவே இங்கு ஆரம்ப கால வேளாண் தொழிலாக ஏற்றுக் கொள்ளலாம்.

பொய்கை, காவிரி, வைகை ஆகிய ஆற்று நிலைகள் மருதத்திணைப் பாடல்கள் வழி அறியலாம். மருத நிலத்தில் வரும் வறுமையாளர்கள் போதும் என்று கூறும் அளவிற்குத் திரும்ப திரும்ப உண்டனர். பசி இல்லாமல் போவது என்ற கோட்பாட்டோடு மருத நிலமக்கள் தங்கள் உணவை வெளிப்படையாக வைத்திருந்தனர். வயலில் கிடைக்கும் மீன்களை உணவாக உழவர்கள் பயன்படுத்தினர். மருதநில பாணர்குடி பெண் அந்நிலத்தில் விளைந்த நெல்களை விற்று கள், மீன் போன்ற உணவு பொருட்களை வாங்கி தம் இல்லம் சேர்த்து தந்தையோடு உண்ணும் முறையை பாடல்கள் சித்தரிக்கின்றன.

மருதநில வயல்கள் கரும்பு பாத்திகளால் பாதுகாக்கப்பட்டுள்ளதாகவும் கரும்பு ஆலைகள் உள்ளதாகவும் மருத பாடல்கள் தெளிவுபடுத்துகின்றன. வயல் அருகே காணப்படும் நீர் நிலைகளைப் "பழனம்" என்னும் சொல்லால் புலவர்கள் குறித்துள்ளனர். சோறு ஆம்பல் மலரின் இலையில் வைத்து பரிமாறப்பட்டது. கூடவே புளிக்கறி என்னும் குழம்பு வகையும் விருந்தோம்பும் உணவு பொருட்களில்

ஒன்றாக திகழ்ந்தது. சோற்று திரள்களை விருந்தோம்பும் போது கள்ளும் விருந்தோம்பப்பட்டுள்ளதை மருத நில பாடல்கள் வழி அறியலாம். மருத நில மகளிரும் கள் குடித்ததாக பாடல்கள் பதிவுச் செய்துள்ளன. கள்ளின் தெளிவையும் அருந்தினர்.

நீர்நாய் ஆற்றில் வரும் மீன்களை உண்டதாக நிறையப் பாடல்களில் படித்துள்ளனர். இது உள்ளுறையாகக் கூட புலவர் பயன்படுத்தியிருக்கலாம். ஐங்குறுநூற்றின் மருதத்திணைப் பாடல்களில் "வினைக வயலே", "நெல் பல்பொழிக" என்னும் இரண்டுச் சொற்களும் மருத நிலத்தை அடையாளப்படுத்தும் சொல்லாகவே அமைந்துள்ளன. இதன்மூலம் வேளாண் தொழிலுக்கு மருத நில மக்கள் முக்கியத்துவம் கொடுத்துள்ளதாக சங்கப் புலவர் தம் பாடலில் பதிவு செய்துள்ளனர். அனைத்து விதமான உணவுகளையும் விருந்தோம்பல் செய்து சிறக்க வாழ்ந்தனர் என்பதை மருத திணைப் பாடல்களால் அறிந்து கொள்ளலாம். நிறைய வரலாற்று செய்திகளும் மருதத்திணைப் பாடல்களில் பயின்று வந்துள்ளன. வள்ளல்கள் பற்றிக் குறிப்பிடும் போது அவர்களின் ஈகை தன்மை வெளிப்படுவதாக அமைந்துள்ளது. அசைவ உணவு மருததிணையில் குறைவு. பண்டமாற்று முறையில் கிடைக்கப்பெற்ற மீன்களும் வயலிலும், ஆற்றலும் கிடைக்கபெற்ற மீன்களும் உழவர்களுக்கு அசைவ உணவுகளாயின.

கடலும் கடல் சார்ந்த நிலமான நெய்தல் திணையில் மீன் உணவும் கள் அருந்தும் நிலையும் அதிகமாகக் காணப்பட்டது என்று கூறினாலும் தவறில்லை. பாணன், சேர்ப்பன், துறைவன், புலம்பன், வலைஞன் ஆகிய பெயர்கள் பயின்று வந்துள்ளன. இது நெய்த நில மக்களின் தொழில் பெயர் ஆகும். சுறாமீன் உணவு தற்காலம் அதிகம் இல்லை. நெய்தல் திணைப் பாடல்களில் சுறா மீன்களை உண்ணும் பழக்கம் இருந்துள்ளதை அறிந்து கொள்ள முடிகிறது. நெய்தல் நிலத்தில் கிடைக்கும் மீன்களை பரதவ மகளிர் வேற்று நிலத்தில் விற்க செல்வர்.

அங்கு இவர்கள் கொடுக்கும் மீன்கள் குறைவாக இருந்தாலும் அம்மகளிர் பெறும் நெல்லரிசி நிறைவாகவே இருக்கும்.

மீன் பிடித்தலை 'மீன் வேட்டை' என்றே குறிப்பிட்டனர். எனவே நிறைய மீன்களைப் பிடித்து தம் சுற்றத்தாருக்கும், உறவினருக்கும் பங்கிட்டு கொடுத்தனர். மீதியுள்ள மீன்களைத் தமக்கு எடுத்துக் கொண்டு எஞ்சியுள்ள மீன்களை விற்கக் கொடுப்பர். மேலும் நெய்தல் நிலத்தில் விளைந்த உப்புகளையும் பண்டமாற்று முறையில் விற்றனர். பதிலாக வெண்ணெல்லைப் பெற்றனர். மீன் கருவாடு என்னும் சொல் "மீன் காய்தல்" என்னும் சொல்லால் சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்பெற்றுள்ளது. இம்மீன் கருவாடுகளைக் காக்கைகள் கொத்தித் தின்னும். இதனை பரதவ மகளிர்கள் ஓட்டுவர். வறுமை மக்களுக்கு மீன்களைத் தானம் செய்தனர். கருவாடு குழம்பு என்பது நெய்தல் நில இல்லத்தின் சிறந்த உணவாக வருணிக்கப்படுகிறது.

மீன் பிடிக்க செல்லும் பரதவர்கள் காலை நேரத்தில் சோறும் மீனும் சேர்த்து உண்ட பிறகே கடலுக்கு செல்வர். மாலை வேளையில் கள் அருந்துவர். கூடவே சுட்ட மீனை உண்பர். பரதவர்களின் வீடு புல் குடிசையால் வேயப் பெற்றதாகும். கடல் நீர் இருந்தாலும் நீர் உண்ணும் துறை என்று தனியாக ஓர் இடம் சுட்டப் பெறுகிறது. எனவே குடிநீரை இப்பகுதியிலிருந்து எடுத்தனர் என்பது புலனாகிறது. வீட்டில் வரும் விருந்தினருக்கு சோறு வைத்து மீன் குழம்பு, மீன் சுட்டல் ஆகியவற்றை விளம்பினார்கள். இக்காட்சி நெய்த நில மக்களின் விருந்தோம்பும் நிலையைக் காட்சிப்படுத்துகிறது.

மீனின் கொழுப்பை எடுத்து அதனை நெய்யாக்கி விளக்கு பொருத்தும் எண்ணெய்யாக பயன்படுத்தினர். நெய்தல் நில நகரத்தில் மாளிகைக் காணப்பட்டது. அங்கு மீன் கொழுப்பால் தீபம் ஏற்றப்பட்டது. குதிரைக்கு நெல் உணவைக் கொடுத்தனர். பனை நுங்கு குடித்து உண்டனர். இங்ஙனம் உணவு நிலையிலும், விருந்தோம்பல் பண்புகளாலும் நெய்தல் நில மக்கள் வளமோடும்

சிறந்த நாகரீகத் தன்மையோடும், பண்பாட்டோடும் வாழ்ந்து வந்தனா் என்பதை அறிய முடிகிறது.

மணலும் மணல் சாா்ந்த நிலமான பாலைத் திணையில் வாழ்ந்த மக்கள்கள் ஆறலைக் கழ்வா்களாக வருணிக்கப்பட்டாலும் அவா்களிடத்தும் விருந்தோம்பும் பண்பு இருந்துள்ளதை அறியமுடிகிறது. ஐங்குறுநூறு காட்டும் பாலை நிலம் என்பது குறிஞ்சியும் முல்லையும் சோ்ந்த இடமாக காட்சியளிக்கிறது. இயற்கையால் கிடைத்த காய் கனிகளை ஆரலைக் கள்வா்களின் உணவாயின. ஆநிரைகளை உண்பதற்காக குடிநீரை உற்பத்தி செய்தனா்.

காட்டில் செந்நாய் தன் பெண் நாய்களுக்கு வேண்டி விலங்குகளை வேட்டையாடும் மீதியிருக்கும் இறைச்சியை பாலை நில மக்கள் எடுத்து தம் சுற்றத்தாருக்கும் கொடுத்து உண்டனா். பாலை நிலத்தில் வாழும் எயினா் மக்கள் முள்ளம் பன்றியின் இறைச்சியை உணவாக உண்டனா். நெல்லிக்காய்களை அதிகமாக உண்டனா். காரணம் வறண்ட நிலமானதால் நீா் தாகம் எடுப்பதே ஆகும். பாலை நில கவிதைகளின் சிறப்பு என்பது விலங்குகள் தம் இணையான பெண் விலங்குகளுக்கு உணவு தேடி கொடுக்கும் சூழல். இது விலங்குகளுக்கும் விருந்தோம்பும் பண்பு உண்டு என்பதை வெளிக்காட்டுகிறது மட்டுமின்றி சங்க இலக்கிய மரபுகளில் ஒன்றான விலங்குகளைக் கனமாந்தராக நோக்கும் நிலையும் எண்ணப்படுகிறது. இந்நிலையில் இக்காட்சிகள் தலைவிக்கு வேண்டி தலைவன் உணவு ஈட்டுவதற்கு பொருள் தேடி செல்கிறான் என்று உணா்த்துகிறது.

கரும்பு, பயிா் போன்ற விளைப்பொருட்கள் பாலை நில கவிதையில் உவமைகளாகப் பயன்பட்டுள்ளதை அறியமுடிகிறது. காளிக்குப் பலிகொடுக்கும் செய்தியையும் பாலைத் திணைப் பாடல்கள் வெளிப்படுத்துகிறது. தலைவி தலைவனுடன் நெல்லிக்காய் உண்டலும், கலங்கிய நீரை குடித்தலும் கூறியுள்ளதால் அக்கால உணவு வகைகளுள் இதுவும் ஒன்றாயிற்று என்பதை அறியலாம். பாலை நிலத்தில் காணும் இறைச்சி துண்டுகளைப் பருந்துகள் கொத்தி

உண்ணும். செந்நெற்சோறு, நெய் ஆகியவற்றைப் பாலை நில மக்கள் உண்டதாக குறுந்தொகைப் பாடல் ஒன்று தெரிவிக்கிறது. நீர் கிடைக்காத நேரத்தில் நீரை கள்ளிற்கு உவமையாக புலவர் கூறுகிறார். பாலை கலியில் விருந்தோம்பும் பண்பு அறிவுறுத்தப்படுகிறது. இங்ஙனம் பாலை நிலத்தில் கிடைத்த உணவுகளைத் தாமே உண்ணாமல் பிறருக்கும், வறியவருக்கும் கொடுத்து வாழும் தன்மையைக் கொண்டிருந்தனர் என்பதை அறியலாம்.

அகத்திணையில் விருந்தோம்பல் இல்லற பண்புகளில் தலையாய கடமையாக விளங்கிற்று என்றால் புறத்திணையில் குடிமக்களின் அன்பாகவும் அரசர்களின் ஈகையாகவும் மாறியது என்று கூறலாம். அகத்திணைகள் உணவை, விருந்தோம்பலை வீட்டிற்கு செல்வமாக உரைக்கப்பட்டது என்றால் புறத்திணைகள் நாட்டுவளத்தை வெளிப்படுத்துவதாக அமைகிறது. இறைச்சி, துவையல், கறி, சோறு ஆகிய உணவு வகைகள் விருந்தோம்பப்பட்டன என்று புறநானூறு இலக்கியம் தெரிவிக்கின்றது. இவ்விலக்கியம் விளைப் பொருட்களைக் குறித்தும் தெரிவிக்கின்றது. கரும்பு, பழங்கள், அரிசி, நெற்கதிர் ஆகிய விளைப்பொருட்களைக் குறிப்பிடுகிறது. பெருஞ்சோற்று விழா போல் புறப்பாடல் சிறுஞ்சோற்று விழாவினைக் குறிப்பிடுகிறது.

முயல், செம்மறி, ஆட்டின் இறைச்சி, புறாவின் முட்டை, மலங்கு மீன், வாளை மீன், உடும்பின் இறைச்சி அமைகின்றது. ஆரல் மீன், கயல்மீன் ஆகிய அசைவ உணவுகளைத் தமக்கும் பிறருக்கும் சுற்றத்தாருக்கும் விருந்தோம்பி வாழ்ந்ததாகப் புறஇலக்கியங்கள் தெரிவிக்கின்றன. பழங்களும், கிழங்கு வகைகளும் முக்கிய இடத்தை பிடித்தன. கிழங்குகளைச் சுட்டு விருந்தினர்க்குக் கொடுத்தனர். சர்க்கரையால் செய்த பண்ட வகைகளை பதிற்றுப் பத்து தெரிவிக்கிறது. கள் விருந்தோம்பலின் முக்கிய இடத்தைப் பெற்றது. மன்னர்கள் விதவிதமான கள்ளைப் புலவர் மற்றும் வறியவருக்கும் அளித்தனர். கள் உணவு புலவர்கள் மத்தியிலும் வரவேற்கத்தக்க நீர் உணவாகவே கருதப்பட்டது.

சங்க காலத் தமிழர்களின் விருந்தோம்பும் அடையாளமாகத் திகழப்படும் இலக்கியம் ஆற்றுப்படை இலக்கியங்கள் என்று கூறினும் ஐயமில்லை. ஐவகை நிலங்களின் மரபோடு படைக்கப்பட்ட இவ்விலக்கியங்கள் திணைச் சார்ந்த உணவுகளைப் பதிவுச் செய்வதாக அமைகிறது. புலவர்கள், பாணர்கள், மக்களும், மன்னர்களும் வரவேற்கும் நிகழ்வை அழகாக ஆற்றுப்படை நூல்கள் சித்திரப்படுத்துகின்றன.

திணை, அரிசி, மூங்கில் அரிசி, ஆட்டுக் குட்டியை அறுத்தல், பொரி, பலா சுளைகள் முதலிய உணவுப்பொருட்கள் வழிபாடு நிகழ்த்தும் உணவுப் பொருட்களில் இடம் பிடித்து சுற்றத்தாருக்கு விருந்தோம்பப்பட்டது. விழாக்களின் போது சோறு முக்கிய உணவுப்பொருளாக விளங்கியது. திணை அரிசியும் பயன்படுத்தப்பட்டது. மகளிர் கள் உண்டு மகிழ்ந்தனர். விருந்தோம்பலில் இறைச்சி உணவுகளும் பயன்படுத்தப்பட்டன. பலி உணவில் சோறு முக்கிய இடத்தைப் பிடித்தது. நுங்கு நீர், பனை நீர், கரும்பு சாறு இவை முந்நீர் என்று அழைக்கப்பட்டது. நீர் உண்ணும் துறை என்ற பகுதியில் மக்கள் புழங்குவதற்காக நீரைப் பெற்றுக் கொண்டனர். குறுநில மன்னர்களின் ஈகை, கொடைத் தன்மைகளை ஆற்றுப்படை நூல்கள் முன்வைப்பதன் மூலம் விருந்தோம்பல் பண்பு முக்கிய பண்பாகப் போற்றப்பட்டுள்ளதை அறியலாம். தயிர், வெண்ணெய், மோர் முதலிய பால் உணவுகளின் உணவை விருந்தோம்பலின் போது உட்கொள்ளப்பட்டது. தேன் மற்றொரு நீர் உணவு ஆகும். வழிபாட்டு முறையில் தேன் உணவிற்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது.

‘விருந்து’ என்னும் சொல்லுக்கு ‘புதுமை’ என்னும் அகராதி விளக்கம் தருகிறது. புதுமை என்றால் முன்பின் தெரியாதவர்களுக்கு உணவு வழங்குதல் என்று பொருள். சங்க இலக்கியங்களில் தலைவி, தலைவனுக்கும், குதிரைக்கும் அளிக்கும் உணவு விருந்து என்று கூறப்பட்டுள்ளதை காண முடிகின்றது. போர்க்காலங்களில் அரசன் வீரர்களுக்கும், தலைவி சுற்றத்தாருக்கும், உணவும்,

உணவுப் பொருட்களும் அளிப்பதை விருந்து என்றும் அழைக்கப்படுகின்றது. விருந்து என்பது புதுமை என்னும் விளக்கத்திற்கு மாறாக தெரிந்த உறவினர்களுக்கும் உணவு அளிப்பதை விருந்து என்று அறிய முடிகின்றது. கிறிஸ்தவர்கள் அசனவிழாவில், அனைவருக்கும் விருந்தளிப்பதை அறியமுடிகின்றது. தெரியாதவர்களுக்கு மட்டுமல்லாமல், தெரிந்தவர்களுக்கும் உணவு அளிப்பதை விருந்து என்றே கொள்ளலாம்.

பழந்தமிழர்களின் வாழ்க்கையில் விருந்தோம்பும் முறைகள் சிறப்புற்றிருந்தன. அனைத்துத் திணைக் கவிதைகளும் விருந்தோம்பல் முறையைச் சிறப்பித்து பதிவு செய்துள்ளன. புலவர்கள் மட்டும் விருந்து பெற்றுக் கொள்ளும் போது விருந்து செய்யும் மக்களைப் போற்றுவதாகக் காணப்படுகிறது. புலவர்கள் அரண்மனை மாடங்களிலிருந்து செல்லும் போது யானைகள், தேர்கள் போன்ற பரிசில் பொருட்கள் கொடுத்தனர். எனவே சங்க இலக்கியங்கள் விருந்தோம்பல் பண்பை உரிய முறையில் பதிவுச் செய்துள்ளது என்பதை எவ்வித ஐயமுமின்றி கூறலாம்.

ஆடவர், மகளிர் ஆடை, அணிகலன்கள் பற்றி விரிவாக ஆராய்ச்சி மேற்கொள்ளலாம். புறத்திணையில் பாடல்களில் போர்திறன், போர்க் கருவிகள் குறித்து ஆராய்ச்சி மேற்கொள்ளலாம்.

கள் பற்றிய செய்திகளை ஆராய்ச்சியாக மேற்கொள்ளலாம்.